# உரிமையுரை

ஆங்கிலக்கல்வியால் ஹிந்து சாஸ்திரங்களில் விசுவாசமும் அறிவுமிழந்து சர்வ சந்தேகியாய்த் திரிந்துவந்த புன்மை அறிவுடையவனான என்னை அருட்கண்ணாற் பார்த்து, எனது அகங்காரத்தை இடித்துத்தள்ளி, இல்லற வாழ்க்கையைச் சரிவர நடத்து முறைமையால் விளையும் துறவறத்தின் இச்சையாகிய விதையை என்னுள்ளத்திற் பதித்து, பக்தி ஞான வைராக்கியங்கள் நிரம்பப்பொருந்துந் தன்மையதாகிய வேதாந்த ஞானத்தைக் கசடற எனக்குப் புகட்டியவரும் எனது ஆருயிருக்கோருயிராய் இருந்து வருபவருமாகிய ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்த சுவாமிகளுடைய திருப்பாத கமலங்களுக்கு இம்மொழிபெயர்ப்பு நூலை வினயத்துடனும், நன்றியறிதலுடனும், வந்தன வழிபாடுகளுடனும் உரிமையாக்குகின்றேன்.

பெ மாணிக்கசாமி

26-5

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 1 | சம்பரதாயத்தாரும் | சம்பிரதாயத்தாரும் |
| 5 | 20 | விடை:— | வினா:— |
| ,, | 21 | வினா:— | விடை:— |
| ,, | 26 | தாத்மிய | தாதாத்மிய |
| 7 | 8 | மனிதனுக்குச் | மனிதனுக்கு |
| 12 | 14 | ஓழித்தல் | ஒழித்தல் |
| 15 | 2 | சித்தாத்தங்களுக்கு | சித்தாந்தங்களுக்கு |
| ,, | 15 | யென்னும் | யென்றும் |
| 22 | 5 | தபவுசெய்து | தபவுசெய்து |
| 25 | 25 | சாகாரகக்கடவுள் | சாகாரக்கடவுள் |
| 30 | 21 | அந்தச் தேர்ச்சி | அந்தத் தேர்ச்சி |
| 35 | 7 | இத்தன்மைதயா | இத்தன்மையதா |
| ,, | 14 | மதனின் | மனிதன் |
| 38 | 9 | 23 | 24 |
| ,, | 26 | 25 | 24 |
| 41 | 9 | பீரகிருதியோடு | பிரகிருதியோடு |
| 42 | 10 | கர்த்துருத்துவபம் | கர்த்துருத்துவம் |
| ,, | 11 | கர்த்துருத்துவயம் | கர்த்துருத்துவம் |
| 44 | 25 | ருத்திரன்னென்பவர் | ருத்திரனென்பவர் |
| 45 | 19 | ருதிரன் | ருத்திரன் |
| 54 | 14 | பலபாண்டமாகிய | மலபாண்டமாகிய |
| 57 | 24 | பண்டாணி | பட்டாணி |
| 69 | 27 | ஓம் | ஓம் |
| 71 | 10 | முதலியவற்றைப் | முதலியவற்றைச் |
| 73 | 15 | முயற்சிசெய்ய | முயற்சிசெய்; |
| 74 | 16 | புதியனவாகப் | புதியனவாகக் |
| 77 | 8 | இரும்பிடமாகக் | இருப்பிடமாகக் |

| | | | |
|---|---|---|---|
| 79 | 24 | இழுகச் | இழுக்கச் |
| 85 | 14 | நமஸ்கரிகிறேன் | நமஸ்கரிக்கிறேன் |
| 86 | 2 | பரப்பிரறைமத்தைப் | பரப்பிரஹ்மத்தைப் |
| 87 | 12 | விளங்குகிறன்து | விளங்குகின்றது |
| ,, | 24 | ஞாணக்கண்ணை | ஞானக்கண்ணை |
| 88 | 4 | பரப்பிரஹ்வம் | பரப்பிரஹ்மம் |
| ,, | 21 | உணர்கின்றனே | உணர்கின்ருனே |
| 91 | 16 | டிருக்தான் | டிருந்தான் |
| ,, | 20 | சிக்கனமாசச் | சிக்கனமாகச் |
| 96 | 1 | பரமபருஷரே | பரமபுருஷரே |
| 106 | 21 | வேறல்லென்பது | வேறல்லவென்பது. |
| 114 | 24 | நிஜஸ்ரூபவம் | நிஜஸ்வரூபம் |
| 119 | 6 | ஒற்றிச் | ஒத்திச் |
| 121 | 17 | பெறப்படுகிறன்து | பெறப்படுகின்றது |
| 122 | 9 | ஜீவகனுடைய | ஜீவனுடைய |
| ,, | 15 | பேராடிக்கொண்டு | போராடிக்கொண்டு |
| 123 | 17 | என | என் |
| 133 | 3 | நிட்டயதில் | நிட்ண்டயதில் |
| 134 | 8 | நோக்கங்களுடம | நோக்கங்களும் |
| 135 | 4 | உலகங்ளில் | உலகங்களில் |
| ,, | 13 | மார்கத்தைக் | மார்க்கத்தைக் |
| 137 | 10 | சற்கற்பம் | சங்கற்பம் |
| 139 | 20 | வறையறை | வரையறை |
| 144 | 20 | ஸ்ரீகிருஷ்ணணைப் | ஸ்ரீகிருஷ்ணனைப் |
| 147 | 6 | குழ்ந்தைப் | குழந்தைப் |
| 152 | 19 | உபகரர | உபகார |
| ,, | 26 | ஐனிக்கும் | ஜனிக்கும் |
| 154 | 21 | உணடாகிறது | உண்டாகிறது |
| 160 | 28 | ஞானதைப் | ஞானத்தைப் |

---

## பொருளடக்கம்

நிபாசம்—நான்குவித முக்தியும் அவற்றின் விவரணமும்—பிரபுத்த நிலையென்பது யாது?—துவைத மார்க்கம் அத்வைத மார்க்கம் ஆகிய இவை இரண்டு மார்க்கங்களும் மேன்மையானவையே; ஒன்றைவிட்டு மற்றொன்றைக் கைப்பற்ற வேண்டியது அனுவசியகம்.



பக்திமார்க்கம் எல்லாருக்கும் எக்காலத்தும் பொருத்தமானது—கடவுளிடம் எவ்வித அன்பு கொள்ளவேண்டும்?—ஸ்ரீ இராமகிருஷ்ணர் எதைக்கடவுளுடைய பிரதாபமென்கின்றார்?—கடவுளை அடையும் மார்க்கம்—பக்தர்களுடைய அன்புக்காக ஈஸ்வரன் உருவத்தோடு காக்ஷி தந்து அருள்கின்றார்—பக்தனுக்காக ஈஸ்வரன் என்ன வேண்டுமென்றாலும் செய்வார்—கடவுளிடம் யாதாவதொரு சம்பந்தத்தைக் கற்பித்துக் கொள்ளல்வேண்டும்—உண்மை அன்பென்பது யாது?—நிஜபக்தன் ஞானியைவிடச் சிறந்தவன்—உண்மைப் பக்தனுவதெப்படி?—பராபக்தி—விக்ரக ஆராதனையின் இலக்ஷணமும் சிரேஷ்டமும்—ஈஸ்வரன் தனது மாயா சக்தியால் அருவமாகவும் உருவமாகவும் இருக்கவல்லவர்—ஹிந்துக்கள் கடவுளிடம் பிச்சை யேற்க வேண்டுமென்னுங் கருத்துடையவர்களன்று—கௌரங்கர், நாயன்மார்கள், ஆழ்வாராதிகள், ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் முதலியவர்கள் உருவ உபாசனையினால் ஈஸ்வரனை சாக்ஷாத்கரித்தவர்கள்—ஆலயங்களில் விக்கிரகங்களை வைத்திருப்பதன் கருத்து—கடவுளை எப்பொழுதும் மறவாதிருப்பதற்கு உபாயங்கள்.

---

# மதிப்புரை

"ஜகஜீவபர விளக்க வினுவிடை" என்னும் இம் மொழிபெயர்ப்பு நூல் முதனூற் கருத்தொடு மாறுகொள்ளாத ஒரு வழிநூலாக அமைந்திருக்கின்றது. இதன் முதனூல் ஆங்கிலமொழியில் உள்ளது; "The universe and man" என்னும் பெயர் பூண்டது; தத்துவ ஆராய்ச்சி செய்வாருக்கு இன்றியமையாப் பலப்பல உண்மைகளைத் தெரிவுபெற விளக்குவது. இத்தகைய சிறப்புவாய்ந்த முதனூலை இயற்றினுர் யாவரோவெனின், உலகுய்யத் திருவவதாரஞ் செய்தருளிய ஞானசற்குரு மூர்த்தியாகிய ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ச தேவரது திவ்வியாநுக்கிரகம் பெற்ற அரும் பெருஞ்சீடராகிய பூஜ்யபாத ஸ்ரீமத் இராமகிருஷ்ணாநந்த சுவாமிகள் என்னுந் திருப்பெயர்பூண்ட பெரியார் ஆவர்.

அத்தகைய பெரியாரோடு கலந்து பழகிச் சாஸ்திர ஆராய்ச்சி செய்தவரும், அவருடைய திருவடிகளைச் சிர மேற்கொண்ட மெய்யன்பருமாகிய ஸ்ரீமாந் பெ. மாணிக்க சாமி முதலியார், முதனூற்கருத்தைச் சந்தேக விபரீதமறத் தெரிந்துகொண்டு, இவ்வழி நூலை வினுவிடையுருவமாக அமைத்துத் தமிழுலகிற்கு உதவினுர். இங்ஙனஞ் செய்தமையினுலே, இவர் தமிழுலகிற்குப் பெரியதொரு உபகாரம் புரிந்தவராயினுர். அவதார புருஷராகிய பரமஹம்ச தேவரும், அவருடைய சீடர்களும் இயம்பிய ஞானநன்மொழியமுதத்தை யுண்ணுதற்குத் தமிழகம் விரும்பிநிற்கின்றது.

ஆதலினாலே, இத்தகைய மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழ் நாட்டிலுள்ள முமுக்ஷுக்களாலும், கல்விமான்களாலும், பொது ஜனங்களாலும் உவந்தேற்றுக் கொள்ளப்படுகின்றன.

நுண்ணிய விஷயங்களை இலகுவான உரைநடையிற் றெளிவுபொருந்தக் கூறுகின்ற முதனூலேபோல, இம்மொழி பெயர்ப்புநூலும் இலகுவான நடையில் எழுதப்பட்டு யாவர்க்கும் பயன்தரும் நீர்மையதாயிருக்கின்றது. இதற்கு அமைந்திருக்கிற பாயிரமும், சிறப்புப்பாயிரமும் ஸ்ரீராம கிருஷ்ண சங்கத்தினது நோக்கங்களையும் கருத்துக்களையும், ஸ்ரீமத் இராம கிருஷ்ணாநந்த சுவாமிகளுடைய பரிசுத்தம் பொருந்திய துறவு வாழ்க்கையையும், முறையே கூறுகின்றன. நூலின் முதல் அத்தியாயமானது பரமஹம்ச தேவர் பூவுலகத்தாருக்குச் செயலாலும் மொழியாலும் உணர்த்தியருளிய திருநெறிமரபினை முறையாகக் கூறுகின்றது.

இந்நூலானது முதனூலைப்போலவே பாஷ்யகாரர் மூவருடைய ஒற்றுமை வேற்றுமைகளைத் தெளிவுறக்காட்டி உண்மையை நிச்சயப்படுத்துந் தகைமை சான்றது. தற்காலத்திலே, மேலைத்தேச விஞ்ஞான சாஸ்திரிகளாலும், தத்துவ சாஸ்திரிகளாலும் ஆராய்ந்தறியப்படுவனவாகிய முடிவுகள் வேதாந்த ஞான சாஸ்திரங்களினுள்ளே, உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அமைந்து நிற்கும் இயல்பினை இந்நூலைக்கற்றலினா லறியலாகும். இந்நூலை எழுதி உதவிய முதலியாரவர்களுக்குக் குருதேவருடைய திருவருள்என்றும் உளதாகுக.

ஸ்ரீராமகிருஷ்ண ஆச்சிரமம்
திருக்கோண மாமலை
7—11—26.

விபுலாநந்த சுவாமி

# பாயிரம்

## ஸ்ரீராம கிருஷ்ண மிஷனின் நோக்கங்களும் கருத்துக்களும்

நமது இந்தியா தேசம் ஆங்கிலேயர் துரைத்தனத்தின் கீழ் வந்தபிறகு அநேகவிதக் கிளர்ச்சிகள் அதில் தோன்றியுள்ளன:—இராஜாங்க விஷயத்தின் பொருட்டும் இந்தியர்களின் அபிவிர்த்தியின் பொருட்டும் பிரஜைகளுக்குக் கல்வி புகட்டுதல் அத்யாவசியகமென்பது இராஜாங்கத்தார்க்குத் தோன்றியது; அதனால், அவர்கள் கல்விச்சாலைகள் ஏற்படுத்தினர். இக்கல்விச்சாலைகளில் கல்வியை ஆங்கில பாஷையில் போதித்தல் வேண்டுமென்று எப்பொழுது ஆங்கில துரைத்தனத்தார் கட்டளையிட்டனரோ அப்பொழுது முதல் ஹிந்துக்களுக்கு மத அபிமானம் குன்றத் தலைப்பட்டது. "ஒரு பையனை இவ்விதப் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தால், அவன் முதலில் கற்றுக் கொள்வது என்னவென்றால், அது 'என் தகப்பன் ஒரு முட்டாள்' என்பதாம்; 'என் பாட்டன் ஒரு பைத்தியக்காரன்' என்பதை இரண்டாவதாகக் கற்றுக்கொள்ளுகிறான்; மூன்றாவதாக அவன் கற்றுக்கொள்வது என்னவென்றால், அது 'எனது குருமார்கள் யாவரும் மித்தியாசாரர்கள் அஃதாவது நினைப்பதொன்றும் பேசுவது வேறாகவும் இருக்குந் தன்மையர்கள்' என்பதாம்; நான்காவதாக 'சாஸ்திரங்கள் யாவும் பொய்' என்று கற்றுக்கொள்ளுகிறான்" என்று ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் கூறியிருக்கின்றார். அஃதா

வது ஆங்கில துரைத்தனத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டுள்ள பள்ளிக்கூடங்களிலும் சர்வகலாசாலைகளிலும், ஆங்கில துரைத்தனத்தாரின் பொருளுதவியைக் கொண்டு ஜனங்களால் நடத்தப்பட்டுவரும் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும், போதிக்கும் கல்வியானது தேசாபிமானத்தையும் மதாபிமானத்தையும் குன்றச்செய்யும் தன்மையுள்ளதாய் இருக்கின்றதேயன்றி, இவைகளை ஊட்டி வளர்க்கக் கூடியதாயில்லை. நமது தேசத்தார் வயிற்றுப்பிழைப்பிற்காக ஆங்கிலக் கல்வியைக் கற்கத் தலைப்பட்டனரேயன்றி, கல்வியைக் கல்விக்காகக் கற்றல் வேண்டுமென்பதை மறந்துவிட்டனர். கல்கத்தா நகரமானது அக்காலத்தில் இந்தியாக் கவர்ன்மென்ட்டின் தலைநகராயிருந்தபடியால், ஆங்கிலபாஷையானது அவ்விடத்திலும் அந்நகரத்தைத்தலைநகராகக்கொண்டிருந்த வங்காள நாட்டிலும் அதிகமாகச் செழித்தோங்கி விவேகிகள் மத்தியில் பரவிற்று. ஆங்கிலபாஷையில் தேர்ச்சியடைந்தவருள் பெரும்பான்மையோர் தங்கள் குலாசார வழக்கங்களை நீக்கி, மேல் நாட்டு அஃதாவது ஐரோப்பியருடைய நடை உடை பாவனைகளைக் கைக்கொள்ளத் தலைப்பட்டனர்; இதுவேயுமன்றி ஹிந்து மதத்தில் நம்பிக்கையில்லாதவராய் அதனைக் கண்டிக்கவும் துணிவுற்றனர். அதனால், அவர்களுள் சிலர் நாஸ்திகர்களாகவும், சிலர் கிருஸ்துவர்களாகவும், சிலர்வேறு மதஸ்தர்களாகவும் திரிபடைந்தனர். ஆங்கில பாஷையைக் கற்காதவனை அநாகரிகனென்றும் மூடனென்றும் வங்காள தேசத்திலிருந்த ஆங்கிலம் கற்ற ஹிந்துக்கள் பேசி வந்தனர். இவ்வித மாறுதல்கள் ஏனைய மாகாணங்களிலும் மெல்ல மெல்ல உண்டாகத் தலைப் பட்டன. அதனால் ஹிந்து மதம் நமது நாட்டைவிட் டொழிவதுபோ லிருந்தது.

ஹிந்துக்கள் இவ்விதம் தத்தளித்துக்கொண்டிருக்கையில் 1836 வருஷத்தில் கல்கத்தாவிற்கடுத்துள்ள காமர்பகூர் என்னும் ஒரு சிறுகிராமத்திலே, பயபக்தி நிறைந்த எளிய ஒரு பிராமண குலத்திலே, ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் அவதரித்தார். இவர் குழந்தைப் பருவத்திலேயே அதிக அற்புதச் செயல்களைக் காட்டி வளர்ந்து வந்தனர்; அங்ஙனம் வளர்ந்து வருநாளில், தக்கவயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்டார்; கல்வி கற்பதில் மிகப்பராமுகமாக விருந்தனர்; அதனால், தமது பெற்றோர்களாலும் ரக்ஷகர்களாலும் பன்முறை கண்டிக்கப் பட்டனர்; கண்டிக்கப் பட்டும் கல்வியில் மனஞ் செலுத்தா திருந்தார். அக் காலத்தில் கல்வியில் தேர்ச்சியடைந்தோருடைய வாழ்க்கையை இவர் உற்று நோக்கச் சந்தர்ப்பங்கள் நேரிட்டன; அப்போது அவர் அன்னோர் கற்ற கல்வியாவும் “சாண் கும்பியின் பொருட்டாம்” என்று கண்டனர்; அக்கணமே பள்ளிக்கூடம் போதலைத் தவிர்ந்தார். அப்போது அவர்க்கு எவரெவர் என்னென்னமோ சொல்லினர்; ஆரார் என்னென்னமோ போதித்தனர்; அவை அவரது மனத்தை மாற்ற அசக்தமாயின. அவர் “புருஷார்த்தத்தைத் தரத்தக்கதெதுவோ அதையே நான் நாடுவேன்” என்னும் தீர்மானத்துடன் அசையாதிருந்தனர். இதன்பின்னர் இவர் குடும்ப சம்ரக்ஷணார்த்தம் கல்கத்தாவிற் கடுத்துள்ள தக்ஷிணேஸ்வரத்தில் நிருமிக்கப் பட்டுள்ள காளிகோவிலில் உதவி அர்ச்சகராக நியமிக்கப்பட்டனர்; கொஞ்சகாலம் இவ்வேலையை நடத்திவந்தனர். அவரது மனமானது புருஷார்த்த அடைவையே இரவும்பகலும் அவாவிக் கொண்டிருந்தது. அவர் “யான் பூஜைசெய்யும் காளி உயிருள்ளதாயின், எனக்குத் தரிசனம் தந்தருளல்வேண்டும்” என்னும் இச்சைக்கு முற்றிலும் வயப்படலாயினர். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் அர்ச்-

சகர் வேலையைச் செவ்வையாக நடத்த அவரது மனம் இடங் கொடுக்கவில்லை யென்றுணர்ந்த காளிகோவிலதிகாரிகள் அவ ரது பிரியம்போல் அவரைச் சாதனைசெய்ய விடுத்தனர். காளிகோவிலைச் சார்ந்துள்ள விசாலமான தோட்டத்தில் இவர் அநேக வருட காலம் தம்மைக்கண்டோர் பைத்தியக் காரன் என்று கூறும்படி தேகபாவனையிழந்து கடுந்தவம் புரிந்துவந்தனர்; முடிவில் காளிதேவியைச் சாக்ஷாத்கரிக் கும் கருணைக் குரித்தாயினர். இவர் காளிதரிசனம் பெற்ற பின் பல சமயக் கோட்பாடுகளையும் மதங்களையும் அனுஷ் டித்துப் பார்த்தனர்; எல்லாம் ஒரு முடிவிற்கே இட்டுக் கொண்டு போகின்றன என்பதை ஸ்வானுபவத்தில் ஓர்ந்து தெளிந்தனர்.

ஒருமலரிலுள்ள தேனைக்குடிக்க எப்படி வண்டுகள் நாடிச் செல்லுகின்றனவோ, ஒருமலர் மலர்ந்தபிறகு அதன் வாசனையானது அதிக தூரத்தில் பரவிச்செல்வோரின் கவ னத்தை இழுத்துத் தன்னிடம் எப்படி வரச் செய்கின்றதோ, அப்படியே பல கற்றறிந்த மேதாவிகளும், அறிவாளர்களும், பக்தர்களும் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் இருந்த தக்ஷி ணேஸ்வரத்திற்குத் திரள் திரளாக வரத்தலைப்பட்டனர். அப்படி அவரிடம் வந்தவர்களில் ஒருவராவர் ஸ்ரீமத் விவே காநந்த ஸ்வாமிகள்.

ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகள் ஆங்கில பாஷையில் சிறந்த பாண்டித்யமடைந்தவர். ஆங்கில பாஷையைக் கற்ற ஏனைய சிறுவர்களைப்போல இவரும் தமதுமதத்தில் அபிமான மில்லாமல் பிரஹ்மசமாஜத்தின் அங்கத்தினராக இருந்து வந்தனர்; ஆயினும், உண்மையை அறிந்துகொள்ள வேண்டு மென்னும் அவாவையுடையோராய் மதப் பிரசங்கத்தில் நிபு ணராயிருந்த எவரையேனும் கண்டபோதெல்லாம் "தாங்

கள் தெய்வத்தைக் கண்டதுண்டா'' என்னும் கேள்வியைக் கேட்பார்; தக்க உத்தரம் கிடைக்காமையால் வருத்தமும் மனச் சோர்வும் அடைந்து வருவார்; இப்படி இருந்து வரு நாளில், ஒருநாள் தமது பந்து ஒருவருடன் தக்ஷிணேச்வரம் போனபோது அங்கு ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரைச் சந்தித்தார்; சந்தித்தபோது அவரையும் "தாங்கள் தெய்வத்தைக் கண்டதுண்டா'' என்று பிரஸ்நஞ் செய்தார். "ஆம்; தெய்வத்தை நான் கண்டதுண்டு; நான் உன்னை எப்படி பார்க்கின்றேனே அதனினும் அதிகத் தெளிவாக நான் தெய்வத்தைப் பார்க்கின்றேன்; உன்னையும் பார்க்கச் செய்ய மாட்டுவேன்'' என்று சற்றும் தாமதியாமல் உடனே பதில் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னார். இதனைக் கேட்டதும் ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிக்கு மட்டில்லாக் களிப்பும் வியப்பும் உண்டாயின; பின் அவர் அவரிடம் அடிக்கடி வரப் போக இருந்து நாளடைவில் துறவறம்பூண்டு அவருடைய பிரதம சிஷ்யராயினர்.

பிரஹ்ம சமாஜத்தின் தலைவராகிய கேசவசந்திரஸேனர் என்பவர் ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்ஸரிடம் பலகால் வந்து அவரது வாயிலிருந்து வந்த தேவாமிர்தம் போன்ற உபதேசங்களைக் கேட்டுக் களித்து,அவைகளைப்பற்றியும்அவரது குண விசேஷங்களைப்பற்றியும் தாம் பிரசுரஞ் செய்திருந்த பத்திரிகையில் சிலாக்கியமாக எழுதினர்; எழுதவே, ஆங்கிலம் கற்ற சிறுவர்கள் ஏராளமாய்த் தக்ஷிணேஸ்வரம் வரத் தலைப் பட்டனர். இவ்விதம் வந்தவர்கள் எண்ணிலர். இவர்களில் உலக வாழ்க்கை யென்னும் வன்பறவையால் கொத்தப்பட்டு உச்சிஷ்டப் படுத்தப்படாத சில சிறுவர்களை ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் தெரிந்தெடுத்து, தாம் உலக உஜ்ஜீவனர்த்தம் சேகரித்து வைத்திருந்த ஞான

மேனும் போருளை இச் சிறுவர்களிடத்து ஒப்பித்துவிட்டு 1886 வருஷம் மஹா சமாதியடைந்தார்.

"கண்டதேகாட்சி கொண்டதே கோல"மென்னும் சார்வாக மதத்தை ஸ்ரீஇராமகிருஷ்ணபரமஹம்ஸர் தமது வாழ்க்கையால் பொய்யெனக்காட்டினர். தேகத்துக்கும் மனதிற்கும் அப்பால் ஒரு பொருளுளதென்றும், அதனை இந்திரிய நிக்கிரகத்தாலும், பொருளாசை பெண்ணாசைகளை யொழித்தலாலும், கபடமற்ற அஃதாவது உண்மையான நடவடிக்கையாலும் சந்தேகமின்றி அடையலாம். இருப்பது ஓரே வஸ்து; அஃது உருவமாகவும் இருக்கிறது; அருவமாகவு மிருக்கிறது. எவனெவன் எவ்வெவ்விதம் அடைய உண்மையாய் விரும்பி உழைக்கின்றானோ அவனவன் அவ்வவ்விதம் அதனை அடைதல்கூடும். ஆண் பெண்ணென்னும் எல்லாரிடத்தும் தெய்வீகத் தன்மை யிருக்கின்றது. மோக்ஷமானது எல்லா வகுப்பினர்க்கும், எல்லா ஜாதியார்க்கும் உலகத்திலுள்ள எல்லா மனிதர்க்கும் உரித்தானது. ஒருவன் தன் மதத்தின் கொள்கைப்படி சரிவர நடப்பானாயின், மோக்ஷத்தைச் சந்தேகமின்றி யடைவான். எந்த மதத்தில் ஒருவன் பிறந்திருக்கின்றானோ அந்த மதமே அவனுக்கு மோக்ஷத்தை அளிக்குமதமாம்; ஆதலின், அவன் அதனை விட்டு வேறு மதத்தை அவலம்பிப்பது தவறு; ஏனெனின், எல்லா மதங்களும் ஓரே இடத்திற்கு (மோக்ஷத்திற்கு)க் கொண்டுபோகும் பல்வேறு பாதைகளாம்; ஆதலின், மதச் சச்சரவு கூடாது என்று இவ்வாறாக உலகம் முழுவதும் கற்கக்கூடிய லக்ஷணம் போருந்திய ஸநாதன தர்மத்தின் உண்மைகளை ஸ்ரீ இராமகிருஷ்ணர் போதித்துவந்தார். இந்த ஸநாதன தர்மத்தைக் கண்டுபிடித்த வேதகாலத்து ரிஷிகள் முதல் முதல் அதை அக்காலத்தில் பரிபக்குவமா

யிருந்த சிலர்க்கு மாத்திரம் போதித்தனர்; அதன் பின்னர் ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது காலத்தில் இந்தியாவில் நாகரிக முற்றிருந்த பல பாகங்களில் இதைப் போதித்துப் பரவச் செய்தார்; மறுபடியும் இதே உண்மைகளைக் கண்டுணர்ந்து அவற்றை இக்காலத்தில் போதித்து உலக முழுதும் பரவச் செய்தவர் ஸ்ரீ இராமகிருஷ்ண தேவரேயாவர்.

ஸ்ரீ இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் தேக வியோகமான பின்னர் அவருடைய சந்நியாசி சிஷ்யர்கள் மேற்கண்ட சமரசமான போதனைகளை உலக உஜ்ஜீவனார்த்தம் பரவச் செய்ய எண்ணங்கொண்டு, ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகளைத் தமக்குத் தலைவராகக்கொண்டு, மடமொன்றை கல்கத்தாவிற்கடுத்துள்ள பேலூர் என்னுமிடத்தில் ஸ்தாபித்தனர். இந்த மடத்தின் அங்கத்தினர்கள் பலவிதமான பரோபகார கருமங்களை மேற்கொண்டு வேறு பல மடங்களையும் ஆச்சிரமங்களையும் ஸ்தாபித்தனர். இவையேயன்றி அநேக சேவாச்சிரமங்களும், வைத்தியசாலைகளும், பள்ளிக்கூடங்களும் இவர்களால் இந்தியாவின் பல இடங்களில் மாத்திரமல்லாமல் அமெரிக்கா தேசத்தின் பல பாகங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டன. ஆகவே, இந்தப் பரோபகாரமான காரியங்களை மேற்கொண்டு நடத்த மிஷன் ஒன்று ஏற்படுத்துதல் அத்தியாவசியகமாயிற்று. இவ்விதம் மடமும் மிஷனும் உண்டாயின. இவை தியாகம் சேவை ஆகிய இந்த இரண்டையுமே முக்கிய நோக்கங்களாகக் கொண்டு எல்லாக் காரியங்களையும் செய்து வருகின்றன.

மடத்தின் முக்கிய இலக்ஷியார்த்தங்களாகிய தியாகத்தையும் சேவையையும் சாக்ஷாத்கரித்தற்கு வேண்டிய உதவிகளை மிஷன் அளித்து வருவதால், அந்த மிஷன்

மடத்தைச் சார்ந்ததேயென்றும் மடத்தின் உப உறுப்பாக இருக்கின்றதென்றும் கூறலாம். சந்நியாசிகளும், லௌகிகர் களும் மிஷனுக்கு அங்கத்தினர்களாவார்கள். இவ்வங்கத்தி னர்கள் பேலூர் மடத்தின் வியவகாரங்களை நிர்வகிக்க ஏற் படுத்தப்பட்டுள்ள டிரஸ்டிகள் அடங்கிய நிர்வாக சபையார் ஆட்சிக்கு உட்பட்டவர்களா யிருத்தல் வேண்டும்.

வேதாந்த சாஸ்திரத்தை நன்ருகக் கற்பித்துப் போத காசிரியர்களைத் தயாரித்து அவர்கள் மூலமாக இந்தியாவில் மாத்திரமல்லாமல் வெளித் தேசங்களிலும் வேதாந்த ஞானத் தைப் போதித்துப் பரவச்செய்தலும், ஜாதிபேதம், பேர் ஊர்ப்பேதம் முதலிய வித்தியாசம் சிறிதும் பாராட்டாமல் மனிதர்கள், ஸ்திரீகள், குழந்தை உட்பட எல்லா ஜீவராசி களும் ஈஸ்வரத்தோற்றங்களேயன்றி வேறல்லவென்று மதித்து அவரிடத்து ஆத்மதத்துவ விஷயமாகவும், நீதிநெறி விஷயமாகவும், தேகத்தின் விஷயமாகவும் நேரிட் டுள்ள குற்றங் குறைவுகளையும் பீடைகளையும் போக்கி அவர் களுக்குச் சேவை செய்தலுமே ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷ னின் நோக்கமாகும்.

ஜனன மரணங்களுக்குக் காரணமாகிய அஞ்ஞானத்தை அறவே ஒழிக்க வேண்டுமானால், துக்கச்சுவடு சிறிது மற்று எல்லையில்லாதுள்ள ஆநந்தத்தையும் எல்லா ஜீவரிடத்திலு முள்ள சாஸ்வத வாழ்வை எடுத்துக் காட்டவல்ல ஞானத்தை யும் இப்பிறவியிலேயே யடையவேண்டுமானால், துவேஷம், சண்டை, பகைமை, பிறர் நயத்தைக் கருதாத தன்னயம், இன்னும் இவைபோன்ற அதர்மங்கள் தமக்கு உறைவிடமா கப் பெற்றுள்ள இவ்வுலகத்தில் யாவர்க்கும் பொதுவாக வுள்ள அன்பும், சாந்தியும், ஒற்றுமையும் உலாவ வேண்டு

மானல், இவ்வண்ணம் எல்லாரும் எல்லா விதத்தாலும் சுகமா யிருக்க வேண்டுமென்னும் விருப்பம் உளதானல், யாவரை யும் கட்டி அணைக்கும் சுபாவமுள்ளதும் யாவர்க்கும் ஆறு தலை யுண்டாக்குந் தன்மையுள்ளதுமான ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய போதனையைப் பண்டிதர்களுக்கும் பாம ரர்களுக்கும், செல்வர்களுக்கும் வறியவர்களுக்கும், நாகரிகர் களுக்கும் அநாகரிகர்களுக்கும், மோக்ஷமுண்டென்று நம் புகிறவர்களுக்கும் அது கிடைக்காதென்று மனச்சோர்வு அடைந்தவர்களுக்கும், நல்லுடையினர்க்கும் ஆபாச உடையி னர்க்கும், மேலோராயினுர்க்கும் கீழோராயினுர்க்கும், இன்னும் இவை போன்றவர்களுக்கும் சாதிமதபேதமின்றி, நடை உடை தேசாசாரங்கள் இவைகளைச்சற்றும் கவனியா மல் போதித்து உலகமுழுதும் எல்லாப் பாஷைகளிலும் பர வச் செய்தல் வேண்டும் என்பதே ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷ னின் கருத்துக்களாகும்.

பே - மா

---

# சிறப்புப்பாயிரம்

ஸ்ரீ இராமகிருஷ்ண பரம ஹம்ஸருடைய சந்நியாசி சிடர்கள், உலகப் பிரசித்தி பெற்றவரும் தங்கள் சகபாடியு மான ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகளைத் தலைமையாகக் கொண்டு, ஸ்ரீராம கிருஷ்ண மடத்தையும், மிஷனையும் கல் கத்தாவிற் கடுத்துள்ள பேலூர் என்னும் ஸ்தலத்தில் ஸ்தா பித்தனர் என்பது இந் நூலின் பாயிரத்தில் சொல்லப்பட் டிருக்கின்றது. இச் சந்நியாசிகளில் ஒருவராகிய ஸ்ரீராம கிருஷ்ணாநந்தர்என்பவர் ஆங்கில பாஷையில் "Universe and Man" என்னும் ஒரு நூலை இயற்றி யிருக்கின்றனர். இந் நூலே "ஜகஜ்வபர விளக்க வினுவிடை" என்னும் இந்நூ லுக்கு முதனூலாகும். இந்நூலில் மேற்கண்ட "யூனிவர்ஸ் அன்டுமொன்" என்னும் நூலின் விஷயங்கள் பெரும்பான் மையும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீமத் சுவாமி இராமகிருஷ்ணாநந்தர் அவர்கள் ஹூக்ளி ஜில்லாவில் 1863 வருஷம் ஒரு வைதிக ப்ராம்மண குலத்தில் ஜனனமாயினர். அவரது பூர்வப் பெயர் சஷிபூஷன் சக்ரவர்த்தி என்பது. அவர் தகப்பனர் பக்தியிற் சிறந்த தேவி உபாசகர் ஆதலின், ஸ்ரீமத் இராமகிருஷ்ணாநந்த சுவாமிகளுக் குப் பால்ய முதற்கொண்டே பக்தி உணர்ச்சிப் பெருக்கைத் தரத்தக்க சாங்கத்தியம் உண்டாயிருந்தது. அவர் கல்வி கற் கும் நிமித்தம் கல்கத்தாவிற்கு வந்திருந்த காலத்தில், அவர்க்கு ஆத்ம சம்பந்த வாழ்வு சில காலம் தடைப்பட்டது போல் காணப்பட்டது. அவர் மிகக் கூர்மையான புத்தியுடைய

வராயிருந்தமையின், படிப்பின் விஷயமாகவே தம் கவனத்தை முற்றிலும் செலுத்தி வந்தனர். அவரது கல்லூரி வாழ்க்கை மிகச் சிறப்புற்றிருந்தது ; என்றாலும், ஆத்ம ஞானமடைய வேண்டுமென்னும் அவாவானது அவரைவிட் டகலவில்லை. அவர் கல்வியினால் ஒரு விதமான திருப்தியுமடையவில்லை. அவர்ஞானவேட்கையால்வருந்திக்கொண்டிருக்குங்காலத்தில் கேசவசந்திரரின்பிரசங்கத்தைக் கேட்கமற்றச்சிறுவர்களுடன் போகத் தலைப்பட்டனர். கேசவருடைய சொற் சாதுரியமும் அவரது பக்திப் பிரசங்கங்களும் ஸ்ரீமத் இராமகிருஷ்ணாநந்தர் மனதைக் கவர்ந்தன. கேசவரும் இவரும் மிக அன்னியோன்ய சிநேகிதர்களாயினர். கேசவரின் பிள்ளைகளுக்கு ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்தர் வீட்டில் படிப்பிக்கும் உபாத்தியாயராயினர். ஆனால், இது நெடுநாள் நீட்டிக்கவில்லை; ஏனெனின், "கேசவரின் பிரசங்கங்கள் எனது பசியை அதிகரிக்கச் செய்தனவே யன்றி தணியச் செய்யவில்லை" என்று ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்தரே ஒருகால் சொல்லியிருக்கின்றனர்.

1883ஆம் ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்த சுவாமிகள் தக்ஷிணேஸ்வரத்தில் தமது குருநாதராகிய ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரைச் சந்தித்தார்; இவரைக் கண்டதும், ஸ்ரீ பரமஹம்ஸர் தமது சிஷ்யரென இவரைத் தெரிந்துகொண்டவராகி அடிக்கடி தம்மிடத்திற்கு வரும்படி சொல்லி அவரை யனுப்பிவிட்டார். இந்தச் சந்திப்பினால் ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்த சுவாமிகளுடைய வாழ்வு முற்றும் மாறுதலடைந்தது. இவர் சில நாட்களுக்குள் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் தீக்ஷைபெற்று ஞானசாதகராய்த் தமது குருநாதர் பக்கலிலிருந்து வாழ்ந்துவந்தார். மூன்று வருஷ காலம் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது சீடன் விஷ

யத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்து, ஞானத்தீபை வளர்த்து வந்தார். இச்சாதக தசையில் சீடராகிய இவர்க்கு நேரிட்ட ஆத்ம அனுபவங்கள் அதிக வியக்கத்தக்கனவாயிருந்தன. ஸ்ரீமத் இராமகிருஷ்ணானந்தர் தமது ஆத்மா ஆநந்த சாகரத்தில் நீந்திக்கொண்டிருப்பது போலச் சிற்சில சமயங்களில் உணர்வர். இவர்க்கு இவ்வித அனுபவங்கள் முதிர முதிரக் கல்லூரிக் கல்வியிலிருந்த ஊக்கம் குன்றிவிட்டது; உலகமானது அவரது மனதைவிட்டு நழுவத் தலைப்பட்டது.

1885ஆம் கடைசிப்பாகத்தில் ஸ்ரீஇராமகிருஷ்ணபரமஹம்ஸர் நலிவடையவே, அவர்க்குச் சிசுருஷை செய்வதற்கு ஆட்கள் வேண்டியவரா யிருந்தனர். அப்பொழுது ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் வந்து கொண்டிருந்த சிறுவர்களில் சிலர்க்குத் தத்தம் வீட்டிற்குப் போகாமல் குருநாதரிடமே தங்கியிருத்தல் நேரிட்டது. இவர்களில் ஒருவராவர் ஸ்ரீ இராமகிருஷ்ணானந்தர். இவர் தமது குருவைச் சாயையானது எப்படி உடலை நீங்காதிருக்குமோ அப்படி நீங்காதிருந்து அவர்க்கு அநவரதம் (இரவும் பகலும்) விடாது சேவைசெய்து வந்தனர். மற்றச் சீடர்கள் தங்கள் தங்கள் சாதனங்களில் ஈடுபட்டிருக்க, இவர் மாத்திரம் கண்ணும் கருத்துமாய்க் குருநாதர்க்கு வேண்டிய எல்லாப் பணிவிடைகளையும் செய்வதில் சலிப்பற்றிருந்தார்.

ஸ்ரீ இராமகிருஷ்ணபரமஹம்ஸர் 1886ஆம் மஹாசமாதி அடைந்தனர். பிறகு கல்கத்தாவுக்கடுத்துள்ள பாரா நகர் என்னும் ஊரில் சந்நியாசி சிஷ்யர்கள் மடம் ஒன்றை ஏற்படுத்தி அதில் வசிக்கத் தொடங்கினர். அவர்கள் அத்தனை பேர்க்கும் அங்கு உணவு உடை முதலியன கிடைப்பது கஷ்டமாயிருந்தபடியால், அவர்கள் ஒருவர் பின் ஒருவராய்ப் பரிவிராஜகராய் யாத்திரை செய்யப் புறப்பட்டு விட்டனர்; ஆனால், ஸ்ரீ இராம

கிருஷ்ணாநந்தசுவாமிகள் மாத்திரம் பாராநகர் மடத்தைவிட்டுச் செல்லாமல் 12 வருஷகாலம் கல்கத்தாவிற்குக் கூடப் போகாமல் தமது நாள் முழுமையும் குருசேவையிலேயே காலத்தைக் கழித்து வந்தனர். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது தேகத்தைக் களைந்து நின்றவுடனே, அவரது படம் ஒன்று மடத்தில் பிரதிஷ்டை செய்யப் பட்டது. ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவுருவத்தோ டிருந்த போது, காலை முதற்கொண்டு இரவில் அவர் சயனிக்கப் போகும் வரையில், எவ்வெப் பணிவிடைகள் அவர்க்குச் செய்யப்பட்டனவோ, அவ்வப்பணிவிடைகளை அவ்வண்ணமே இப்படத்திற்கும் ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்தர் செய்து வந்தனர். நாள் முழுதும் அப்பணிவிடைகளிலேயே அவர் மனம் சென்றுகொண் டிருந்தது. ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்தர், ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் உயிருடன் இருப்பதுபோலவே, எண்ணியும் உணர்ந்தும் அப்படத்திற்குப் பணிவிடைகள் செய்துவந்தார் என்று அவர் பணிவிடை செய்யுங் காலத்தில் அதனைக் கண்டவர் கூறியிருக்கின்றனர். ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்தர் குருபூஜையின் நிமித்தம் மடத்தைவிட்டுச் சென்ற தின்மையால், "மடத்தை விழாதபடி தாங்கும் ஒரு ஸ்தம்பம் போல் இவர் இருந்துவந்தார்" என்று ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர் கூறியிருக்கின்றனர்.

ஸ்ரீ விவேகாநந்தசுவாமிகள் அமெரிக்கா தேசம் சென்று, சிகாகோவில் கூடின சர்வமத மஹாசபையில் வெற்றிபெற்று, உலகப் பிரசித்தியடைந்து, இந்தியாவுக்குத் திரும்பி வந்தபோது, நமது தேசத்திலுள்ள ஹிந்துக்கள் விழித்துக்கொண்டு, மடங்களை ஸ்தாபிக்கும்படி ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளை விநயபூர்வகமாகக் கேட்டுக்கொண்டனர். இவ்விதம் கேட்டுக்கொண்ட சென்னைமா நகர வாசிகளின் வேண்டுகோளுக்கிணங்கி, மடம் ஒன்றை இச்சென்னை

மாநகரில் ஸ்தாபிக்க, 1887-ஆம் ஸ்ரீ இராமகிருஷ்ணா நந்த சுவாமிகளை ஸ்ரீ சுவாமி விவேகாநந்தர் அனுப்பினார். அவர் அவ்வருட முதல் தமது தேகவியோக காலம் வரையில் சென்னைமா நகரத்தைச் சார்ந்த ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் காரியங்களில் ஈடுபட்டு விடாது உழைத்து வந்தனர்.

ஸ்ரீ இராமகிருஷ்ணாநந்த சுவாமிகள் சென்னைமா நகரில் 14 வருடகாலம் ஆத்மஞான அபிவிருத்தியின் பொருட்டுத் தமக்கியன்ற வேலைகளை விடாது செய்து வந்தார்; ஆத்ம ஞான தாகத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு அத்தாகத்தைத் தணித்தும், உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய நிஜ ஆகாரமாகிய ஆத்மபோதத்தைத் தந்து அநேகர் பசியைத் தணித்தும் வந்தனர். இந்த 14 வருடங்களிலும் ஜனங்களின் உஜ்ஜீவனார்த்தம் அவர் பட்ட கஷ்டத்தை அவருடன் பழகினவர்களே நன்கு அறிவார்கள். அவர் சென்னை நகரிலே மைலாப்பூர், ஜார்ஜ்டவுன், கோமளேசுவரன் பேட்டை, சிந்தாதிரிப்பேட்டை, எழும்பூர், சைதாப் பேட்டை முதலிய இடங்களில் வேதாந்தபாட வகுப்புகள் ஏற்படுத்தி அங்குவந்த முமுக்ஷுக்களுக்கு உபநிஷத்துக்களிலும், கீதையிலும், பாகவதத்திலும், பல தர்சனங்களிலும் பாடம் சொல்லிவந்தார்; இஃதன்றியும், சென்னை இராஜதானியில் மதாபிமானிகளின் வேண்டுகோள்களின்படி பல இடங்களுக்குச் சென்று பிரசங்கங்களும் செய்துவந்தனர்; பர்மாவுக்கும் ஒருமுறை சென்று தமது குருநாதர் போதனைகளை யாவரும் நன்கு உணர்ந்து தெளியுமாறு பிரசங்கித்தும் வந்தார். சில நாள்களில் அவர்க்கு இரண்டு மூன்று பிரசங்கங்கள் செய்யுமாறு நேரிடும். அவர்க்குச் சமையல்காரனை வைப்பதற்குப் போதுமான பொருளில்லை; அதனால், அவர் அப்பிரசங்கங்களைச்செய்து முடித்த பின்னர்த் திரும்பி வந்து தாமே சமையல் செய்துகொள்வார்.

இப் பெரியார் வண்டியிற் செல்ல வசதி யில்லாமல் கால் நடையாகச் சிந்தாதிரிப்பேட்டைக்கு வெகு நாள் போய்த் தமது வகுப்பை நடத்தி வந்தனர். அந் நாளில் மழைக் காலத்தில் மவுண்ட் ரோட் ரௌண் டாணுவண்டை தொடையளவு ஜலம் நிற்பது உண்டு. அவ்வளவு ஜலத்திலும் இவர் நடந்து போயிருக்கின்றனர். இவர் சிரமமென்பது இன்னதென்பதைத் தெரியாதவராய்த் தமது குரு நாதரின் கொள்கைகளைப் பரவச் செய்வதில் மிக்க ஆர்வம் பொருந்தப்பெற் றிருந்தனர். இவர் ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்கும் பொருட்டுத் தமது தேக சௌக்கியத்தை எள்ளளவுங் கவனியாமல் உழைத்து வந்தபடியால், காச நோய் அவரது உடலைப் பற்றிக் கொண்டது; அதனால், அவர் 1911-வருஷத்தில் மஹா சமாதி அடைந்தனர்.

இவரது மாணாக்கரில் ஒருவராகிய கோண்டய்ய செட்டி என்பவர் மைலாப்பூர் பிராடீஸ்ரோட்டில் சிறிய நிலம் ஒன்றை நன்கொடையாகக் கொடுத்தனர். அதில் ஜன உபகாரத்தால் சிறு மடம் ஒன்று கட்டப்பட்டது. அதன் பின்னர் இக் கட்டிடத்தினருகே இன்னும் விஸ்தீரணமான நிலம் கிடைத்தது; அதில் இப்பொழுது காணப்படும் மடம் இப்பெரியாரின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டதாகும்.

இப்பெரியார் ஆங்கிலத்தில் அநேக கிரந்தங்கள் செய்திருக்கின்றனர். தென்னிந்திய ஆழ்வாராதிகள் சரித்திரங்களையும், ஸ்ரீராமாநுஜர் சரித்திரத்தையும் வங்காள பாஷையில் எழுதியிருக்கின்றனர். அவை அதிகப்பிரீதியுடன் வங்காள தேசத்தாரால் வாசித்து வரப்படுகின்றன.

இப் பெரியாரிடத்து வைராக்கியமும், தூய்மையும், குரு பக்தியும் எல்லையற்றனவாயிருந்தன. அவரை நேரிற் கண்டு அவருடன் பழகினவரே, அவற்றை ஒருவாறு உணர்வர்.

பே—மா.



அஞ்சுதல் அறியா நெஞ்சநற் றுறவீ !

" எவன் விதைப்பவனோ அவன்அறுப் பவனே.

காரணம் உளவேல் காரிய மும்உள.

நன்மை விதைத்தவன் நன்மை அறுப்பன்.

தீமை விதைத்தவன் தீமை அறுப்பன்.இவ்

விதியி னின்றும் விலக்கா வார்இலர்.

உருப்பெற் றோர்க்கெலாம் உறுதளை உண்"டெனப்

புகல்வர். இதனிற் பொய்இலை. ஆயினும்,

நாம ரூபம் ஆம்இவற் றப்பால்

என்றும் தடையற நின்றுள தான்மா.

அதுதான் நீஎன் றறியக் கடவை.

ஓதுகநீ "ஓம் தத் ஸத் ஓம்!" என.

—ஸ்வாமி விவேகாநந்தர்



# ஜகஜ்ஜீவபர

## விளக்க வினாவிடை

### முதல் அத்தியாயம்

### ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் கொண்டுவந்த செய்தி.

வினா:—உலகினர் மேற்கொண்டொழுகும் மதங்களுள் ஹிந்துமதம், கிருஸ்துவமதம், மஹமதியமதம் முக்கிய மானவை. இம்மதங்கள் தத்தம் கொள்கைகளேயே விசேஷ மாகக் கூறுகின்றன. ஒவ்வொரு மதத்தினரும் மோக்ஷத்தை அடைவிக்கக்கூடிய மதம், தமது மதமேயன்றி வேறுமத மன்றென்று கூறுகின்றனர். இது சரியாகுமா?

விடை :—எல்லா மதங்களும் சிறிதும் தவருமல் மோக்ஷத்திற்கு இட்டுக்கொண்டு போகும் பல் வேறுபட்ட பாதைகள் என்பதுதான் உண்மையான பேச்சு. இப்படி சொல்வதற்கு அதிக தைரியம் வேண்டும்; ஏனெனின், எந்த மதஸ்தனும் இதனை ஒத்துக்கொள்ள மாட்டான். ஒவ்வொரு மதஸ்தனும் தான் நம்பி அவலம்பிக்கும் மதமே உண்மையானதென்றும் ஏனைய மதங்கள் தவருனவை யென்றும் நம்புகின்ருன்.

ஹிந்து மதத்திலடங்கியுள்ள பல சாம்பிரதாயக்காரர் களும் சமயத்தினரும் தங்கள் கொள்கைகளே சரியானவை

யென்றும், ஏனைய சம்பரதாயத்தாரும் சமயத்தினரும் கூறுவது யுக்திக்கு ஒவ்வாதென்றும், பிரசாரம் செய்கின்றனர். ஹிந்துக்கள் மாத்திரம் இவ்விதம் கூறுகின்றார்கள் என்று எண்ணல் கூடாது. மோக்ஷத்தை அளிக்கக்கூடிய மதம் கிருஸ்துமதமேயன்றி வேறல்ல வென்று கிருஸ்துவமதத்தினரும் கூறுகின்றார்கள். இவ்விதமே மஹமதியர்களும் பௌத்தர்களும் சமணர்களும் கூறுகின்றார்கள்.

"செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தம்
தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
வப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
லடுத்தவந் நூல் களும்விரித்தே யருமா நாதி
ஒப்பவிரித் துரைப்பர்."

என்று தாயுமான சுவாமிகளும் கூறுகின்றார்.

வினா:—எல்லா மதங்களும் மோக்ஷத்தை அடைவிக்கும் பல பாதைகள் என்பதை ஏன் எல்லா மதத்தினர்களும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள்? இதைத் தெரிந்து கொள்வது கடினமாகத் தோன்றவில்லையே?

விடை:—இந்த விஷயம் மிகச்சுலபமானதாக இருந்தபோதிலும், எந்த மதத்தினரும் இதன் உண்மையை ஒத்துக்கொள்ளார்.

வினா:—ஏன்?

விடை:—மதம் எப்படி அனுஷ்டிக்கப்படவேண்டுமோ அப்படி அனுஷ்டிக்கப் படாமல், மாறாக அனுஷ்டிக்கப் பட்டு வருகின்றது. மோக்ஷமார்க்கங்கள் பல வென்று எல்லாமதங்களும் அங்கீகரியா; பின்னையோ, ஒவ்வொரு மதமும் தான் கூறுவதே சரியான மோக்ஷமார்க்கமெனக் கூறி, ஏனைய மார்க்கங்களைக் கண்டனஞ் செய்கிறது. இவ்வா

றிருத்தலின், எல்லா மதங்களும் மோக்ஷத்திற்கு இட்டுக் கொண்டு போகும் பலவேறான பாதைகளெனக் கூறுவது மதியீனமெனத் தோன்றும்.

வின:—எல்லா மதங்களும் மோக்ஷத்திற்கு இட்டுக் கொண்டுபோகும் பல பாதைகளென்னும் இத்துணிகரமான கொள்கையை, பின் போதித்தவர் யார்? இந்நூதன செய்தியைக் கொண்டுவந்தவர் யார்?

விடை:—இந்நூதன செய்தியை உலகத்தார்க்குக் கொண்டுவந்து துணிகரமாய் வெளியிட்டவர் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்பவரேயாவர்.

வின:— இவர் யார்?

விடை:—அவர், அமெரிக்காவில் சிகாகோ என்னுமிடத்தில் நடந்தேறிய சர்வமத மஹாசபையில், ஹிந்துமத மாட்சிமையை ஸ்தாபித்து, அதனால் உலகப் பிரசித்தி பெற்ற ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகளின் குருநாதராவர்.

வின:—ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய போதனையை யுக்தி பூர்வகமாக விளக்கிக் காட்டல் முடியுமா? எல்லா மதங்களுக்கும் தாயாகிய நமது ஹிந்து மதத்தை முதலில் எடுத்துக் கொள்வோம். அது எத்தனையோ ஸமயக் கோட்பாடுகளாகப் பிரிவுபட்டிருக்கின்றது. எல்லாச் சமயங்களும் ஒரே கதிக்குக் கொண்டு போகும் பலவேறு மார்க்கங்களாம் என்று இந்த ஹிந்துமதமும் கூறுகின்றதா?

விடை:— ஹிந்துக்கள் பல வகுப்பினர்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றார்கள்; இவர்களுடைய கொள்கைகள் பல பாகுபாடுள்ளனவா யிருக்கின்றன. உதாரணமாக:— வேதாந்த சூத்திரங்களுக்கு 25 வியாக்கியானங்களிருக்கின்றன. ஒவ்வொரு வியாக்கியானத்தைப் பின்பற்றிச் செல்

வோர் பலர். இவ்வியாக்கியானங்களுள், முக்கியமானவை ஸ்ரீ மாத்வாசாரி, ஸ்ரீ இராமாநுஜாசாரி, ஸ்ரீ சங்கராசாரி ஆகிய இவர்களுடைய வியாக்கியானங்களேயாம். இவர்களால் ஏற்படுத்தப்பட்ட தத்துவ தர்சனங்கள் ஜகத் தத்துவத்தைப் பற்றி விவரித்துக்காட்டும் வகையில் அதிக பேதப்பட்ட போதிலும், அனுஷ்டான பாகத்தில் ஒருமைப்பாடுள்ளன என்பதை நான் எடுத்துக்காட்ட மாட்டுவேன். இவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட தர்சனங்கள் ஒரே இலக்ஷியார்த்தத்தைக் குறிப்பிட்டு ஒரே நெறியை விதிக்கின்றன.

வினு:—முதலில் மாத்வாசாரியால் ஸ்தாபிக்கப்பட்ட தர்சனத்தைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் உரைத்தருளல் வேண்டும்?

விடை:—இந்தச் சிறந்த ஆசிரியரது கொள்கைப்படி மூன்று வஸ்துக்கள் சாஸ்வதமானவை. அவை பிரகிருதி, ஆத்மா, ஈஸ்வரன் என்பனவாம். இவை தம்மில் தாமாகவே இருப்பவை; சிருஷ்டிக்கப்பட்டவை யன்று. பிரகிருதி, ஈஸ்வரன் ஆகிய இவர்கள் மத்தியில் ஆத்மாக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஆத்மாக்களுள் சில நல்லவைகளாக விருக்கின்றன; சில கெட்டவைகளாக விருக்கின்றன; சில இவ்விரண்டு முடையனவாக விருக்கின்றன. இவ்வாத்மாக்கள் எள்ளு மூக்கு நுனியினும் மிகச் சிறிய அளவையுடையனவா யிருத்தலின், பலவீனமானவைகளா யிருக்கின்றன என்று இவ்வாறு மாத்வாசாரி பிரதிபாதித் திருக்கின்றனர்.

வினு:—ஈஸ்வரனுக்கும் பிரகிருதிக்கும் நடுவில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் ஆத்மாக்களின் கதிதான் என்ன?

விடை:—அதைத்தான் சொல்லப்போகிறேன்; பொறுமையுடன் கேட்பாயாக. இவ்வித ஆத்மாக்களின் நிமித்து

மாகத்தான் மதம் தொடங்கிற்று. பிரகிருதியை நாடிச் செல்வதே இந்த ஆத்மாக்களின் சுபாவமாக இருக்கிறது. "பகிர்முகத்திலே செல்லும் சார்புடையவைகளாக, ஈஸ்வரன் ஆத்மாக்களைச் சிருஷ்டித்திருக்கிறார்; ஏனெனின், அவற்றின் இந்திரியங்கள் எல்லாவற்றையும் வெளியே இருத்தியிருக்கின்றனர்" (கடோபநிஷத்து)—

வினா:—ஆத்மாக்கள்,பகிர்முக விருத்தியால் இந்திரியங்களின் உதவியைக்கொண்டு, சுகத்தை அடைய முயல்கின்றன. இதில் என்ன குற்றம்?

விடை:—சுகத்தை யடைய வேண்டுமென்பதுதான் ஆத்மாக்களின் நோக்கம். அவைகள் விரும்பும் சுகம் நித்திய சுகம். அந்தச் சுகத்தை இந்திரியங்களின் வழியாய் அடைதல் முடியாது.

வினா:—ஏன் முடியாது? இந்திரியங்கள் எல்லாச் சுகங்களையும் எளிதில் தரக்கூடியவைகளா யிருக்கின்றனவே?

விடை:—இந்திரியங்கள் ஆத்மாக்களுக்கு வேண்டிய சுகத்தைத் தடையின்றி வெகு சுலபமாய் அளிக்கின்றன; ஆனால், இந்திரிய சுகத்தையடைய ஆத்மாக்கள் இந்திரியங்களோடு தாதாத்மியத்தை யடைகின்றன.

விடை:—அதனால் என்ன தீங்கு?

வினா:—ஆத்மாக்கள் சாஸ்வித வாழ்வை அடைய விருப்பங்கொண் டிருத்தலால், தேகேந்திரியங்களோடு பொருந்தும் தாதாத்மியம்,இவ்விருப்புக்குப் பங்கத்தை விளைவிக்கும். எப்படி யெனின், தேகம் நசிக்கும்போது தான் நசித்துப் போவதாகவும், தேகம் வருந்தும்போது தான் வருந்துவதாகவும், ஆத்மாவினிடத்து இவ்வித உணர்ச்சி, தாத்மிய தோஷத்தால், வந்தேறுகின்றது. இவ்வித உணர்ச்சி வந்

தேறவே, சாஸ்வத சுகப்பிராப்திக்கு இடமில்லாமற் போகின்றது. தனது நிஜஸ்வரூபம் சாஸ்வதமாகயிருந்தும், அது மூடத்தனத்தினுல் தேகேந்திரியங்களோடு தாதாத்மியத்தை அடைந்து தன் சாஸ்வத சுபாவத்தை மறந்து விடுகின்றது.

வினு:—"நித்ய ஸர்வகத ஸ்தாணுரசலோயம் ஸநாதந:" என்னும் சுருதிவாக்கியம், ஆத்மாவானது என்றுமுள்ளது, எங்குமுள்ளது, அசையப்படாதது, அசையாதது, சாஸ்வதமானது என்று கூறுதலின், நீர் கூறிய தாதாத்மியம் எங்ஙனம் சம்பவிக்கும்; சம்பவித்திடினும், சுகப்பிராப்தி எங்ஙனம் நாசமுறும்?

**விடை:**—சுருதி கூறியுள்ள ஆத்மலக்ஷணம் அத்வைத பரம்பரையைச் சார்ந்தது. மாத்வாசாரியின் தர்சனத்தின்படி ஆத்மா அணு. இவ்வித ஆத்மாக்கள் பலவாய்ச் சர்வவியாபியாகிய ஈஸ்வரனிடத்துத் தங்கியிருக்கின்றன; இவைகள் எண்ணில. இவை மிகச் சிறியவைகளாதலின், இவைகளின் சக்தியும் மிக அற்பமாம். அவைகளிடத்தில் பலவீனம் மிகுதியாயிருக்கின்றது; வாஸ்தவத்தில் பலம் என்பது அற்பமாகவே யிருக்கின்றது. அவை தமது ஸாஸ்வத சுபாவத்தைத் தெரிந்துகொள்ளச் சக்தியில்லாதவைகளாயிருக்கின்றன. இந்தக் காரணத்தினுல் ஜீவர்களை மோக்ஷ வழியில் நடத்துவதற்குப் பக்கத்தில் வழுவற்ற ஒரு புருஷன் அத்தியாவசியகமாய் இருத்தல் வேண்டும். இந்தப் பிழை தீர்ந்த புருஷன்தான் குரு என்று சொல்லப்படுவான்; ஒவ்வொரு ஜீவனும் இவ்விதக் குருவால் சிக்ஷிக்கப்படல் வேண்டும். "நான்தான் அந்தக்குரு" என்று மாத்வாசாரி சொல்லுகிருர். ஈஸ்வரனை அடையவேண்டுமானுல், குரு கடாக்ஷத்தினுல் உலகத்துக்கப்பால் செல்லல் வேண்டும்.

வினு:—ஈஸ்வரனை அடைய வேண்டுமானல், உலகத் துக்கப்பாற் செல்லல்வேண்டும் என்பது, தாங்கள் சொல்லி வந்த விஷயங்களிலிருந்து தெளிவாகப் பெறப்படவில்லை; இதனை நன்ருக விளக்கல் வேண்டும்?

விடை:—சாதாரண மனிதனுடைய சுபாவத்தை உற்றுப்பார்த்தால், அவன் விஷய போகங்களில் அழுந்தியிருப்பவனகக் காணப்படுகிருன்; பிரகிருதி வயப்பட்டவனுயிருக்கிருன். பிரகிருதி ஆராதனை, சாதாரண மனிதனுக்குச் ஸ்வபாவிகமாக இருக்கிறது. பெற்ருேர், மனைவி, மக்கள், பந்து, மித்திரர்கள் ஆகிய இவர்களுடைய தேகங்கள் பிரகிருதியினுலானவையாம். தனது உடம்பையும், தனது மனதினிடத்தில் கவர்ச்சியையும், வசீகரத்தையும் உண்டாக்கத்தக்கது பிரகிருதியேயாம். இந்தப் பிரகிருதியிலிருந்தே எல்லா விநோதக் காட்சிகளும் உண்டாயிருக்கின்றன; இந்தப் பிரகிருதியிலிருந்தே நாவுக்கினிய எல்லாவித நேர்த்தியான உணவு முதலியன உண்டாயிருக்கின்றன; பெண்டு பிள்ளைகளையும், பந்து மித்திரர்களையும், இவர்கள் விஷயத்திலிருக்கும் ஆசையையும் விடுவது கஷ்டமானுல், பிரகிருதியை விடுவது கடினமென்று சொல்லுதலும் வேண்டுமோ? இந்தப் பிரகிருதியினிடத்தில் அன்புவைத்து அதற்குச் சேவை செய்வதனுல், எனக்கு எது வேண்டுமென்று அதிக ஆசை கொண்டிருக்கிறேனே அது கிடைக்குமா? கூருய்?

வினு:—ஏன் கிடைக்காது? எனக்கு வேண்டியவற்றையெல்லாம் பாலிய யௌவன காலங்களில் எனது பெற்ருேர்களும், நடுவயதிலும் வயோதிகத்திலும் எனது மனைவி மக்களும், முறையே தந்தும், தந்துகொண்டும் வர, எனக்கு வேண்டிய யாவையும் பிரகிருதி (Nature) தாராது என்று சொல்வது அசம்பாவிதமாம்?

விடை:—நான் என் ஒருவனுக்குச் சேவை செய்கிறேன். அவனுக்குச் சேவை செய்வதனால், எனக்கு வேண்டுவது ஏதோ ஒன்றை அவனிடமிருந்து பெற எதிர்பார்க்கிறேன். இவ்விதம் ஏதோ ஒரு சுயலாபத்தினால் ஏவப்பட்டுத்தான் மனிதன் எந்தச் சேவையும் செய்யத் தலைப்படுகிறான். இந்த நியாயத்தை ஒத்துக்கொண்டால், எதை அடைவதற்கு மனிதன் அத்தியந்தம் பிரியப்படுகிறான் என்பதை ஆராய்வோம். நாம் உயிருடனிருக்க விரும்புகிறோம்; மரணத்தைத் துவேஷிக்கிறோம். ஒரு மனிதன் எவ்வளவோ புத்திசாலித்தனமாயிருந்து தேக சௌக்கியத்தைப் பெற்று அதைக் காப்பாற்றுவதில் வெகு ஜாக்கிரதையாயிருந்த போதிலும், வயோதிகதசையை அஃதாவது கிழத்தனத்தை எப்படியாவது எய்தவேண்டியவனாகின்றான். இது வெளிப்படையான விஷயமாயிருந்தும், இதை எல்லாரும் மறந்து விடுகிறார்கள். "இவ்வுலகத்தில் அதிகமாக வியக்கத்தக்கது எதுவென்றால், நம்மனோர், தினந்தோறும் ஜனங்கள் ஆயிரக்கணக்காக இறந்து போவதைக்கண்டும், தங்களுக்குமாத்திரம் அந்த மரணம் வாராது என்று நினைக்கிறார்கள்" என்று தர்மராஜா கூறியுள்ளார். ஆகையினால், நம்முடைய ஸ்வபாவிகப் பிரியங்கள் எத்தன்மையனவா யிருந்தபோதிலும், நாம் நம்மைச் சுற்றியிருக்குமவைகளை ஆராய்ந்து பார்ப்போமானால், அவை மேற்சொன்னதற்கு மாறான முடிபுடையனவென்பது நமக்கு விளங்குவதாம்.

வினா:—எப்படி ?

விடை:—தேகமும் ஜீவனும்கூடியிருக்கும் கூட்டுறவாய இந்த உயிர் வாழ்க்கை, மனதிற்கு ஒவ்வாததாக இருக்கிறது. எனது நிஜஸ்வரூபம் அழியாத்தன்மையாகும். பிரகிருதியின் மீதுஎனக்கிருக்கும் ஆசையினால்கடவுள் மீது ஆசைசெலுத்த

அசக்தனுக இருக்கிறேன். இந்தத் தேகத்தில் நான் வாசம் செய்பவனே தவிர, நானும் தேகமும் ஒன்றல்ல; நான் இந்த விஷயத்தை மறந்தல்லவா கடும்பவ இடும்பையை அடைந்து விட்டேன். மூன்றரை முழநீள முள்ளவனுகவும், தேகச் சோர்வு மனச்சோர்வு உள்ளவனுகவும், என்னை நான் மதித்து விட்டமையால், அநிர்தஜட துக்கத்தில் ஆழ்ந்து கிடக்கின் றேன். இவ்வித ஆராய்ச்சியால், மனிதன் தன்மனதை அந் தர்முகத்தில் திருப்பினுல், தனது நிஜ தெய்விக வடிவை ஸ்வானுபவமாக ஓர்ந்துணர்வான்.

வினு:—எதை அடைய மனிதன் அத்தியந்தப் பிரிய முடையவனுகிருன் என்கிற கேள்விக்கு உத்தரமும், அதை அடைவதற்கு, உலகத்தை விட்டு அப்பால் ஏன் செல்லல் வேண்டுமென்கிற சங்கைக்குச் சமாதானமும் என்மனதிற்கு இன்னும் நன்கு புலப்படவில்லை. அவற்றைத் தெளிவாகப் பக ரல் வேண்டும்?

விடை:—பிரகிருதி, ஜிவன், ஈசுவரன் ஆகிய இம் மூன்று தத்துவங்கள் சேர்ந்தது உலகம் என்று மாத்வாசாரி யார் கூறியிருக்கிருர் என்பது முன்னமே எடுத்துக்காட்டப் பட்டது. இவற்றுள், ஒவ்வொன்றும் தனிப்பொருள்; ஒன்றின்மேல் ஒன்ருகச் சார்ந்துள்ள தன்று. நாம் சேதனர் களான படியால், ஈஸ்வரனேடு சேர்ந்தவர்களே யல் லாமல், பிரகிருதியோடு சேர்ந்தோரானோம். ஆகையினுல் ஈஸ்வரனே நமது இலக்ஷ்யார்த்தமாவான். நிஜசுகத்தையும் உண்மை ஞானத்தையும் நமக்குத் தரவல்லவர் ஈஸ்வரன் ஒருவரேயாவர். இவரை எப்படி அடைவது? இவரிடத்திற்கு எப்படி போவது ? இந்த உலகமோ எல்லையற்றவிசாலத்தை யுடையது; அநாதிகாலமாக இருந்து வருகிறது ; எவ்வளவு

விரைவாக ஓடக்கூடிய புகைவண்டியும் என்னை இந்த உலகத்துக்கப்பால் கொண்டுபோய்ச் சேர்க்கச் சக்தியற்றதாகும். கடவுள் உலகத்துக் கப்பாற்பட்டவரானபடியால், அவரிடத்திற்கு நான் போக வேண்டுமானால் இந்த உலகத்தைத் தாண்டித்தான் போதல் வேண்டும். எப்படி தாண்டிச்செல்வது என்னும் விஷயத்தில், ஆரியதத்துவ சாஸ்திரிகள் யாவரும் ஒரே போதனையைத்தான் போதிக்கிறார்கள். ஸ்ரீமாத்வாசாரி கூறுகிறார்.

"நான் இவ்வுலகத்தினும் வேறு; ஆகையால், எனது ஐம்புலன்களாகிய வாயிற்கதவை மூடிவிடுவேனாயின், என்னை உலகத்திலிருந்து பிரித்துக்கொள்ளல் இயலும். இவ்விதம் நான் ஈஸ்வரனை நோக்கிச் செல்லல்கூடும்."

வினா:—இந்த உலகம் எல்லையற்ற விசாலத்தைப் பொருந்தியது; அநாதிகாலமாய் இருந்து வருகிறதென்று கூறினீர். இத்தன்மையான உலகத்தின் சுவபாவத்தை வரையறையுள்ள மனிதனால் வரையறையுள்ள மனதைக்கொண்டு சொற்பமான மனித ஆயுளுக்குள் அறிந்து கொள்வது அசாத்தியமாம்; ஆகவே, அதனைத் தாண்டிச்செல்லும் வகை ஐம்புலன்களாகிய வாயிற் கதவை மூடுவதாம் என்று தாங்கள் கூறியது "எறியுங்கடலின் நுகத்துளையில் ஆமைக் கழுத்துப் புகுவதுபோல்" ஆகும்?

விடை:—பிரபஞ்சம் விசாலித் திருத்தலினாலேயே அதன் சுபாவத்தை அறிதல் முடியாதென்றும், அதைத் தாண்டிச்செல்ல வகை ஒன்றுமில்லை யென்றும் கூறுதல் கூடாது; ஏனெனின், ஸ்ரீமாத்வாசாரி கூறுகிறார் "சமுத்திர ஜலத்தின் தன்மையை ஆராய்ந்துணரச் சமுத்திரத்திலுள்ள ஜலத்தின் சில துளிகள் போதுமன்றோ? அதுபோல, உல

கத்திலுள்ள யாதாமொரு பொருள் அல்லது சில பொருள் களைக் கூறுகூறுக்கிப் பரிசோதனை செய்து பார்த்தல் போதுமானது. உதாரணமாக:—ஒரு நாற்காலியை எடுத் துக் கொள்வோம். அதற்கு உருவம், கடிநத்வம் முதலியன உண்டு. அதன் உருவம், ஸ்பர்சம், ருசி ஆகிய இவையாவும் இவைகளை முறையே உணரக்கூடிய கண், மெய் (தொக்கு), நாக்கு இவைகள் இருக்குமளவுமே தோன்றுதல் கூடும். இவ்விதம் உலகமானது தோற்றங்களாலாயதாயின், எந்தத் தோற்றமும், அதனைஉணரக்கூடிய இந்திரியமன்றி, இருக்க இடமில்லை. இஃதன்றியும், இவ்விந்திரியங்கள் வாயிலாக வரும் ஞானங்கள் யாவும் தோன்றுவதற்கு அனுகூலமான அம்சங்களில்,நான் ஓர் அம்சமாகஇருத்தல் வேண்டும். இவை களினின்றும் எவ்விதத்தினுலாயினும் என்னைப் பிரித்துக் கொள்ளல் கூடுமானுல், அப்பொழுது தோற்றங்களாலாய உல கம் நசித்துப்போம்; அஃதாவது அதிர்சியமாய்விடும்.''

**வினு:**—ஜகத்து அநாதி நித்யத்வம் என்று மத்வாசாரி சித்தாந்தப்படுத்தி யிருக்கின்ருரென முன்னர்க் கூறியிருக்க, இப்பொழுது அது நசித்துப்போதல்கூடும் என்று எங்ஙனம் சொல்லலாம்?

**விடை:**—ஈஸ்வரனுடைய எல்லையற்ற மனதில் நிலை பெற்றிருக்கும் தோற்றங்களின் நித்யத்வத்தைத்தான் மாத்வாசாரியார் நம்புகிருர். அந்நிலைக்குக் கீழ்ப்படியிலுள்ள ஜீவனுடைய காலதேச பரிச்சேதம் பொருந்திய வரை யறையுள்ள மனதைப்பற்றிப் பேசுங்கால், அதில் இருக் கும் தோற்றங்கள் அழியுந்தன்மை யுள்ளனவென்று மாத்வாசாரி ஒத்துக்கொள்ளுகின்றனர். இவைகளுக்கெல் லாம் அதீதமாயிருக்கும் பிரதானம் (matter) சாசுவதமா யிருக்கலாம். தோற்றங்களை மாத்திரம் நோக்கின், அவை

சாஸ்வதமானவை எனக் கூறுதல் கூடாது; ஏனெனின், அவைகளை இரண்டு அம்சங்களடங்கியுள்ளனவாகக் கண்டு, அவ்வம்சங்களைப் பிரித்துவிடல்கூடும். எப்பொழுது இவ் விதம் தோற்றம் உடைபட்டுப் போகின்றதோ அதனோடு உலகத்தையும் தொலைத்துவிடலாம்.

வினா:—இஃது எப்படி சாத்தியமாகும்? வாசா கைங் கரியமாகத்தான் இருக்கலாம்?

விடை:—நீ ஓர் ஆசனமிட்டுக்கொண்டு, அதில் அமரிக்கையாக உட்காரு; உன்னுடைய கால்களைத் திரிவதற்கு விடாதே; கைகளை அசையாமல் வை; கண்களை மூடிக் கொள்; சித்திர தீபம்போல அசைவற்று உட்கார்ந்திரு. இப்படி செய்தால், வெளி உலகம் உனக்குத் தோன்றாது.

வினா:—மனதினிடத்தில் உலகம் தோன்றாவிட்டாலும் அதன் சாயையாகிலும் இருக்குமே; இதையுமல்லவா ஒழித்தல் வேண்டும்?

விடை:—நீ கூறுவது வாஸ்தவம்தான். மனதில்தோன்றும் உலகத்தையும்தான் கடந்து செல்லல் வேண்டும்.

வினா:—இந்த உலகத்தை எப்படி தாண்டுவது? மனதானது நிகழ்காலத்திலுள்ள உலகமாத்திரமல்லாமல், சென்ற காலத்து உலகத்தையும் வருங்காலத்து உலகத்தையுமல்லவா ஸ்மரிக்கின்றது?

விடை:—இந்த உலகங்களை ஒழிப்பதற்கு மனதை அடக்கவேண்டுமென்று மாத்வாசாரி கூறுகிறார்.

வினா:—மனதை அடக்குவதனால் என்ன பலன்?

விடை:—ஈஸ்வரன் அநந்தன்; அவர் மனதிற்கு எட்டாதவர். மனிதன் தன்னை ஓர் உருவமுடையவனாக எண்ணு

கிறான். இத்தகைய மனிதன், ரூபமற்ற ஈஸ்வரன் விஷயத்தில், அன்பு பாராட்டுவது கடினமேயாம். ஆனால் மனிதன், மனோ உலகில் வசிக்கும்பொழுது தனது பெயரையும் ரூபத்தையும் மறந்துவிடுகிறான்; உலகத்தை முற்றிலும் துறந்த பிறகுதான், அவனுக்கு ஆத்ம சம்பந்தம் நேரிடுகிறது. உலகத்தையும் அது தரும் மனோரம்யப் பொருள்களையும் துறப்பது கஷ்டந்தான். இது முடியாத காரியம்போல அவனுக்குத் தோன்றுகிறது. ஆனால், அவன் அது முடியாத காரியம் என்று எண்ணுவது பிராந்தியாம். ஆகையினால், உலகத்தை அதிக்ரமித்தும் மனதை அதிக்ரமித்தும் ஈஸ்வரனை நாடவேண்டுமேயல்லாமல் ஸ்தூல வானத்தை அதிக்ரமித்தல்ல ஈஸ்வரனை நாடுவது; ஏனெனின் ஸ்தூல வானத்தை அதிக்ரமித்தல் முடியாது என்று மாத்வாசாரி தமது சிடர்களுக்கு வற்புறுத்திக் கூறியுள்ளார்.

வினா:—இராமாநுஜாசாரியும் மாத்வர் சொன்ன மாதிரியே சொல்லுகிறாரா?

விடை:—ஆமாம்; ஆனால், மாத்வாசாரியார் கொள்கையைப்போல, பிரகிருதி, ஜீவன், ஈஸ்வரன் ஆகிய இவை தன்னந் தனியே இருப்பவைகளல்ல. இவைகள் ஒன்றோடொன்று இணைபிரியாமல் புணைக்கப்பட்டிருக்கின்றனவென்று இராமாநுஜர் கூறுகிறார். இதுதான் வித்தியாசம்.

வினா:—ஈஸ்வரன் உலகத்திற்கப்பாலிருக்கிறார் என்றல்லவா மாத்வாசாரி சொல்லுகிறார். இராமாநுஜர் என்ன சொல்லுகிறார்?

விடை:—ஈஸ்வரன் அந்தர்யாமியாயிருக்கிறார் என்பது இராமாநுஜர் சித்தாந்தம்; ஒவ்வொரு அணுவின் உள்ளிலும் புறம்பிலும் ஈஸ்வரனிருக்கிறார் என்று இராமாநுஜர் கூறி-

கிறார். இந்த வித்தியாசம் இருந்தபோதிலும், அனுஷ்டான பாகத்தில் இவர்களுடைய அபிப்பிராயம் வித்தியாசப்படுவ தில்லை.

வினு:—எப்படி ? விளக்கிக் காட்டல் வேண்டும்?

விடை:—ஈஸ்வரன் உலகத்திற்கு வெளியே இருப் பினும் அல்லது அந்தர்யாமியாக இருப்பினும் அவர் உலக மல்லவென்று இருவரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். ஆகை யால், உனக்கு வேண்டியதை நீ அடையவேண்டுமானால், நீ உலகத்தை அதிக்கிரமித்தே செல்லல்வேண்டும்.

வினு:—எப்படி உலகசம்பந்தத்தை விடுவது ?

விடை:—உலக சம்பந்தத்தைத் தருவதற்கு ஹேது வான ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை அடக்குவதால், உலக சம்பந்தம் நீங்கும்.

வினு:—உலகசம்பந்தத்தை நீக்குவதால் என்ன பிர யோஜனம் ?

விடை:—உனக்கு வேண்டியவை ஞானமும் இறவா மையுமே யல்லவா ? இவைகளைக் கொடுக்கக்கூடியவர் ஈஸ்வ ரனைவிட உலகத்தில் எவரும் இல்லை. அவர்தான் சொத்துக் குரியவர்; நீதான் அவர் சொத்து. உனக்கு வேண்டியயாவும் அவரிடமிருந்து பெறமுடியுமானால், அவரை அறிவாயாக. மாத்வாசாரியரும் இராமாநுஜாசாரியரும் தங்கள் சித்தாந் தங்களில் வேறுபட்டாலும், அனுஷ்டான பாகத்தில் அபிப் பிராய பேதம் உடையவரல்லர். இவ்விருவரும் "மனதினிடத் திற்குத் திரும்பிப்போ; மனதிற்கு அப்பாலும் செல்வாயாக" என்று பறைசாற்றுகின்றனர்.

வினு:—சங்கராசாரியரும் இப்படியே தான் சொல்லு கிறாரோ ?

விடை:— இவரது சித்தாந்தம், மாத்வாசாரி இராமா நுஜாசாரி ஆகிய இவர்களுடைய சித்தாத்தங்களுக்கு மாறு பட்டதே.

வினு:—எப்படி?

விடை:—சங்கரர் சித்தாந்தத்தின்படி உலக மானது இடைவிடாமல் மாறிக்கொண்டேயிருப்பதால், அதனது தத்வத்தைக் கண்டறிவது அசாத்தியம். அதற்கு ஒருவித இருப்பு உண்டு. ஆனுல் அதைச் சத்தென்ருவது அசத்தென்ருவது சொல்லல் முடியாது; ஏனெனின், அது சத்தாமாயின், அதன் அபாவம் எப்பொழுதும் நிகழ்தல் கூடாது; அதன் அபாவம் நிகழுமாயின், சூன்யத்திலிருந்து பொருள்களின் உற்பத்தி சம்பவிக்கும். இஃது அவிவேகமாகும். வாஸ்தவத்தில் உலகமானது க்ஷணத்திற்கு க்ஷணம் மாறிப் புதுத் தோற்றங்களுக் கிடங்கொடுக்கின்றது. ஆகையினுல், உலகம் இருக்கிறதென்றும் சொல்ல முடியாது; இல்லை யென்னும் கூறல் இயலாது. ஏககாலத்தில் இருத்தலும் இல்லாததும் பொருந்தா. ஒரு பொருள் ஏககாலத்தில் நித்யமாயும் அநித்யமாயும் எப்படி இருத்தல் கூடும்? தோற்றங்களின் இவ்வித நிலைமையையே **மாயை** என்பர்.

வினு:—ஜீவனைப்பற்றிச் சங்கரர் என்ன சொல்லுகிருர்?

விடை:—"நான் யார்" என்று ஒரு கேள்வி கேட்டால், "நான் குற்றங் குறைவுகளுள்ளவன்" என்னும் மறுமொழி உடனே கிடைக்கும். ஆனுல், மனிதனுடைய நிஜ ஸ்வபாவத்தை ஆராய்ந்து உற்றுநோக்கிடின், நான் என்னும் பதத்தால் குறிப்பிடப்படும் பொருளானது தேகத்துக்கும் மனதிற்கும் அப்பாற்பட்டதாக விளங்குவதாம்; அன்றிச் சாஸ்வதமான தென்பதும் விளங்குவதாம். மனிதனுடைய

நிஜஸ்வரூபம் குற்றங்குறைவற்ற பூரணத்தன்மையா மென்று அதனைச் சங்கரர் பலவழிகளால் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

வினா:—சங்கரர் கூறியிருக்கும் நியாயங்களைக் கேட்க ஆவல் கொண்டிருக்கிறேன்; தயவுசெய்து சொல்லல் வேண்டும்?

விடை:—அவர் என்ன சொல்லுகிறாரென்றால்:—நான் தேகமல்ல; தேகம் என்னுடையது; நானும் தேகமும் ஒன்றல்ல. தேகம் மனம் இவைகளிரண்டிற்கும் இடையே யிருக்கும் ஜீவன் ஆகிய இம்மூன்றும் சேர்ந்தவை மனிதன். முதல் இரண்டும் மாறுந்தன்மையானவை; மூன்றாவதோ மாறாத தன்மையது. ஏனெனின், குழந்தைப் பருவம் முதல் தற்காலம் வரைக்கும் இருந்த ஜீவன் இருந்துகொண்டே தான் இருக்கின்றான்; இவனது தொடர்ச்சிக்குப் பங்கம் நேரிடுவதில்லை.

வினா:—இதனால் பெறப்படுவது யாது?

விடை:—மாறுதல் என்பது, ஒன்றன்மரணமும் மற்றொன்றன் ஜனனமுமாம்; ஒன்று போவதும் மற்றொன்று வருவதுமாம்; ஒன்றன் தொடக்கமும் மற்றொன்றன் முடிவுமாம். ஆகையினால், மாறுதலற்றது என்று கூறின், அஃது ஆதியும் அந்தமும் அற்றதாம்; அஃதாவது சாஸ்வதமானதாம். ஆகையினால், "நான்" என்னும் பதத்தால் சூசிப்பிக்கப்படும் பொருள் தேகத்துக்கும் புத்திக்கும் அப்பாற்பட்டதாயிருப்பதுடன் சாஸ்வதமாயுமுள்ளது; எல்லையற்றதாயுமுள்ளது.

வினா:—இத்தகைய பொருள் ஒன்றா? பலவா?

விடை:—தேகத்துக்கும்மனதுக்கும் அப்பாற்பட்டதும் எல்லையற்றதுமான வஸ்து எப்படி இரண்டு அல்லது பலவாக

இருத்தல் கூடும்; ஒன்ருகத்தான் இருத்தல் வேண்டும். "நான்" என்னும் சப்தத்திற்குப் பொருளாயிருப்பது தேகத்துக்கும் மனதிற்கும் அப்பாற்பட்டிருக்கும் சைதன்யமேயாம். ஏனைய உயிர்களைப்பற்றிய உண்மையும் இதுவேயாம். இதைத்தான் அத்வைத வாதமென்பர். "ஓ பிரியனே! சிருஷ்டியில்லாதபொழுது இருந்தது ஒரே ஆத்மா; இரண்டாம் வஸ்துவே இல்லை. ஜீவர்களெல்லாம் இந்த ஏகான்மாவின் சாயைகளாவார்கள்"—என்று சுருதி கூறுகின்றது.

வினு:—இத்தகைய ஆன்மாவின் பரிமாணம் என்ன? சங்கரர் அதுபற்றி யாது கூறுகின்ருர்?

விடை:-அவர் "மஹத்துக்கெல்லாம் மஹத்து" என்று சொல்லுகிருர்; ஏனைய தத்துவ சாஸ்திரிகளைப் போல "அணுவுக்கெல்லாம் அணு" என்று சொல்லவில்லை.

வினு:—இந்த இரண்டுவித அபிப்பிராயங்களையும் பொருந்த வைப்பது எப்படி?

விடை:—அதிக சூடும் அதிக குளிர்ச்சியும் எப்படி ஒரே தன்மையனவோ அப்படியே மஹத்துக்கெல்லாம் மஹத்தானது அணுவுக்கெல்லாம் அணுவாகும். இவ்விதம் உபநிஷத்துகள் போதிக்கின்றன. இவைகளைச் சற்று ஆழ்ந்து ஆலோசித்துப் பார்த்தால், சங்கரர் சொல்வதற்கும், மாத்வர் இராமாநுஜர் ஆகிய இவ்விருவர் கூறுவதற்கும், வித்தியாசமில்லையென்பது விளங்கும். ஒரேவித அனுஷ்டானத்தைத்தான் எல்லா ஆசாரியர்களும் கூறியிருக்கின்றனர். சித்தாந்தக் கொள்கைகளைச் சுவானுபவமடையப் பொருந்தச்செய்யும் மார்க்கத்தில் வித்தியாசமில்லை; அஃதாவது தேகத்தையும் மனதையும் கடந்தாற்ருன் மோக்ஷ நிலையை யடைதல் முடியும் என்று எல்லா ஆசாரியர்களும் கூறுகிருர்கள்.

வினா:-ஹிந்து மதத்தில் பல பிரிவினர்களிருந்த போதி லும், அப்பிரிவினர் எல்லோரும் விதித்திருக்கும் அனுஷ் டானமொன்றே என்று தெரிந்துகொண்டேன். கிருஸ்து மதமும் அங்ஙனமே கூறுகின்றதா?

விடை:—இந்தியா தேசத்திற்கு மேற்கில் வெகு தூரத்தில் பாலெஸ்டைன் என்னும் ஒருநாடு உளது. இவ் விடத்தில் மோஸஸ் என்பவர்க்குக் கடவுள் முதல் முதல் தரிசனம் கொடுத்தார். இந்தத் தீர்க்க தரிசியாகிய மோஸஸ் என்பவருடைய அபிப்பிராயத்தின் பிரகாரம், கடவுள் ஒரு வரே. அவரிடமிருந்து உலகங்களும் ஆன்மாக்களும் வெளி யாயின. கடவுள் தமது சங்கற்பத்தால் எல்லாவற்றையும் சிருஷ்டித்தார். ஆன்மாக்களும் பிரகிருதியும், நித்திய தத் துவங்களென்று மோஸஸ் நம்பவில்லை. "கடவுள் நித்தியர்; சாஸ்வதர். அவர் எல்லாவற்றிற்கும் சிருஷ்டி கர்த்தா வென்று எண்ணி, அவரைத் தொழுதல் வேண்டும். இது மனிதனுடைய கடமை. அவரையடைய வேண்டுமாயின், மற்றெல்லாவற்றையும் விட்டு விலகிச் செல்லல்வேண்டும். ஜகத்தையும், தேவதூதர்களையும் இன்னும் இதர ஆன்மாக் களையும் அவர் தாம் உற்பத்தி செய்தார். இவைகளை ஒருவி, அவரிடம் செல்லுவதே நமது பிரதமக்கடமை. கடவு ளைச் சிந்தித்து வழிபடல் வேண்டும். அவர்க்குக் கீழ்ப் படிந்து நடத்தல் வேண்டும். அவர் தமது தீர்க்கதரிசிகளின் மூலமாக வசனிக்கிறார்; நம்மனோரது உள்ளத்திலிருந்தும் வசனிக்கிறார். எல்லாருள்ளத்துமிருந்து எல்லாரையும் ஆட்டு விக்கிறவர் அவரே. ஆகையினால், எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவன் அந்தர்முக விருத்தியில் ஈடுபடுகிறானோ, அவ்வள வுக்கவ்வளவு, அவன் கடவுள் அண்மையிலிருப்பவனாகி,

குறைந்த பிழைகள் செய்பவனுவான்'' என்று இவ்வாருக மோஸஸ் கூறியிருக்கிருர்.

வின:—இதனுல், மோஸஸ் பக்திமார்க்கத்தைப் புகட்டினுரென்பது தெரிகிறது?

விடை:—அவர் புகட்டினது ஓர்வித பக்திதான்; ஆனுல், பிரேமபக்தியைப் புகட்டினுரென்று கொள்ளுதல் கூடாது; ஏனெனின், மோஸஸ் என்பவர், கடவுளால் வெளியிடப்பட்ட நீதிசட்டங்களுக்குக்கீழ்ப்படிதல் வேண்டுமென்றும், எல்லாச் சேவையினும் கடவுள் சேவையே சிறப்பானதென்றும், கடவுள் தமது சிருஷ்டியினின்றும் வேருனவரென்றும் போதித்தபடியால், கர்மயோகத்தை மோஸஸ் போதித்தார் என்று சொல்லலாம். கடவுளுக்குச் சேவைசெய்ய வேண்டுமானுல், அவரது சிருஷ்டியைவிட்டு விலகிச் செல்லல்வேண்டும். அப்பொழுதுதான் அவரது அருகேயிருந்து சேவை செய்தல் முடியும்; அஃதாவது அந்தர்முக விருத்தியை யடைதலாம்; இல்லாவிடின், அவர் அருகே செல்லல் முடியாது; அவரது சேவையில் நிரந்தரமாயிருத்தலும் முடியாது.

வின:—கிருஸ்துவும் இப்படியே போதித்தாரா?

விடை:—இவர் மோஸஸ்ஸைப்போல, கர்மயோகத்தை அவ்வளவு அதிகமாகப் போதிக்கவில்லை. மோஸஸ், கிருஸ்துவைவிட, அதிக இராஜதவிருத்தி யுடையவர் என்பது நமது அபிப்பிராயமாம். கிருஸ்து சாத்வீகவிருத்தி யுடையவராகையால், கடவுளைத் தம்முள்ளே சாக்ஷாத்கரித்தனர்; மோஸஸ், தமக்கு வெளியே, ஒருபுதரில் கடவுளைச் சாக்ஷாத்கரித்தனர். மோக்ஷ உலகம் தம்முள்ளிருக்கின்றதென்று கிருஸ்துசுவானுபவத்தில் ஓர்ந்துணர்ந்தார். மோக்ஷஉலகம்உள்ளேயிருக்குமாயின், கடவுளும் உன்னுள்ளேயேயிருக்கிருர். அப்

படியாயின், அவரை முழுமனதுடனும் அத்தியந்த பக்தியுடனும் நேசிக்க வேண்டுமானால், உனக்குள்ளே நீ சென்று அவரை உனது இருதயகமலாசனத்தில் வீற்றிருக்கச்செய்து தொழுதல் வேண்டும். ஆகையினால், மோஸஸூம் கிருஸ்துவும் போதித்த மார்க்கங்களும், மாத்வர், சங்கரர், இராமானுஜர் போதித்த மார்க்கமேயாம் என்பது, உனக்கு நன்கு புலப்படல் வேண்டும். நீ கடவுளை ஸ்வாநுபவத்தில் அடைய வேண்டுமானால், உனது திருஷ்டியை உள்முகப்படுத்தல் வேண்டும்.

வினா:—இவ்வித உள்முக விருத்தியின் அவசியத்தை மஹம்மதும் பிரதிபாதித்தனரா?

விடை:—ஆம். மஹம்மது ஒரு பெரிய ஈச்வரபக்தர். தமது காலத்தில், தாம் வாழ்ந்துவந்த ஊரில் பரவி வந்த மதம், அவர் மனதிற்குச் சம்மதமில்லாததா யிருந்தது. அவர் ஸிரியா தேசத்துக் கடைகளுக்குப் போவதுண்டு. அவ்விடத்தில் விக்கிரகங்களைப் பார்த்து "இவை எப்படி கடவுளாம். கடவுளை மனிதர் சிருஷ்டித்தல் முடியாது" என்று தமக்குள்ளே சிந்திப்பார். அவர் பின்னுளில் கோடிஜா என் போனிடத்தில் ஆடுமாடு மேய்க்கும் வேலை செய்திருந்த பொழுது, மந்தைகள் மேய்ந்து கொண்டிருக்கையில் மெக்கா பட்டணத்தருகிலுள்ள ஹாராமலையிலுள்ள குகையிற் சென்று கடவுளைத் தியானித்துத் தமக்கு ஞானத்தைக் கொடுக்கும்படி பிரார்த்திப்பார். ஒருநாள், ஈச்வரன் அருளினால் அவருக்கு ஒரு ஜோதி தோன்றியது; உடனே, அவர் கேப்ரியல் என்னும் தேவதூதனால் 7-ம் சுவர்க்கலோகத்திற்குக் கொண்டுபோகப் பட்டார். அவர் 7-துணியினால் தமது கண்ணைக் கட்டிக்கொண்டார்; அப்படி செய்தும் அந்த ஜோதி அவருக்குத் தோன்றிக்கொண்டே யிருந்தது. இந்த

விஷயம் எதைத் தெரிவிக்கின்றது? அவருக்குத் தோன்றிய ஜோதி அவர் மனதினுள்ளே தோன்றினது; அவருடைய மனதானது ஞானத்தால் விளக்கப்பட்டது என்பதைத் தெரிவிக்கின்றது.

விஞ:—கடவுளை அடைய வேண்டுமானல், உலகத்தைத் தாண்டிச்செல்லல் வேண்டுமென்பது மேற்சொன்ன விர்த்தாந்தத்திலிருந்து எப்படி பெறப்படும்?

விடை:—அவர்தமக்கு எப்பொழுது இந்த ஜோதி உதயமாயிற்றோ அப்பொழுது முதற்கொண்டு, அவர்வாயிலிருந்து வந்த வாக்குகளெல்லாம் தெய்வீகமாக விருந்தன. அக்காலத்திலிருந்த மேதாவிகள் அவ்விதச் சொற்களைக் கூறவில்லை. கொரானை வாசித்தால், மகம்மதின் வாயிலிருந்து வந்த சொற்கள் அருள் வாக்கியங்களென்று கூறச் சங்கை வேண்டியதில்லை; மகம்மது கல்வி யில்லாதவர்; அப்படியிருந்தும், கடவுளே அவர் வாக்கிலிருந்து பேசினர் என்று நம்பும்படியாக, அவ்வளவு வசீகரமாயும் அவ்வளவு பரிசுத்தமாயும் அவ்வளவு பக்தியாயும் திடச்சித்தத்தைஊட்டுவ்தாயும் அவை இருக்கின்றன. உண்மை ஞானமானது ஆத்மாவில்உறைந்திருக்கின்றதென்றும், அவ்வாத்மாவானது ஜீவனுடைய மனதுக்கு அப்பாலுள்ளதென்றும், அந்த ஆத்மாவில்தான் ஈஸ்வரனுடைய சமஷ்டிமனது ஜீவர்களின் வியஷ்டி மனங்களையெல்லாம் கொள்ளைகொண்டு வீற்றிருக்கிறதென்றும், அவருடைய வாக்கிலிருந்து வந்தசொற்கள் நிரூபிக்கின்றன. இதனல், மோக்ஷமடைவதற்கு அனுஷ்டானம் ஒன்றேயென்பதும், அந்த அனுஷ்டானம் அந்தர்முகநோக்கி வீடுபடுதல் என்பதும், கரதலாமலகமென விளங்குகின்றன.

வினு:—பௌத்த மதமென ஒரு மதமிருக்கின்றதென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன் ; அது ஈஸ்வரனைப் பற்றிப் பிரதிபாதிக்கிறதில்லையென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த மதமும் உள்நோக்கைப்பற்றிக் கூறுகிறதா? இதைத் தயவுசெய்து தெளிவுண்டாக உரைத்தல்வேண்டும்.

விடை:—பௌத்தமதம் அத்தியந்தம் யுக்தி பூர்வகமாயிருப்பதாம் ; ஆயினும், ஹிந்து மதத்தின் லக்ஷியார்த்தமெதுவோ, அதுவேதான் பௌத்தமத லக்ஷியார்த்தமும். "பௌத்தமதம், ஹிந்துமதம் ஈன்றெடுத்த குழந்தையாகும்; ஹிந்துமத விஷயத்தில் விரோத பாவனைகொண்ட குழந்தையாகும்: பௌத்தர் உண்மையில் ஹிந்துவே" என்று சுவாமிவிவேகானந்தர் கூறி யிருக்கின்றனர். துக்க நிவிர்த்தியாகியநிர்வாண தசையை இவர் போதித்தார்; இதை அடைவதற்கு உலகத்தைத் துறந்து மனதுக்கப்பால் செல்லல்வேண்டும் என்று தர்க்கவாயிலாகச் சாங்கோபாங்கமாக யாவரும் எளிதில் அறிந்துணருமாறு பிரசங்கஞ் செய்தனர்.

வினு:—இவரது சரித்திரத்தையும், இவர் நிர்வாண தசை அடைந்ததையும், அதை அடைவதற்கு அவர் அனுஷ்டித்த உபாயங்களையும் அறிய விரும்புகிறேன். அன்புகூர்ந்து சொல்லல் வேண்டும்.

விடை:—வாழ்நாள் துக்கத்துக்கும் அழிவுக்கும் உட்பட்டதென்று இளமைப் பருவத்திலேயே ஓர்ந்து, சாஸ்வதமாயும் குறைவற்ற நிறைவாயுமுள்ள பேராநந்தப் பெருவாழ்வைக் கண்டுபிடிக்கப் புத்தர் ஆசை கொண்டனர் ; அதனால், தம் அரண்மனையைத் துறந்து, மரணத்தினின்றும் தப்பித்துக் கொள்வதற்குச் சக்தியைக் கொடுக்கக்கூடிய நிரதிசயாநந்த வாழ்வைத் தரவல்ல மார்க்கத்தைக் கண்டுபிடிக்க

ஆவல்கொண்டு, காட்டுக்குள் தனிமையாய்ச் சென்று தபசு செய்ய ஆரம்பித்தார்; ஆகாரத்தை அதிகமாகக் குறைத்துத் தமது தேகத்தில் எலும்பு மாத்திரம் தோன்றக்கூடிய அவ்வளவு ஸ்திதியை அடைந்தார். ஒருநாள் அவர் ஒரு அசரீரி வாக்கைக் கேட்டார். அந்த அசரீரி என்ன சொல்லிற்றென்றால், "இந்த உயிரோடிருக்கும் தேகமானது ஒரு வீணையைப் போன்றது; வீணையிலிருக்கும் தந்திகள், போதுமானமட்டும் உறுதியானவைகளாயிருந்து தகுந்த அளவு முடுக்கப்பட்டால்தான் சரியான சுரத்தைத் தரும்; இங்ஙனமன்றி அதிகமாக முடுக்கினால் அதன் தந்திகள் அறுந்து போம்; மிகத் தளர்ச்சியாக வைத்தாலும் சுரம் உண்டாகாது" என்று சொல்லிற்று. அவர்தப்பிதமின்னதென்பதை, இந்த அசரீரிவாக்கு அவருக்குச் சுட்டாமல் சுட்டிக் காட்டிற்று. அவர் தம் உபவாசத்தை விட்டுவிடத் தீர்மானித்து விட்டார். சாப்பிடுவதற்கு அவர்க்கு ஏதாவது வேண்டியதாயிருந்தது. அந்தச் சமயத்தில் ஒருமாது ஒரு பொன் கிண்ணத்தில் பாயசம் கொண்டுவந்து அவர் முன் வைத்துத் தண்டம் சமர்ப்பித்தாள். அவர் அந்தப் பாயசத்தை அதிக மனக்களிப்புடன் பருகி அந்தப் பொன் பாத்திரத்தை ஆற்றில் எறிந்துவிட்டார். மாலைப் பொழுது நெருங்கியது. எங்கும் நிசப்தமானது பரவியிருந்த அவ்வேளையில், அவர் புல் அறுப்போன் ஒருவனைக் கண்டார்; அவனிடத்திற் கொஞ்சம் புல்லை வாங்கித் தரையில் பரப்பி ஆசனம் செய்துகொண்டு, நான்கு பக்கமும் சுற்றிப் பார்த்தார்; பிறகு அவ்வாசனத்தில் அமர்ந்து "இந்த ஆசனத்தில் எனது உடம்பு வற்றிப்போனாலும் போகட்டும், எனது சர்மம் சதை எலும்புகள் அழிந்துபோனாலும் போகட்டும், அநேக ஜன்மங்களாக நான் அடையவேண்டுமென்று கஷ்டப்பட்டுக்

கொண்டு வந்த அந்த ஞானத்தை, எனது ஸ்வானுபவத்தி லடையாமல் இந்த இடத்திலிருந்து நான் எழுந்திருக்க மாட்டேன்" என்று கெட்டியாய்த் தீர்மானஞ் செய்துகொண் டார்; இதன் பின்னர்த் தமது இந்திரியங்கள் எல்லாவற் றையும் மூடிக்கொண்டார். இரவில் முதல் சாமத்தில் பயங் கரமான சந்தடிகள் அவர் காதில் பட்டன; இரண்டாம் ஜாமத்தில் காட்டு மிருகங்கள் அவர்மீது விழுவதுபோல் அவரைப் பயப்படுத்தின; பிசாசங்களும் பூதங்களும் தத் தம் அகோர ரூபங்களால் அவரை வெருவச்செய்யத் தம் மால் கூடியமட்டும் முயன்றன. ஆனால், புத்தர், இவை யாவும், அந்தகார அரசனான மாராவின் செயலென்று உணர்ந்து இவைகளைச் சட்டைசெய்யவில்லை. தனது செய்கை நிஷ்பிரயோஜனமானதைக் கண்ணுற்ற மனித சத்துருவாகி ய மாரா, பௌத்தருடைய நற்குணங்கள் மூலமாகத் தன் காரியசித்தி எய்தமுயன்றான். அவன்பௌத்தரது தள்ளாமை யுடைய தந்தையின் உருக்கொண்டு பௌத்தர்முன் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக நின்று "ஓ குமாரனே! நான் இப்பொழுது மிகவும் எளியவனாயிருக்கிறேன், என்னையாரும் ஆதரிப்பாரில்லை; எனக்கு வந்து உதவி செய்; என்மீது உனக்கு ஆசை இல்லையா?" என்று சொன்னான். "மாரா! இவை எல்லாம் உன் செய்கை" என்று புத்தர் சாந்த மாய்க்கூறிச் சும்மா இருந்துவிட்டார். பிறகு குழந்தையைக் கையிற்கொண்டு புலம்பிக்கொண்டிருந்த அவரது மனைவி போலப் புத்தர் முன் மாரா தோன்றினான். அத்தோற்றம் கல்நெஞ்சும் உருகக்கூடிய காட்சியாக இருந்தது. இது வும் மாராவின் சூதே யென்று புத்தர் முற்றிலும் உணர்ந்த வராகித் தமது சமத்வ நிலையிற் பிறழாதிருந்தார். மூன்றாம் ஜாமத்தில் சர்வ லோகங்களுக்கும் செல்லுதற்குரிய சக்தி

யைத்தரத்தக்க அநேக வித்தைகளும் அஷ்டமாதி சித்திக ளும் அவர்முன் தோன்றி அவரை மயக்க முயன்றன; மேல் லோகங்களிலிருந்து தேவர்கள் வந்து தங்கள் இருப்பிடத் திற்கு வரும்படி அவரை அழைத்தனர். இவற்றினால் புத்தர் மனம் சற்றேனும் சலனமடையவில்லை. நான்காம் ஜாமத்தில் எல்லா உலகங்களையும் கடந்து ஒப்புயர்வின்றி இடையறாது விளங்கும் ஞான பூமியிற் பிரவேசித்துச் சர்வதுக்க நிவாரண மாகிய நிரதிசயாநந்த நிர்வாண நிலையை யடைந்தார்—புத்த தேவர்; இதற்குள்ளாகத் தினகரனும்இருளைத்துறந்துதனது தூயவொளியால் உலகத்தைப் பிரகாசிக்கச் செய்தான். புத்தர் அடைந்தஞான சூரியனோ,நிர்வாண சுகமாகியவெளிச்சத்தை அவரது இருதயத்தில் பரவச்செய்தான்; அதனால், பகிர் லோகமும் அந்தர்லோகமும் சுகானந்த வெளிச்சமாகிய சாகரத்தில் மூழ்கின; எல்லாம் ஆநந்தமயமாய் விளங்கின. நிர்வாணசுகத்தை அடையவேண்டுமானால், உலகத்தைவிட்டு உள்நாட்டங் கொள்ளவேண்டுமென்பது, புத்தர் சரித்திரத் தாலும் அவரது உபதேசமொழிகளினாலும் நன்கு விளங்கு கின்றது.

வினா:—அவருடைய சரித்திரம்தான் இது வரைக் கும் சொல்லப்பட்டது. கடவுளைப்பற்றிப் புத்தர் ஒன்றும் சொல்லாமையால், அவர் என்ன போதனைகளைச் சொல்லி யிருக்கப்போகிறார்? நிர்வாண சுகம் என்பது சூன்யம்போல் தோன்றுகிறது, அவர் இதை யடைவதற்க்உலகத்தைநீத்து உள்நோக்கில் போதல் வேண்டுமென்று கூறியிருப்பார்?

விடை:—அவர் சாகாரகக்கடவுள் உண்டென்று போ திக்கவில்லை; ஆனால், கர்மம் உண்டென்று போதித்தார். சுபகர்மம் புண்ணியத்தையும், அசுப கர்மம் பாபத்தையும் விளைவிக்கின்றன; ஆகையினால்,அசுபகர்மங்கள் எல்லாவற்றை

யும் விட்டுவிடல் வேண்டும், சுபகர்மங்களைச் செய்தல்வேண்டும் என்று போதித்தார். அவர் சத்கர்மங்களைச் செய்ய வேண்டுமென்று போதித்தபடியால்,கடவுளைப்பற்றி நேராகப் போதிக்காவிட்டாலும், அதனைக் கௌணமாகப் போதித்தாரென்பது நமக்குத்தெரிகிறது. கர்த்தாவன்றிக் கர்மம் கிடையாது. அவர் சுபகர்மத்தைப்பற்றிப் போதித்தமையால் ஒரு புண்ணிய கர்த்தாவைப்பற்றியும்போதித்தாரென்றுஎண்ணல் வேண்டும். இப்பூ மண்டலத்தில் குற்றங்குறை வில்லாத கர்மங் கிடையாது; குற்றங் குறைவில்லாத மனிதனுமில்லை. ஆகையினால், எவனொருவன் கெடுதி சிறிதேனும் சம்பந்தமில்லாதநன்மையை அஃதாவது புண்ணியத்தைச்செய்யவல்லவனோ அவனே கடவுளாவான். ஆகையினால்,பௌத்தர் சத்கர்மத்தைச் சனங்களுக்கு இலக்ஷியார்த்தமாகக் காட்டினாரென்றால், சுத்த சத்கர்த்தாவையும் இலக்ஷியார்த்தமாகக் காட்டியிருத்தல் வேண்டுமென்பது பெறப்படுகிறது.

வினா:—சுத்த சத்கர்மா வாகிய இலக்ஷ்டார்த்தத்தை எப்படி சாக்ஷாத்கரிப்பது?

விடை:—பரோபகார சத்கருமங்களைச் செய்து, அவைகளின் வழியாய்க், சர்மநியதியோடு நம்மைப் பொருந்தச் செய்துகொள்வதனால் அதனை, சாக்ஷாத்கரிக்கலாம். இந்தச் சாக்ஷாத்காரம் செய்வதற்கு மனிதன் உள்முகந்தான் செல்லல் வேண்டும்.

வினா:—உள்முகம் செல்லல் வேண்டுமென்பது அவசியமில்லை; ஏனெனின், ராஜாங்கநீதி சட்டத்தோடு நம்மைப் பொருந்தச்செய்வதற்கு உள்முகவிருத்தி அநாவசியகம் என்பது எல்லாருடைய அனுபவமாம்.

விடை:—சத்கர்மங்கள் அப்படியல்ல; அவை ஒரு மனிதன் உள்ளிருந்து வரவேண்டியவை; ஆகையினுல், உள்முக நோக்கம் அவசியமாம். எவ்வளவுக்கெவ்வளவு நீ உன்னுள் செல்லல்முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு, விஷய போகங்களில் உனக்கிருக்கும் பற்று குறைந்துபோம்; நிர்வாண நிலையைச் சாக்ஷாத்கரிக்கும் சக்தி உனக்கு உண்டாகும். இதைத்தான் பௌத்தர் உபதேசித்தார்.

ஜயினர்கள், நானக், கபீர், தாது, லேயாட்ஸ் ஆகிய இவர்களும், ஹிந்துமதம் பௌத்தமதம் போலவே தான் தமது மார்க்கத்தைப் போதிக்கிருர்கள்; ஆகையினுல், இவர்கள் போதித்த மார்க்கத்தைப்பற்றி விரிவாகச் சொல்லின், அது சொன்னதைச் சொல்வதாகும்.

வினு:—அப்படியானுல், ஜுராஸ்டர்மதம் யாது கூறுகின்றது?

விடை:—இம்மதம் கூறும் அனுஷ்டானமும் மாருனதல்ல. மேற்கண்ட மதங்கள் எதை விதித்துள்ளனவோ அதையே ஜுராஸ்டர் மதமும் விதிக்கிறது. அந்த மதம், உலகத்தில் வியாபித்திருக்கும் கடவுளை **அஹுராமஜ்டா** என்று சொல்லுகின்றது. இந்த **அஹுராமஜ்டா** கல்யாண குணங்கள் நிறைந்தவர். அம்மதஸ்தர், அந்தகாரசக்தியை **ஹரிமான்** என்கிருர்கள். **அஹுராமஜ்டாவுக்கும் ஹரிமா**னுக்கும் அநாதியாகப் பகைமையுண்டு. **அஹுராமஜ்டா**தான் ஆன்மாக்களிடத்தில் ஞானப்பிரகாசத்தை விளைவிக்கும் ஞான தீபமாகும். ஆகையினுல், நம்மைக் கூடா வழியில் நடத்தும் சக்தியையுடைய **ஹரிமானேடு** யாதொரு சம்பந்தமும் வைத்துக்கொள்ளாமல், ஒருவன் தன்னுள்ளே

ஞான நிபத்தைச் சாக்ஷாத்கரித்தல்வேண்டும். இவ்வாருக, தனது கொள்கையை ஜொராஸ்டர் மதம் போதிக்கிறது.

வினு:—தாங்கள் எடுத்துக்கூறிய முக்கியமான மதங்களின் முக்கியக் கொள்கைகள், தம்முள் வேறுபட்டபோதிலும், அனுஷ்டான பாகத்தில், அவை ஒரே மனதாயிருக்கின்றனவென்பதை வெகு தெளிவாகக் காட்டினீர்; ஒவ்வொருவனும் மோக்ஷத்தை அடைய விரும்பினுல், உலகத்தைவிட்டு உள்முகமாய்ச் சென்று கடவுளை யடைதல் வேண்டுமென்றும் எடுத்துக் காட்டினீர். உள் முகமாய்ச் செல்வதால், அடையப்படும் வஸ்து ஒன்ருக இருக்குமா? பலவாக இருக்குமா? எல்லாமதங்களும் மனதுக்கப்பால் ஏதோ ஒரு வஸ்து உளதென்றும், அதை அடைவது பகிர்முகப் பிரவேசத்தால் முடியாதென்றும், யுக்தி பூர்வகமாக எடுத்துக் காட்டியிருக்கின்றனர்; ஆனுல், அவ்வித உள்முக நாட்டத்தால் அடையப்படும் நிலே, ஒன்ரு? அல்லது மதங்களுக்குத் தக்கவாறு பேதமுடையதா? என்னும் சங்கையை நிவிர்த்திக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

விடை:—எல்லா மதங்களும் கடவுளை யடைதல் வேண்டுமென்று கூறுகின்றன என்பது முன்னமே எடுத்துரைக்கப்பட்டது. இந்தக் கடவுளைப் பல மதங்கள் வெவ்வேறு பெயரிட்டழைக்கின்றன. இந்தக் கடவுளை ஈஸ்வரனேன்றும், விஷ்ணுவேன்றும், அல்லாவென்றும் பல மதங்கள் பெயரிட்டழைக்கின்றன. கடவுளுக்குப் பெயரால் வித்தியாசமேயல்லாமல் வஸ்துவால் வித்தியாசமில்லே. பலமதங்களின் கொள்கைகளை உள்வாங்கி அவைகளால் விதிக்கப்பட்ட முறைகளை வழுவற அனுஷ்டித்து, முடிவில் ஸ்வானுபவத்தில் பெறும் நிலேயில் சற்றேனும் வித்

தியாசமில்லையென்று ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் உலகத்தாருக்கு வெளியிட்டார். இவர் சாஸ்திரஞான நிபுணரல்லராயினும், ஐம்புலன்களையு மடக்கிப் பல மதங்கள் விதித்துள்ள நெறியில், அந்தந்தமத ஆசாரியர்கள் உபதேசித்த வண்ணம் நின்று ஆத்ம அனுபூதி யடைந்தார்; இவ்வண்ணம் பலமதங்களை அனுசரித்தமையால் அவர் அடைந்த நிலை ஒன்றேயாம்; ஆகையால் ஒவ்வொரு மதஸ்தனும் தன் மதமே சரியென்றும் மற்றமதங்கள் தப்பென்றும் கூறுவதற்குச் சுதந்தர மற்றவனாகிறான். இப்பூமண்டலத்தில் எத்தனை ஜீவர்களுளரோ, அத்தனை மார்க்கங்கள், கடவுளை அடைதற்கு உள. ஒவ்வொருவனும் தனக்குத் தகுந்த மார்க்கத்தைப் பிடித்துச் செல்வதற்கு யாதொரு தடையுமின்றாம். இதைத்தான் நமது ஸநாதநதர்மம் உரைக்கின்றது.

வி:—ஸநாதநதர்மம் என்பது ஹிந்து மதமா?

விடை:—இப்பொழுது உலகத்தில் நிலவும் மதங்களுக்கும், இனி வரப்போகும் மதங்களுக்கும் ஸநாதநதர்மம் தாய் போலாம். ஒரு தாயானவள் தன் குழந்தைகளிடத்தில் எப்படி பக்ஷபாதமின்றி இருக்கிறாளோ அப்படி ஸநாதநதர்மமானது மேலோராயினருக்கும் கீழோராயினருக்கும், சாஸ்வதமான சக்தியை யளிக்கும்தன்மை யுடையது. இது சமரச மதம். இதைப் பிரதிபாதித்த ஸ்ரீ கிருஷ்ணர் "என்னை ஒருவன் எவ்விதமாகச் சாக்ஷாத்கரிக்க நாடுகிறானோ அவ்வித சாக்ஷாத்காரத்தை அவன் அடையும்படி நான் செய்கிறேன்" என்று கூறியிருக்கிறார். ஆகவே ஒவ்வொரு மதத்தின் இலக்ஷியார்த்தமும குற்றங்குறைவற்றதென்றும், அந்த இலக்ஷியார்த்தத்தை ஸ்வானுபவத்தில் அடைய விதித்திருக்கும் விதத்திலும் வித்தியாசமில்லை யென்றும், நாம் உணர்தல் வேண்டும்.

வினு.—ஸநாதநதர்மம் ஹிந்துமதமா என்கிற சங்கையைத் தீர்க்கவில்லையே?

விடை:—ஹிந்து மதமென்றாலும் ஸநாதநமதம் என்றாலும் ஒன்று தான். உலகோற்பத்தி முதல் உண்டாயிருந்த பல மதங்களால் பற்பல காலங்களில் அடைந்த எல்லா அநுபவங்களும் மத உணர்ச்சியும் நமது ஹிந்து மதத்தில் அடங்கி யிருக்கின்றன. எல்லா மதங்களையும் கண்ணியப் படுத்துவதால், நாம் உண்மை ஹிந்துக்களாவோம்.

வினு:—அப்படியானால், எல்லா மதத்தினரும் ஹிந்து மதத்தை அவலம்பிக்கலாமே?

விடை:—ஒவ்வொருவனும் அவனவன் சுபாவத்துக்கு இசைய நடத்தல்வேண்டும். பிரகிருதியானது மனிதனுக்குத் தாயைப்போன்றது. ஒரு தாயானவள் தன் குழந்தைகளின் சுபாவ குணத்தையும் தேகத்தின் பாங்கையும் கண்டறிந்து அவைகளுக்கு ஏற்றவாறு உணவு முதலியவற்றைக் கொடுத்து அவற்றைக் காப்பாற்றி வளர்ப்பதுபோல, பிரகிருதியும் மனிதனை மோக்ஷமடையச் செய்கின்றது. ஒருவனுக்கு அவனுடைய மூதாதைகளின் குணமும் தேக வன்மையும் அவனுடைய இரத்தத்தில் ஊறி உரம்கொண் டிருக்கின்றன. அவனது மூதாதைகளின் மனம் எவ்விஷயத்தில் பண்பட்டுத் தேர்ச்சியடைந் திருந்ததோ, அந்தத் தேர்ச்சி வழியாய் அவன் மேன்மேலும் விருத்தியடைவதற்குச் சாத்தியமாகுமே யன்றி, அதற்கு மாறான விஷயங்களில் அவனுடைய மனதைத் திருப்பிப்பழகச் செய்வது பயனில்லாமையாக முடியும். ஆகையினால், ஒரு மனிதன், தனது மூதாதைகள் வழிபட்டு வந்த மார்க்கத்தைக் கடைப்பிடித்தால்,

மோக்ஷத்தைச் சுலபமாக அடைதல் முடியும். அங்ஙன மின்றி, சுபாவத்தில் அமைந்துள்ளதற்கு விரோதமாகச் செய்தால் மகத்தான தப்பிதம் நேரிடும். ஆகையினால், ஒரு மனிதன் தனது மதத்திலேயே பற்றுக்கோடுடையவனு யிருத்தல் வேண்டும். இதைத்தான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் போதித்தார். கிருஸ்தவர்கள் உண்மைக் கிருஸ்தவர்களாகவும், மகம்மதியர்கள் உண்மை மகம்மதியர்களாகவும், விசிஷ்டாத்வைதிகள் உண்மை விசிஷ்டாத்வைதிகளாகவும், அத்வைதிகள் உண்மை அத்வைதிகளாகவும் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தி "எவனொருவன் தனது சொந்த மதத்தில் உண்மையான விசுவாசமுடையவனு யிருக்கிறானே, அவன் முடிவில் கடவுளை அடைவான்" என்றும் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் போதித்தார்.

---

"ஒரு தண்ணீராகிய ஒரு வஸ்துவுக்குப் பலபாஷைகளில் ஜலமென்றும், வாட்டர் (Water) என்றும், பானி என்றும், வாரி என்றும், ஆக்வா (Aqua) என்றும் அவ்வொருவஸ்துவையே எப்படி பல பெயரிட்டுத் தெரிவிக்கிறார்களோ, அப்படியேபரம்பொருள்ஒன்றேயாயினும்பாவனை பேதத்தால் அது பல பெயரிட்டழைக்கப் படுகிறது. ஒரு குளத்தில் இறங்குவதற்கு 4 பக்கங்களில் படிகள் இருக்கலாம். இவ்விறங்கும் படிகளுக்குக் கட்டம் என்று பெயர்; இந்துக்கள் ஒரு கட்டம் பக்கம்சென்று நீரைப்பருகி அவதனை ஜல மென்கிறார்கள்; மகம்மதியர் இன்னொருபக்கம் இறங்கிக் குடித்து அதனை ஜல் என்கிறார்கள். மூன்றும் கட்டத்திற் சென்று பானம் செய்யும் ஆங்கிலேயர்கள் அதனை வாடர் என்கிறார்கள்.

கடவுள் ஒருவரே; பெயர்கள்தாம் பல. சிலர் அவரை அல்லா என்கிறார்கள்; சிலர் காட் (God) என்கிறார்கள்; வேறு சிலர் பிரஹ்மன்என்கிறார்கள்; இன்னும் சிலர்காளி என்கிறார்கள்; வேறு சிலர் இராமர் என்றும் ஹரி என்றும் ஜீஸஸ் என்றும் புத்தர் என்றும் அவரைப்பெயரிட்டழைக்கிறார்கள்". ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

## அத்தியாயம்—2.

### ஜகம்.

வினா:—ஆன்மதத்துவ சாஸ்திரம் எதைப் பிரதிபாதிக்கின்றது.

விடை:—ஆன்மாக்களைப் பற்றியும், அவைகளுக்கும் சர்வலோகங்களுக்கும் இருக்கும் சம்பந்த ஞானத்தைப்பற்றியும் பிரதிபாதிக்கின்றது.

வினா:—பிரகிருதி தத்துவசாஸ்திரம் எதை ஸ்தாபிக்க முயலுகின்றது.

விடை:—சிருஷ்டியின் அந்தர்கதக் கருத்தை வெளியிட முயலுகின்றது.

வினா.—ஜகத்தைப்பற்றி முற்றிலும் தெரிந்துகொள்ளல் எக்காலத்திலாயினும் பிரகிருதி சாஸ்திரத்தால் முடியுமா?

விடை:—முடியாது.

வினா:—பிரகிருதி தத்துவ சாஸ்திரமானது தனது ஆராய்ச்சிக்கு எதனை ஆதாரமாக உடையது?

விடை:—இந்திரிய வாயிலாக உண்டாகும் ஞானத்தை ஆதாரமாக உடையது. மனதுக்கு அன்னியமாகவும் தன்னைத்தானே ஆதாரமாகவும் கொண்ட உலகத்தோடு இந்திரியங்கள் தாக்குவதால் உண்டாகும் ஞானத்தை, பிரகிருதி தத்துவ சாஸ்திரமானது தனக்கு ஆதாரமாகக் கொண்டுள்ளது.

வினா:—இந்தப் பிரகிருதி தத்துவ சாஸ்திரப்படி உலகம் அளவுக்கு உட்பட்டதா அல்லது அளவுக்கு உட்படாததா?

விடை:—இவ்வுலகமானது ஆகாயமென்று சொல்லப் படும் பரவெளியிலிருக்கின்றதென்றும், இவ்வெளிஎல்லையற்ற தாகையால், அதிலிருக்கும் உலகமும் அங்ஙனமே எல்லை யற்றதாமென்றும் பிரகிருதி தத்துவ சாஸ்திரம் கூறு கின்றது.

வினா:—பிரகிருதி தத்துவ சாஸ்திரப்படி, ஜகத்தைப் பற்றிய ஞானம் நமக்கு எப்படி உண்டாகின்றது?

விடை:—இந்திரிய வாயிலாக உலகத்தைப்பற்றிய ஞா னம் உண்டாகின்றது; அதனை நமது மனதில் சேமித்து வைத்திருக்கின்றோம்.

வினா:—அப்படியாயின், நமது இந்திரியங்களும் மன தும் எல்லையற்றனவா?

விடை:—அல்ல; ஏனெனின், உடலை நோக்கின், நாம் 3½ முழநீளமுள்ள மனிதர்களாக விருக்கிறோம். மனதைநோக் கின், அதுவும் அளவுக்கு உட்பட்டதாகத்தான் இருக்கிறது. நமக்கு அநேக விஷயங்கள் தெரியும். தெரியாத விஷயங் களும் பல. எப்படியெனின், "கற்றதுகைம் மண்ணளவு கல் லாதது உலகளவு என்று உற்ற கலைமடந்தை ஓதுகின்றாள்" என்பதிலிருந்து, நமக்குத் தெரியாத விஷயங்கள் எண்ணில என்பது வெளியாகிறது. அஞ்ஞானமென்னும் தகர்க்கப் படாத பெருஞ்சுவர்களால் மனமானது சூழப்பட் டிருக்கின் றது. ஆதலால், மனதானது விபுவன்று; அஃதாவது எல்லை யற்றதன்று. 3½ முழநீளமுள்ள உடலிலிருக்கும் இந்திரியங் களும் வரையறைபற்றனவல்ல.

வினா:—நமது இந்திரியங்களும் மனதும் வரையறைக் குட்பட்டவைகளானால், பிரகிருதி தத்துவ சாஸ்திரத்தின்

படி, அளவற்ற உலகத்தை இவை எப்படி முற்றிலும் கிரகித்தல் கூடும்?

விடை:—கிரகித்தல் முடியாதுதான். அளவுக்குட்பட்ட ராசி ஒன்று, எவ்வளவு பெரிதாக இருந்தபோதிலும், அதனை, அளவுக்குட்படாத, அஃதாவது விபுவாயிருக்கும் இராசியுடன் ஒத்திட்டுப் பார்க்கும்பொழுது அஃது அணுவினும் நுட்பரூபமாகத்தான் இருத்தல் கூடும். விபுவாயிருக்கும் ராசி, அணுவினும் நுட்பரூபமான ராசியைவிட எத்தனையோ கோடிமடங்கு பெரியதாயிருக்க வேண்டுமென்பது ஐயந்திரிபற விளங்க வேண்டும். இத்தகைய அணுவினும் நுட்பமானது கணித சாஸ்திரத்தில் பூஜ்ஜியமாக மதிக்கப்படுகிறது; அஃதாவது அஃது இருந்தும் இல்லாமையில் சேர்ந்ததாம். ஆகையினால், இவ்வுலகத்தைப்பற்றி நாம் தெரிந்து கொள்ளக்கூடிய ஞானம், எஞ்ஞான்றும் மிகவும் அற்பமாகத்தான் இருந்துகொண்டு வரும். இவ்வித அற்ப ஞானம் நிஷ்பிரயோஜனமா யிருத்தலுடன், விபரீத புத்தியையும் விளைவிக்கும். வரையறைக்குட்படாத உலகத்தைப் பற்றி, வரையறைக்குட்பட்ட ஞானேந்திரியம் அந்தக்கரணம் ஆகிய இவைகள், எப்படி பூரணஞானத்தை அடைதல் கூடும்? இவ்விந்திரியங்கள் தரும் ஞானம் அசம்பூரணமாகும். அத்தகைய அசம்பூரண ஞானம், ஞானத்தில் சேராது; ஏனெனின், ஒரு வஸ்துவின் ஏதோ ஒரு சிறு பாகத்தைக் கண்டுவிட்டு, அதனை முழுதும் கண்டுவிட்டோம் என்று எண்ணுவது அறிவீனமாகும்.

வினா:—அஃது எப்படி?

விடை:—ஒரு காலத்தில் நான்கு குருடர்கள், யானை எப்படியிருக்குமென்று தெரிந்துகொள்ள ஆவல் கொண்டவர்

களாய், யானைப் பாகனிடம் சென்று "ஐயா, நாங்கள் குருடர்கள், யானையைத் தொட்டுப்பார்த்து அஃது எப்படியிருக்கிறதென்று தெரிந்துகொள்ள விரும்புகிறோம். எங்களுக்குத் தயவு செய்து விடைதாரும்" என்றனர். யானைப்பாகன் அவ் வேண்டுகோளுக் கிணங்கவே, அவர்களுள் முதல் மனிதன் சென்று யானையின் வயிற்றை ஸ்பரிசித்துப் பார்த்து, யானை இத்தன்மைதயாயிருக்கிறதென்பது, எனக்குத் தெரிந்து விட்டதென்று திருப்தியடைந்து வந்துவிட்டனன்; இரண்டாம்மனிதன் சென்று, அந்த யானையின் கால்களில் ஒன்றைத் தொட்டுப்பார்த்து, அதனுல் தனக்குண்டாகிய ஞானத்தோடு மகிழ்ச்சி யடைந்தனன்; மூன்றும் புருஷன், யானையினிடம் குறுகி அதன் காதைத் தடவிப் பார்த்து யானை இத்தன்மையதென்பது எனக்கு நன்ருகப் புலப்பட்டுவிட்டது என்று களிப்புடன் திரும்பிவிட்டனன்; நான்காம் மதனின் யானையை அணுகி, அதனது துதிக்கையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, யானையின் உருவமுற்றும் எனக்குத் தெரிந்து விட்டதென்று பேருவகையுடன் வந்துவிட்டான். பிறகு இந்நான்கு அந்தகர்களும், தங்கள் அனுபவங்களைத் தங்களுக்குள் எடுத்துரைத்துக் கொள்ளலாயினர். முதல் மனிதன் யானையானது ஒரு பெரிய தண்ணீர்த்தொட்டிபோ லிருக்கிறதென்று கூறினுன்; கூறினமாத்திரத்தில், "அஃது எப்படி இருக்கக்கூடும் ? நான்கூட உம்மைப் போல் தொட்டுப் பார்த்தேன்; அஃது எனக்கு ஒரு ஸ்தம்பம் போலிருந்த" தென்று இரண்டாம் மனிதன் விளம்பினன். இவ்விரண்டு பேர் சொன்னதைக் கேட்டிருந்த மூன்றும் மனிதன் "நீங்கள் இருவர் சொல்வதும் தப்பு ; நானுந்தான் தொட்டுப் பார்த்தேன் ; அஃது ஒரு பெரிய முறம்போல் இருக்கிறது." என்று பதில்

பகர்ந்தான். இவற்றையெல்லாம் கேட்டிருந்த நான்காம் அந்தகன் "சிநேகிதர்களே! நீங்கள் சொன்னயாவும் மிகவும் வியப்பை யுண்டாக்குகின்றன; நீங்கள் கூறுவனயாவும் மிகவும் நூதனமாயிருக்கின்றன; நீங்கள் தொட்டுப்பார்த்த மிருகத்தைத் தொட்டுப் பார்க்கும் புண்ணியம் எனக்குந் தான் கிடைத்தது; அஃது ஒரு பெரிய தண்டம்போல இருந்தது; அந்தத் தண்டமானது அடியில் போகப்போக, ஒரு முழையளவு ஆகும்வரைக்கும் சிறுத்துக் கொண்டே போயிருந்தது; இதுதான் அதன் உருவம் என்று நான் சொல்ல மாட்டுவேன்" என்றான். இவ்வாறாக அந்நான்கு அந்தகர்களும் தத்தம் அனுபவத்தினாலேயே சிடச்சித்தம் பொருந்தினவர்களாய், ஏனையவர்களுடைய அனுபவம் தப்பு என்று கூறிக்கொண்டும், ஒருவரோடொருவர் சச்சரவு செய்து கொண்டும் யானைப்பாகனிடம் சென்று, தத்தம் அபிப்பிராயத்தைக் கூறி, இவைகளில் எது சரியென்று வினவினார்கள். இவர்களுடைய அபிப்பிராயங்களைச் செவிசாய்த்துக்கேட்ட யானைப்பாகன், குலுங்கக் குலுங்க நகைத்து பின்வருமாறு உரைக்கலாயினன்:—"எனது சிநேகிதர்களே! நீங்கள் எல்லோரும் யானை உடம்பின் ஏதோ ஒரு சிறு பாகத்தைத் தொட்டுப் பார்த்துவிட்டு, உடல் முழுவதும் தொட்டுப் பார்த்துவிட்டோமென்று தப்பெண்ணங் கொண்டு விட்டீர்கள். ஆதலால், உங்களுக்கு யானையின் உருவத்தைப் பற்றியுள்ள எண்ணம் முற்றிலும் தப்பு; சற்றும் சரியல்ல; அஃது ஒரு ஸ்தம்பம்போ லிருக்கிறது; ஒரு தண்ணீர்த் தொட்டியைப்போ லிருக்கிறது; ஒரு முறம்போ லிருக்கிறது; ஒரு கனமான தண்டம்போ லிருக்கிறதென்று சொல்வதைவிடத் "தெரியாது" என்று சொல்வது உத்தமம்." பின்னவன் அவர்களுக்கு யானையின் உருவத்தைத்தெளிவாகவிவரித்து உரைத்

தான். அதைக் கேட்டபிறகு, அந்த நான்கு அந்தகர்களும் தங்கள் பிடிவாதத்தைக் கருதி வெட்கமடைந்து போய்விட்டனர். இந்தக் குருடர்களின் நிலைமையைப்போலத்தான், பிரகிருதி தத்துவ சாஸ்திரிகளின் நிலைமையிருக்கிறது. பிரகிருதி தத்துவ சாஸ்திரியின் புத்தி, எவ்வளவு விசாலித்திருந்த போதிலும், ஓர் அளவை யுடைத்தாயிருத்தலின், அவன் அளவில்லாத உலகத்தின் ஒரு பாகத்தை ஆராய்ச்சிக்குட்படுத்தி அதனால் சொற்ப ஞானத்தை யடைகிறான். முழுஞானமடைய எவ்வளவு முயற்சி செய்யினும் அவனுக்கு அது முடியாது. எல்லையுற்ற அந்தக்கரணாதிகளைக் கொண்டு எல்லையற்ற உலகத்தை உணர யத்தனித்தல் நிஷ்பிரயோஜனமாகும்.

வினா:—பிறகு எந்த மார்க்கத்தால், உலகத்தின் பூரண ஞானமடைதல் கூடும்?

விடை:—இந்திரிய வாயிலாகக் காணப்படும் விஷயங்களை (பொருள்களை) ஆதாரமாகவுடைய வெளி நோக்குள்ள மார்க்கத்தை அறவே விடல்வேண்டும். அப்பொழுதுதான் நமக்குச் சகத்தின் சுபாவமும் இலக்ஷணமும் ஐயந்திரிபறப் பூரணமாய்த்தோன்றும்.

வினா:—பகிர்முக நோக்கை ஒழித்து, வேறுவிதமாக ஜகத்தின் இயல்பை அறிந்தவருளரா?

விடை:-கபிலர் என்னும் ரிஷி ஒருவர் இருந்தாரென்றும் அவர் கடவுள் அருளால் சர்வஞ்ஞத்வத்தைப் பெற்று விளங்கி இருந்தாரென்றும் சுவேதாஸ்வதரோபநிஷத்துக் கூறுகிறது. இவர் அந்தர்முக நோக்கால், ஜகத்தின் இலக்ஷணத்தை முற்று முணர்ந்து, பரோபகாரார்த்தமாக ஜனங்களுக்கு அதனை வெளிப்படுத்தினர்.

வினா:—கபிலரிஷியின் சித்தாந்தத்தின்படி ஜகமானது எல்லையற்றதா?

விடை:—அல்ல. உலகமானது எண்ணிறந்த பொருள்களின் சமுதாயமாகக் காணப்பட்ட போதிலும், உண்மையாக உள்ள பொருள்கள், இரண்டேயாம்; அஞ்ஞானத்தால், உலகம் அளவிறந்த பொருள்களின் கூட்டுறவாகக் காணப்படுகிறது. வாஸ்தவத்தில் இருப்பது பிரகிருதி, புருஷன் ஆகிய இவை இரண்டுமேயாம். இவை இரண்டும் அநாதி நித்திய வஸ்துக்கள். இவைகளின் சையோகத்தால் 23 தத்துவங்கள் உண்டாயின. இந்தத் தத்துவங்களின் விகாரத்தாலும், புணர்ச்சியாலும் உலகமுண்டாயிற்று என்று கபில ரிஷி கூறியிருக்கிறார்.

வினா:—இது மேல்நாட்டுப் பிரகிருதி தத்துவ சாஸ்திரத்துக்கு முரணாயிருக்கின்றது. மேல் நாட்டுத் தத்துவ சாஸ்திரத்தின்படி தத்துவங்கள் சுமார் 77 (77 Elements).

விடை:—இந்த 77 தத்துவங்களும் போகப் போக மாறக்கூடும்; ஏனெனின், நாளடைவில் இவைகளில் எத்தனை கலப்புள்ளவைகளாகக் கண்டு பிடிக்கப்படுமோ அறிகிலோம். மேல்நாட்டுச் சாஸ்திரம், முற்கூறிய வண்ணம், இந்திரியங்களால் உணரப்பட்ட வஸ்துக்களின்விஸ்தீரணத்துக்கு இசைய, விசாலித்துக்கொண்டே வரும். இப்படி விசாலித்துக்கொண்டுவருவதற்கு முடிவில்லாமையின், மேல் நாட்டுச் சாஸ்திரம் உண்மையைக் கண்டு பிடித்து விட்டதென்று எப்படி கூறலாம்? கபிலரிஷியினுடைய சாஸ்திரமோவெனின், இந்திரிய விஷயங்களை ஆதாரமாக உடையதன்று. ஆதலின், 25 தத்துவங்கள் என்ஞான்றும் இருக்கக் கூடியவை என்று அவரது சாஸ்திரம் தகுந்த நியாயங்களுடன் பிரதிபாதிக்கின்றது.

வினு:—கபிலரிஷியின் அபிப்பிராயப்படி எத்தனை அம்சங்கள் சேர்ந்தால் ஒரு தோற்ற முண்டாகிறது.

விடை:—மூன்று.

வினு:—அவை யாவை ?

விடை:—(1) அத்தியாத்மம் (2) அதிபூதம் (3) அதிதெய்வமாம். இவற்றுள், தேகந்தோறும் பரப்பிரஹ்மமானது அந்தர்யாமியாயிருத்தலே அத்தியாத்மம் எனப்படும்; கெடுதற்குரியனவாய்ப் பொருந்திய தேக முதலிய சர்வ பதார்த்தங்களும், அப்பதார்த்தங்களை யானென்னும் அபிமானமும், அதிபூதம் எனப்படும்; பந்தமாகப் பொருந்துகின்ற இந்தச் சரீர ரூபமான சர்வ புரங்களிலும் நிறைந்திருக்கும் இரண்ய கர்ப்ப ரூபனான புருஷன் அதி தெய்வமென்று சொல்லப்படும். புருஷனை அத்தியாத்மமென்றும், பிரகிருதியை அதிபூதமென்றும், இவை இரண்டும் ஒன்றாகக்கூடும்படி தெளிவு உண்டாக்குவதை அதி தெய்வமென்றும் சொல்லலாம். ஸ்ரீமத் பகவத் கீதையில் பகவானும் இவ்வாறு கூறியிருக்கின்றார். அது வருமாறு:—

"அந்தக் கரணங் களினின்ற வறிவத் தியாத்ம மாவதுதா
னிந்தப் பிறவி தனையாக்கு மியாகங்கரும மென்பதுதா
னந்தற்கமைந்த வுடம்பதனை நானென் கின்ற ததிபூதம்
பந்தப் படுமிவ் வுடற்கமைந்த புருடன்றெய்வ மெனப்படுவான்."

(இது ஸ்ரீ பட்டனார் மொழி பெயர்ப்பு.)

வினு:—இதை இன்னுஞ் சிறிது நன்றாக விளக்கிக் காட்டல் வேண்டும் ?

விடை:—இந்திரியஞானத்துக்கு, அறிவானும் அறிபடுபொருளும் இன்றியமையாதவையாம். உலகத்தைப்பார்க்க

வேண்டுமானால், அதற்கு அறிவானும், அறிபடு பொருளும் மாத்திரம் போதாது; அவற்றோடு இவையிரண்டையுஞ்சேர்ப்பித்து விளக்கத்தை யுண்டாக்கக்கூடிய ஒரு மூலவஸ்துவும் வேண்டும். நான் ஒரு படத்தைப் பார்க்க விரும்பினால் எனக்கது முடியுமா? எனக்கும் படத்துக்கும் இடையில் வெளிச்சமிருக்கவேண்டும்; இதில் அறிகிற நான்தான் அத்தியாத்மமாம்; அறிபடு பொருளாகிய படம்தான் அதிபூதமாம்; பொருளை விளக்கிக்காட்டும் வெளிச்சமே அதிதெய்வமாம். கண்களுக்கு அதிதெய்வமாக இருப்பது ஒளியாம்; நாக்கிற்கு அதிதெய்வமாயிருப்பது ஜலமாம்; மூக்கிற்கு அதிதெய்வமாயிருப்பது தூளியாம்; இவ்விதம் ஒவ்வொரு இந்திரியத்துக்கும் அதிதெய்வமுளது. ஆகையினால், ஒரு தோற்றத்துக்கு அத்தியாத்மம், அதிபூதம், அதிதெய்வம் ஆகிய இம் மூன்று அம்சங்களும் இன்றியமையாதவை.

வினா:—ஜகம் என்பது என்ன? அஃது எங்கேயிருக்கிறது?

விடை:—எண்ணிறந்த தோற்றங்களின் சமுதாயமே சகமெனப்படும். தோற்றங்கள் அறிவானை விட்டு இயங்குவதற்கு இடம்பெறாமையால், இவைகளாலாய உலகமும் அறிவானிடத்தில் தங்கியுள்ளதென்று நினைக்கத் தாமதிப்பானேன்?

வினா:—அறிவானும் அறிபடுபொருளும் கூடும்பொழுது, தோற்றமுண்டாகின்றதென்று முன்னர்க் கூறியது வெளிப்படையாகத் தெரிகிறது. ஆனால் இந்தத்தோற்றம், அறிவானிடத்தில்தான் இருக்கின்றதென்று சொல்வது எப்படி பொருந்தும்? அறிபடுபொருளிலிருத்தல் கூடாதோ?

விடை:—உலகமானது கால தேசத்தில் நிலைபெற்று நிற்பதாகப் பெரும்பான்மையும் எண்ணப்படுகிறது. காலமானது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலமென மூவகைத்து. வர்த்தமான காலத்திலிருக்கும் ஜகத்தைப் பஞ்சேந்திரியங்களால் தெரிந்து கொள்ளுகின்றோம். கடந்த காலத்திலிருந்த உலகத்தையும், இனி வருங்காலத்திலிருக்கக்கூடிய உலகத்தையும் மனதினால்தான் யூகித்துணர்தல் முடியும். ஆகையினால், இந்திரியங்களின் மூலமாகவும், மனதின் மூலமாகவும் ஜீவன் பிரகிருதியோடு சம்பந்தப்படுகிறான்-இந்தச் சம்பந்தத்தினால் விளைவதென்ன? தெரிவு, இந்திரிய ஞானம், இந்திரியக் கிரகணம் இவைகளைத்தாம் தோற்றமென்பர். அளவற்ற இவ்வகைத் தோற்றங்களின் சமுதாயமே ஜகமாகும். எற்கெனவே, இந்த ஜகம் தனி வஸ்துவாக மாட்டாது; பல வஸ்துக்களின் திரட்சியாகும். திரண்ட தோற்றங்கள் பிரிவுபடின், உலகம் எங்கேயிருக்கும்? மறைந்து போம். உலகமானது சைதன்யத்துக்கும் பிரகிருதிக்கும் இடையிலிருக்கின்றது. பிரகிருதிக்கோ, தன்னையறிந்துகொள்ளும் சக்தியே கிடையாது; ஆனால் சைதன்யமோ தன்னிருக்கையை அறிந்துகொள்ளும் சக்தியை உடையதாயிருக்கின்றது; இஃதன்றி, பிரகிருதியின் இருக்கையையும் அறிந்துகொள்ளும் திறனுடையதாயிருக்கின்றது. ஆகையினால், சைதன்யத்தைப் பற்றியும், பிரகிருதியைப் பற்றியும், இவைகளின் பல் வேறுவகைப்பட்ட கணக்கில்லாத சையோகங்களைப் பற்றியும், தோற்றங்களைப் பற்றியும் அல்லது ஜகத்தைப்பற்றியும் உள்ள பாவனைகளெல்லாம் சைதன்யத்தில் அஃதாவது அறிவானுள் தங்கியிருக்கின்றன; சடமாயுள்ள பிரகிருதியில் இவை எப்படியிருத்தல் இயலும்?

வினு:—ஜகம் எப்படி உண்டாயிற்று?

விடை:—பிரகிருதியும், புருஷனும் தனித்தனியே தம் முள் கிரியை அற்றன. புருடன் விபு ஆகையால், அவனிடத்துக் கர்த்துருத்துவத்துக் கிடமில்லை. வரையறைக்குட்பட்டதுதான் ஓரிடமிருந்து மற்றோரிடம் போதல்கூடும். வரையறைக்குட்படாமல் விபுவாயிருப்பதற்கு உள்ளென்றும் புறம்பென்று மில்லாமையால், எங்கே அது செல்லல்கூடும்? மேலும், புருஷன் குறைவற்றவனுனபடியால், அவனிடத்துக் கர்த்துருத்துவத்திற்கு இடமேயில்லை. ஒரு குறைவை நீக்க, கர்த்துருத்துவயம் ஏற்படுகிறது. ஆகையினுல், புருஷன் அகர்த்தனுவான். பிரகிருதியோ, கர்த்துருத்துவயமற்றது. ஏனெனின், அது ஜடமாகையால் ஓரிடமிருந்து மற்றோரிடம் தானே செல்லச் சக்தியற்றது. ஆகையினுலே, பிரகிருதியும் அகர்த்தா. அகர்த்தாக்களாகிய இவ்விரண்டு தத்துவங்களினின்றும் இடைவிடாத சலன ரூபமாகிய உலகம், எப்படி உண்டாதல்கூடும் என்று சங்கிக்கலாம். உலகத்தைப் பார்த்தால், அஃது அசைவின் ரூபமாக இருக்கின்றது. அசையாதனவாகிய பிரகிருதி, புருஷ தத்துவங்களிலிருந்து, அசையும் உலகம் எப்படி உதிக்கக்கூடும் என்றும் சங்கிக்கலாம். ஒரு குருடனும், ஒரு முடவனும் தனித்தனியே என்ன காரியம் செய்வார்கள்? கண்ணில்லாமையால், இருந்த இடத்திலேதான் குருடனிருக்கவேண்டும்; காலில்லாமையால், முடவனும் இருந்த இடத்திலேதான் இருக்கவேண்டும். ஆனுல், குருடன் தோளின்மேல் முடவன் ஏறிக்கொண்டால் இவர்கள் இருவரும்கூடி எவ்வளவு காரியம் செய்யமாட்டார்கள்? அதுபோல, பிரகிருதியும் புருடனும் சேர்ந்து அசையும் ரூபமுள்ள உலகத்தை உண்டாக்கின. கர்த்துரு-கர்த்தா என்பன செய்பவனென்னும் பொருளனவாம்.

வினா:—இவ்விரண்டையும் ஒன்று சேர்த்தவர் யார் ?

விடை:—ஒருவரும் அவசியமில்லை என்று **கபிலரிஷி** கூறியிருக்கிறார்.

வினா:—அஃது எப்படி ?

விடை:—பிரகிருதியும் புருஷனும் அநாதிகாலமாக ஒன்றாகக்கூடி யிருத்தலின், அநாதியாக ஒரு கடவுளிருக்க வேண்டுமென்னும் நம்பிக்கை அனாவசியகமாம் என்று கபில ரிஷி கூறியிருக்கிறார்.

வினா:—ஆனால் கபில ரிஷியின் சித்தாந்தப்படி மோக்ஷ மென்பது என்ன ?

விடை:—"நாம் நம்மைப் பிரகிருதியினின்றும் பிரித்துக்கொண்டால் முக்த புருஷர்களாகி விடுவோம்; நமக்குச் சகாயம்வேண்டியதில்லை. கடவுள் முக்தராகவும் இருத்தல் முடியாது; பத்தராகவும் இருத்தல் முடியாது. அவர் முக்தராகவும் விபுவாகவும் இருந்தால், சிருஷ்டி திதி சங்காரம் செய்யவிரும்பார். முக்தராக இராவிட்டால், குற்றங் குறைவு உள்ளவராகவும் அளவுக்குட்பட்டவராகவும் இருப்பார். அப்பொழுது அவர் சிருஷ்டித் தொழிலைச்செய்ய அசக்தராவர். அநாதியாகக் கடவுளிருக்கிறார் என்று சொல்லுதற்கிடமில்லை." என்று இவ்வாறாகக் **கபிலரிஷி** கூறியிருக்கிறார்.

வினா:—அப்படியாயின், கடவுள் இல்லையா! ஆன்ம கோடிகள் மோக்ஷ சாம்ராஜ்யத்தைப் பெறும்படி அவர் அனுக்கிரகிக்கின்றதில்லையா ?

விடை:—கபிலர் சொல்வது சங்கரசங்கேதத்துக்குட் பட்டதென்றுதோன்றுகிறது. கடவுள் உருவமென்றும்அருவ மென்றும் கூறும்போதும், கர்த்தாவென்றும் அகர்த்தாவென்

றும் சொல்லும்போதும், செய்மையிலுள்ளவர் அண்மையி லுள்ளவர் என்று உரைக்கும்போதும், அணுவுக்கு அணுவா கவும் மகத்துக்கு மகத்தாகவும் இருக்கிறார் என்று புகலும் போதும், கபிலர் சொல்லும் ஆக்ஷேபம் நில்லாமல் போகி றது. மேலும், புருஷனும் பிரகிருதியும் அநாதிகால மாகப் புணைக்கப்பட்டிருக்கின்றன என்று கபிலர் கூறியிருக் கிறார். அறிவானில்லாமல் அறிவும், செய்பவனில்லாமல் செய்கையும் இருப்பது இயலாதாகையால், புருஷனும் பிரகி ருதியும் ஒருவன் சேர்க்காமல் ஒன்றாகச் சேர்ந்திரா. சேர்ப்பவனில்லாமல் இச்சேர்க்கை அநாதிதொட்டு வந்திருக் குமாயின், சேர்த்தவனும் அநாதியாக இருத்தல் வேண்டும். இதற்குத்தான் கடவுளென்று பெயர் கொடுக்கப்பட்டிருக் கிறது. இதனால் கபிலர் சித்தாந்தப்படியும் கடவுள் ஒருவர் அநாதியாயும் சாஸ்வதமாயும் இருக்கவேண்டுமென்று பெறப் படுகிறது.

வினு.—கபிலர்சித்தாந்தத்தின்படி, அஃதாவது, சாங்கிய மதத்தின்படி, சிருஷ்டி திதி சங்காரம் எப்படி நடந்தேறி வருகின்றன ?

விடை:—புருஷனும் பிரகிருதியும் கூடியதன் பயனாகக் கர்மமுண்டானபடியால், சிருஷ்டி திதி சங்காரங்கள் நடந் தேறிவருகின்றன. சிருஷ்டிகர்த்தாவில்லாமலும், சம்ரக்ஷணை செய்யும் நாயகனில்லாமலும், அழிக்குந் தொழில் புரிவோ னில்லாமலும் சிருஷ்டி திதி சங்காரம் நடந்தேறுவதற்கு இடமில்லாமையால், ஒவ்வொரு கல்பத்துக்கும் பிரம்மா-விஷ்ணு-ருத்திரன்னேன்பவர் இருத்தல்வேண்டுமென்பது ஏற் படுகின்றது. ஆனல், கபிலர் ஆத்மாக்கள் பல என்னும் சித்தாந்த முடையவரானபடியால் அநாதி நித்தியமாயுள்ள

பிரம்மா விஷ்ணு ருத்திரனென்பவர் இருத்தல்வேண்டுமென்பது அநாவசியகமெனச் சாங்கியமதம் பிரதிபாதிக்கிறது.

வி:—ஆனல், சாங்கியமதத்தின்படி, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூன்றுபேரும் மனிதனைப்போல மரித்துப்போகின்றவர்களா ?

விடை:—கபிலர் சித்தாந்தத்தின்படி, அம்மூன்றும் பதவிகள். இப்பதவிகளை, அவைகளுக்கு அருகரான வெவ்வேருன ஆன்மாக்கள், கல்பந்தோறும் அடைகிருர்கள். இப்பதவிகள் அநாதி நித்தியம்; ஆனல், அப்பதவிகளுக்கு வரும் ஆன்மாக்கள் கல்பந்தோறும் மாறிக்கொண்டே வருவார்கள்.

வி:—அநாதியாய் விபுவாயிருக்கும் பதவிகள் மூன்று என்பது தெரிகின்றது; விபுவாயிருக்கும் வஸ்து ஒன்றுக்கு மேலிருத்தல் இயலுமா?

விடை:—விபுவாகவிருப்பது ஒன்றுக்குமேலிருக்கமாட்டாது. சாங்கியமதம் இவ்விஷயத்தில் அசம்மதமாம். ஆகவே, சிருஷ்டி திதி சங்காரங்களைப் புரிபவன், ஒருவனகத்தான் இருத்தல்வேண்டும். இப்புருஷனே கடவுளாக விருத்தல் வேண்டும். பிரம்மா, விஷ்ணு, ருதிரன் ஆகிய இவர்கள் அக்கடவுளுடைய வெவ்வேருன ஆவிர்ப்பாவங்களாக இருத்தல்வேண்டுமென்றும் வெளியாகின்றது. மேலும், சிருஷ்டி திதி சங்காரம் ஆகிய இம்மூன்றும், பிரிக்கப்படாவண்ணம் பிணைக்கப்பட்டிருக்கின்றன. எது சிருஷ்டிக்கப்பட்டதோ அது சிறிது காலமாயினும் இருந்து, பிறகு மறைதல்வேண்டும். இவ்விதமாகத் தோன்றிநின்று அழியும் உலகமானது பிரத்யகாத்மா, அஃதாவது, அறிவானிடத்தில் தங்கியிருக்

கின்றதென்பதைக் கபிலர் சித்தாந்தத்திலிருந்து நாம் உணரல்வேண்டும்.

வினு:—ஜகம் ஒருவனுக்கும் தோற்ருவிட்டால், அதனை இல்லை என்று சொல்லலாமா ?

விடை:—ஜகம், தோற்றங்களின் திரட்சியெனமுன்னே காண்பிக்கப்பட் டிருக்கிறது. இந்தத் தோற்றமானது பிரகிருதியில்இருக்கவேண்டும், அல்லது புருஷனிடத்தில் இருக்க வேண்டும்; தோற்றமானது அறியப்பட வேண்டும்; அப்படி அறியப்படாவிடின், தோற்றமாகாது. தோற்றம் புருஷனுல் அறியப்படுமேயன்றி ஜடமான பிரகிருதியால் அறிபப்பட மாட்டாது. ஆகவே, தோற்றரூபமாயுள்ள ஜகம் புருஷனிடத்தில் தான் இருத்தல் வேண்டும்.

வினு:—தற்கால மேல்நாட்டாரின் பிரகிருதி தத்துவ சாஸ்திரப்படி, ஜகமானது அறிவானிடத்திலுள்ளது என்பதை எப்படி ஸ்தாபித்தல் முடியும் ?

விடை:—ஜகத்திற்கு இருப்பிடம், காலம் தேசமென்று தற்கால பிரகிருதி சாஸ்திரம் புகல்கின்றது. காலமும் தேசமும் தனித்தனியே தம்முள் தாமிருப்பதல்ல. ஜாக்கிராவஸ்தையில்தானே உலகம் இருப்பதாகத் தெரிகிறது. அஃதாவது நமது நெஞ்சு அறியும்போதுதான் உலகம் தோன்றுகிறது; ஆகவே ஜகமானது நமது அறிவிலுள்ளது என்பதற்கு என்ன சந்தேகம்? நமது அறிவானது வெளியேயிருக்கும் மேஜை, மரம் முதலியவைகளில் இருக்கிறதா? அல்ல; நமது தேகத்துக்குள்ளிருக்கிறது. ஆகவே, அறிவிலடங்கியுள்ள ஜகமும் நமது தேகத்துக்குள் இருக்கிறதென்று ஐயந்திரிபற விளங்குவதாம். நமது தேகமோ மனதினுல் வியாபிக்கப்பட்டிருக்கிறது. மனதோ சைதன்ய வியாபகம் பெற்

றது. இவ்விதமாக ஜகம்முற்றும் சைதன்யமாகிய என்னுள் அடங்கியிருக்கிற தென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்குகின்றது.

வி:—ஜகமானது சேதனத்தின்கண் பொருந்தியிருக் கிறதென்பதைச் சித்தாந்தம் செய்ய வேறுவகையுண்டா?

விடை:—உண்டு; நீ இருக்கு மிடத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் ஒரு வெடிகுண்டு போடப்பட்டதென்று நினைத்துக்கொள். நீ இருக்குமிடத்திற்கும் குண்டு போட்ட இடத்திற்கும் நடுவில் ஒரு பெரிய வெளி இருக்கின்றதென் றும் நினைத்துக்கொள். குண்டு போடப்பட்ட தென்பதைப் பிரகாசம் முதலில் தெரிவிக்கிறது. அந்தப் பிரகாசத்தோடு உண்டான சப்தத்தை, வெளிச்சம் தெரிந்த பிறகு, சற்று நேரம் பொறுத்து நமது காது கேட்கிறது. வெளிச்சம் கண் ணுக்குப் புலப்பட்ட நேரத்திலிருந்து அதனுடன் உண்டான சப்தம் காதில் படுகின்றவரைக்கும் அந்தச் சப்தம், எங்கே யிருந்ததென்று நினைக்க வேண்டும். அந்தச் சப்தம் எங்கே உண்டாயிற்று; பீரங்கியிலா? அல்லது உன்னுடைய காதி லா? குண்டுபோட்ட உடன், அதனால் பீரங்கிக்கடுத்த காற் றானது அசைக்கப்பட, அது தனக்கடுத்த காற்றை அசைக்க, இவ்விதமாக அசைக்கப்பட்ட காற்றலைகள் காதுக்குட் சென்று அங்கிருக்கும் சுரோத்திரேந்திரிய நரம்புகளை உறுத்துகின்றன. இப்படி உறுத்தப்பட்ட நரம்பின் மூல மாக மூளைக்கு ஒருவித உணர்ச்சி உண்டாகிறது; இந்த உணர்ச்சி மனதின் தெரிவுக்கு எட்டச் செய்கின்றது; அந்த மனது அதை உனக்குத் தெரிவிக்கச் சப்தம் உனக்குக் கேட் கிறது. ஆகையினால், சப்தமானது உன்னிடத்தில் உண் டானதென்று சொல்லலாமே யொழிய, பீரங்கியில் உண்

டானதென்று கூறலாகாது. மற்ற இந்திரிய உணர்ச்சிகளும் இத்தன்மையாக நம்முள் ளிருக்கின்றனவே யொழிய நமக்கு வெளியில் இருப்பன அல்ல. ஆகவே, பஞ்சேந்திரிய விஷய சமுதாயமாகிய ஜகமானது நம்முள்ளிருத்தல் வேண்டு மென்பது கூறாமலே விளங்கல் வேண்டும். காலம் தேசம் என்று கூறப்படும் ஒரு பொருள் நமக்கு வெளியே கிடையாது. இது திண்ணம்.

வினு:—ஜகமானது நம்முள் ளிருக்கிறதென்று விளக்கிக் காட்ட வேறு வகைகளிருக்குமாயின், அவைகளை எடுத்துக் கூறல்வேண்டும்?

**விடை:**—நாம் பிரத்தியட்ச அனுமானப் பிரமாணங்களால் ஜகமானது நம்முள்ளிருக்கிற தென்பதை நிரூபிக்கலாம்; ஜகத்தை நேரில் கண்டறியலாம்; அல்லது சில அடையாளங்களைக்கொண்டு அதனது இயல்பை அறியலாம். நேரில் கண்டறிவது பிரத்தியட்சமென்றும், அடையாளங்களைக் கொண்டு தெரிந்து கொள்வது அனுமானமென்றும் சொல்லப்படும். தூரத்திலிருக்கும் மலைமேல் புகையைக்கண்டு அங்கே நெருப்பிருத்தல் வேண்டுமென்று அனுமானம் செய்கிறோம்; நெருப்பு அவ்விடத்தில் உண்டு என்னும் ஞானம் அந்நெருப்பை நேரில் கண்டதனால் உண்டானதன்று. ஆகையால், நெருப்பு உன் மனதில் இருக்கின்றது. அனுமானிக்கப்படும் ஒவ்வொரு பொருளும் இவ்விதமாக நம்முடைய மனதிலிருக்கின்றது. நமது நேர் பார்வை எவ்வளவு தூரம் செல்லல் கூடும். ஆகாயத்தில் எல்லாப் பக்கங்களிலும் பறவைகள் பறப்பதைப் பார்க்கலாம்; அதற்கப்பாலுள்ள சூரியனைக் கண்ணால் காணலாம்; அதற்கப்பால் இருக்கிற நக்ஷத்திரங்கள் நமது ஊனக்கண்களுக்குப் புலப்படும். இவைகளுக்கு

அப்பால் என்ன இருக்கின்றன என்பது நமது கண்ணுக்குப் புலப்படாதேனும், பரந்த வெளி இருத்தல் வேண்டுமென் பதை நாம் நம்முடைய மனதால் யூகிக்கிறோம். கண்ணுக்குப் புலப்படாத இப்பரந்த வெளியில் ஒன்றுக்குள் ஒன்று அடங்கி யிருக்கும் கோளவடிவ ஜனலோகம், மஹலோகம், தபோ லோகம், சத்யலோகங்கள் இருக்கின்றனவென்பது ஆன்றோ ரால் அனுமானிக்கப்பட் டிருக்கிறது. இவற்றுள், சுவர்க்கத் தின் இப்பக்கத்தை மாத்திரம் அஃதாவது வெளிப்புறத்தை மாத்திரம் நாம் நேராகப்பார்க்கக் கூடியவர்களாக இருக் கின்றோமே யொழிய, அதன் உட்பாகங்களையாயினும் உள்ளிருக்கும் கோளங்களையாயினும் நேரிற்காண அசக்தர் களாக இருக்கிறோம்; இவைகள் இருக்கவேண்டுமென்பதை மாத்திரம் அனுமானிக்கிறோம்; இவற்றின் பிரத்தியட்ச ஞானம் நமக்குண்டாவதில்லை. எது அனுமானிக்கப்படுகின் றதோ அது மனதிற்குள் உள்ளது; மனதிற்கு வெளியே இருப்பதாகாது. இவ்வண்ணமாக வெளியே யிருக்கும் கோளங்கள் நமது மனதில் இருக்கின்றன. ஆனால், திரு சியமாயிருக்கும் ஜகமானது உள்ளுக்குள் இருக்கும் கோளங் களாலாயது; உள்ளே உள்ளே யிருக்கும் கோளங்கள் வெளியே வெளியேயிருக்கும் கோளங்களில் அடக்கமானவை. ஆகையினால், திருசிய ஜகமானது நமது மனதிலிருத்தல் வேண்டும்; அஃதாவது நமக்குள் இருத்தல் வேண்டும் என் பது வெளியாகின்றது.

மேலும், இவை எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய் கின்றவன் யார்? சூரியன். சூரியனைப் பிரகாசிக்கச் செய்வது எவை? கண்கள். ஏனெனின், சூரியன் குருடனுக்கு ஏது? கண் களைப் பிரகாசிக்கச் செய்வதும், மனதைப் பிரகாசிக்கச்செய் வதும் எது? அது சைதன்யமாகிய ஆத்மா. ஆகையால், நீ

அஃதாவது ஆத்மா இல்லாவிட்டால், ஜகம் எது? அஃது உனக்கு வெளியேயிருக்க இடமில்லை. ஆனால், நமது நிலை எப்படி இருக்கிறதென்றால், நாம் நமக்குள் இருக்கும் உலகத்தை வெளியிலிருக்கின்றதென்று நினைக்கின்றவராக இருக்கிறோம். இது தப்பான எண்ணமல்லவா? உலகமானது நம்முள் இருப்பதால், அதனை முற்றிலும் ஓர்ந்துணரல் நம்மாலியலும் என்பது காதலாமலகமெனத் தோன்றுகிறது. "ஏனடா மண்ணைத் தின்றாய்" என்று யசோதை கண்டித்துக் கேட்டபொழுது, ஸ்ரீ கிருஷ்ண பகவான் "யான் மண்ணை நுகரவில்லை" என்று நவின்றார்; "வாயைத் திற" என்று யசோதை பயமுறுத்திக் கேட்கவே, ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாயைத் திறந்து காட்டினார். அப்பொழுது யசோதை என்ன கண்டனள்? உலக முழுதும் பாலகன் வாயிலிருப்பதைக்கண்டு வியந்தனள். ஸ்ரீ கிருஷ்ணனைப்போல, மனிதனும் உலகத்தைத் தன்னுட் பொதிந்து வைத்திருக்கின்றான்; அதனால் சர்வஞ்ஞனும் சர்வ சமர்த்தனுமாகின்றான்.

வினா:—சர்வலோகங்களும் மனிதனுக்குள் இருக்குமாயின், மனிதன் தன்னைப்பற்றியும் இவ்வுலகங்களைப் பற்றியும் என்ன அபிப்பிராயங் கொண்டிருக்கிறான்?

விடை:—உலகமானது தன்னுள் இருக்கின்றது என்று மதிப்பதற்குப் பதிலாக, தான் அதில் ஒரு நகரவாசியாக இருப்பதாக, தீனனுய மனிதன் எண்ணுகிறான்.

வினா:—இந்த எண்ணத்திற்குக் காரணமென்ன?

விடை:—அவன் தன்னைத் தேகமென்று பாவிப்பதேயாம், இவ்வெண்ணத்திற்குக் காரணம். அவன் இந்தத்தேகம் உற்பத்தியானபோது தானும் அதனுடன் உற்பத்தியானதாகவும், அது அழியும்போது தானும் அதனுடன் அழிந்து

போவதாகவும், தப்பாக எண்ணுவதேயாம். உண்மையில் அவன் பிறப்பற்றவனும் இறப்பற்றவனுமா யிருக்கிருன். பிறப்பதும் இறப்பதும் தேகமேயொழிய நானல்லவென்பது அவனுக்குத் தெரிவதில்லை. இந்தத் தப்பெண்ணங் குடிகொண்டிருப்பவனைத்தான் ஜீவன் என்பர். அவன் பிறக்கும்பொழுது ஜகமுண்டாகின்றது; அவன் இறக்கும்பொழுது அதற்கு அழிவு உண்டாகின்றது. இதனைத்தான் ஜீவ சிருஷ்டி யென்பர்; அஃதாவது ஜீவனுல் (இறக்கும் மனிதனுல்) உண்டாக்கப்பட்ட அநித்திய சிருஷ்டி என்பர்.

விஞ.—அப்படியானுல், இவ்வுலகம், மனிதன் இறந்து போகும் பொழுது, அவனுடன் அழிந்துபோக வேண்டுமே? அங்ஙனமன்றி நாம் பூர்வீக சரித்திரத்தாலும், பூலோக உறுப்பிலக்கண சாஸ்திரத்தாலும் (Geology), வான சாஸ்திரத்தாலும் (Astronomy), இன்னும் இதர சாஸ்திரத்தாலும், இவ்வுலகமானது அநாதியாக இருந்துகொண்டு வருகிறதென்றுணர்கின்ருேம்; இது காரணமாக, சிருஷ்டியும் அநாதி என்றுணர்கின்ருேமே?

விடை:—மேற்கூறிய சாஸ்திரங்கள் கூறுவது உண்மையே. இவ்வுலகத் தோற்றமானது அநாதிகாலமாகத் தைலதாரையைப் போல இருந்து கொண்டே வருகிறது. எப்படி ஜீவன் காணும் உலகம், அவன் மனதை இருப்பிடமாகக் கொண்டு அவனிருக்குமளவும் தோன்றிக்கொண் டிருக்கிறதோ, அப்படியே அநாதியாய்த் தோன்றிக்கொண் டிருக்கும் உலகமும், அநாதியாயுள்ள ஈஶ்வரனுடைய மனதிலிருக்கிறது. இந்த அநாதியான உலகத்தை ஈஶ்வர சிருஷ்டி என்பர்.

விஞ:—"நான் உலகத்திலிருக்கின்றேன்" என்னும் தப்பெண்ணம் ஒழிந்துபோக, உலகம் என்னுள் இருக்கின்றது

என்னும் உண்மை ஞானம், மனிதனுக்கு எப்பொழுதுண்டாகும்?

விடை:—தேக சமுதாயங்கள், மனது ஆகிய இவைகளிடத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தை எப்பொழுது ஜீவன் அடைவானே, அப்பொழுது மேற்கூறிய தப்பெண்ணம், அஃதாவது அஞ்ஞானம், சூரியன்முன் பனிபோல அவனைவிட்டகலும்.

வினு:—ஜீவனும் ஆத்மாவும் வெவ்வேறு?

விடை:—மனதில் பிரதிபலித்துள்ள சைதந்யத்தை ஜீவன் என்பர் ஹிந்துக்கள்; மேல்நாட்டார் மனதையே ஜீவன் அல்லது ஆத்மா என்பர். ஆனால், கபில ரிஷியின் சித்தாந்தத்தின்படி, மனம் சடப்பொருளில் சேர்க்கப்பட்டிருக்கிறது. மனம் ஜடமானபடியால், அதிலுள்ள சைதந்யத்தின் பிரதிபிம்பத்தையும் ஜடமெனத் தீர்மானமாகக்கொள்ளல் வேண்டும். ஆத்மாவோ ஜடமன்று; சித் வஸ்து. இதனால், ஆத்மா வேறு, ஜீவன் வேறு என்பது வாச்சியார்த்தத்தில் ஏற்படுகிறது.

வினு:—ஜடப் பொருளுக்குச் சேதனத்தன்மை, அஃதாவது தெரிந்து கொள்ளும் தன்மை, இல்லை; ஆனால், மனதுக்கோ அறியுந்தன்மை யுண்டு. அப்படியிருக்க, மனதை ஜடப்பொருளென எப்படி சொல்லலாம்?

விடை:—ஜடப்பொருள் இரண்டு விதமாம்; அவற்றுள், ஒன்று சைதந்யம் கலந்த ஜடப்பொருளாம்; மற்றொன்று சைதந்யம் கலவாத ஜடப்பொருளாம். இரத்தம் ஓடப் பெற்றுள்ள தசை நரம்புகளினாலாய நமது உடலைக் கேவலம் ஜடமென இயம்பலாமா? கல்லைப்போல உடலுக்கு உணர்வோ

இல்லை? கல் சீத உஷ்ணங்களை உணர்வதில்லை; தேகமோ இவைகளை உணர்கின்றது; ஆயினும், தேகத்தை ஆவி என்ருவது ஆத்மா என்ருவது கூறுகின்ருேமா? இல்லை. அது போல, மனது தெரிந்துகொள்ளும் சக்தியை யுடையதாயிருக்கின்றது; மேலும், அஃது அந்தச் சக்தியைத் தனது இயற்கைக் குணமாகப் பெற்றிருக்கவில்லை; ஆனுல், அதனை சைதன்ய அண்மையினுல், இரும்பனலைப்போல், வந்தேறியதாகப் பெற்றிருக்கின்றது. மேலும், மனிதனுல் ஏனைய ஜட வஸ்துக்கள்போல அறியப்படுகின்றபடியாலும் மனம் ஜடமாகும்.

வினு:—மனம், ஜடவஸ்துவோடு சேர்ந்ததென்பதை, இன்னும் தெளிவாக எடுத்துக்காட்டல் வேண்டும்?

விடை:—எது நினைக்கின்றதோ, எது உணருகின்றதோ, எது (கர்மத்தைச் செய்ய) ஏவுகின்றதோ, அதனைத் தான் மனமென மேல் நாட்டுச் சாஸ்திரிகள் கூறுகின்றனர். நினைத்தலும், உணர்தலும், தொழில் புரிய வேண்டுமென்னும் கிளர்ச்சியும், ஒரு விஷயமுமின்றி நிகழாவாம். ஆகையினுல், விஷயங்களின்றி மனதுக்கு உருவமில்லையாம். மனது ஜடப்பொருளையே தாவிக்கொண்டிருக்கும். நினைக்கின்றது, உணர்கின்றது, செய்கின்றது என்னுமிவை செயப்படுபொருள் குன்ருத வினைச்சொற்களாகையால், இவற்றிற்குச் செயப்படு பொருள்கள் இன்றியமையாதனவாக இருத்தல் வேண்டும். ஆகவே, இக்கிரியைகள்வடிவமான மனது ஜடமேயாகும். ஆனுல், சுபாவத்திலே ஜடமாயுள்ள மனது ஆத்மாவினுல் வியாபிக்கப்பட்டிருப்பதால், அறியுந் தன்மை இம்மனதுக்கு வந்தேறிய குணமாம்; சுபாவ குணமன்ரும்.

வினு:—மனிதன் உண்மையில் சைதன்ய ஸ்வரூபியானல், ஜடமான மனதின் வயமாக எப்படி ஆனன்? மனது இவனுடைய எவனுக்கு உட்பட வேண்டியதாயிருக்க, இவன் அம்மனதுக்கு எப்படி அடிமைப்படல் நேரிட்டது?

விடை:—மனிதன் எப்பொழுதும் மனதோடு போராடிக்கொண்டுதான் இருக்கிறன். எவன்தான் பணக்காரனுவதற்கு விரும்பவில்லை? எவன்தான் மனதால் தனக்கு வரும் ஞானம் போதுமென்று திருப்தி அடைகிறன்? சர்வஞ்ஞத்வத்தையும், சர்வ வல்லமையையும், பெற விரும்பாத மூடன் இம்மேதினியில் எவனுளன்? வாஸ்தவத்தில் மூடனயிருக்கிறவனை மூடன் என்று கூறினல், அவன் ஏன் கோபங்கொள்ளுகிறன்? எந்த அதிசய சக்தியோ, மனிதனது உண்மைப் பிரதாபத்தை எப்படியோ கொள்ளைக்கொண்டு அருவருக்கத்தக்க பலபாண்டமாகிய இத்தேகத்திற்குள் அவனைச் சிறையிட்டு வைத்துவிட்டது. இந்த நிலை மனிதனுக்குச் சற்றும் விருப்பமில்லை; அவன் மனம் முதலிய தேக உபாதிகளை அதிக்கிரமிக்கப் போராட்டம் செய்துகொண்டுதான் இருக்கிறன். இப்போராட்டந்தான் உயிர் வாழ்க்கை எனப்படும்.

வினு:—பிறகு, மனிதனுடைய கதிதான் என்ன? இப்பந்தத்திலிருந்து அவனுக்கு விமோசன மில்லையா?

விடை:—மனிதன், தன்னைத் தனு - கரண - புவன - போகங்களோடு ஏகிபாவம் (ஒருமை) செய்துகொண்டதே, அவனது துக்கத்துக்குப் பிரதம காரணமாகும். உலகமானது தனிப்பொருளன்று; மனிதனும் பிரகிருதியும் கூடினது உலகமா மென்பதை முன்னே கூறியிருக்கின்றேம். மனிதன் பிரகிருதியோடு புணராமல், தனிமையாய் நிற்பானயின், அவ

னுக்கு அதுவே விமோசனமாகும். அதனோடு (பிரகிருதி யோடு) கூடாதிருப்பது மனிதனுடைய சக்தியிலிருக்கின்றது. அப்படி மனிதன் தனிமையாய் நிற்பானாயின், உலகம் உடை பட்டுப்போம். அப்பொழுது துக்க மெங்கே? பந்த மெங்கே? இதனைத்தான் மோக்ஷ மென்பர்.



---

"ஒரு சிலந்திப் பூச்சி நூலைத் தன்னுள்ளிருந்து எப்படி வெளியே விட்டு மீண்டும் தன்னுள் இழுத்துக் கொள்ளுகின் றதோ, எப்படி ஔஷதிகள் பூமியில் வளருகின்றனவோ, எப்படி மனிதனிடமிருந்து மயிர் தானாகவே வெளிவருகின் றதோ அப்படியே ஜகமும் அக்ஷரபுருஷனிடமிருந்து வெளி வருகின்றது."—முண்டகோபநிஷத்.

"கடவுள் இந்த ஜகத்துக்குக் காரணமானால், ஜகம் காரி யமானால், கடவுளே இந்த ஜகமாக இருத்தல் வேண்டும் என்று மனிதன் தெரிந்து கொள்ள ஆரம்பிக்கின்றான்." ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகள்.

# 3-வது அத்தியாயம்.

## காலதேசங்கள்.

வினா:—முன் அத்தியாயத்தில் ஜகமானது புருஷப் பிரகிருதி சையோகத்தால் உண்டான தோற்றங்களின் சமுதாயமென்றும், இந்த ஜகமானது அறிபவனிடத்தில் (அஃதாவது ஆத்மாவினிடத்தில்) உள்ளதென்றும் கூறப்பட்டன; தோற்றங்கள் அநித்திய மென்றும், தோற்றுவிக்குந்தன்மை அழியாததென்றும் சொல்லப்பட்டன. அங்ஙனமாயின், ஜகமானது ஆத்மாவின் கற்பனுவடிவமாக இருத்தல் வேண்டும்? இந்தக் கற்பனையானது சப்தாதி விஷயங்களின் பரிணாமத்திற்குத் தக்கவாறுக இருக்கின்றதா? தக்கவாறுக இல்லாவிடின், அதற்குக் காரணமென்ன?

விடை:—சப்தாதி விஷயங்களுக்கு விசாலம் உண்டு; கற்பனைக்கோ அஃது இல்லை. கற்பனைக்குக் குறுகுந்தன்மையாவது அகலுந் தன்மையாவது இல்லை. ஆகவே, கற்பனுசக்திக்கு இந்திரிய விஷயங்களைப்போல, நெடுமையும் குறுமையும், நுண்மையும், பெருமையும் (அஃதாவது விசாலமும்) இல்லை.

வினா:—இஃது எப்படியாம்; அது விளங்கவில்லை; விவரித்துக் கூறல்வேண்டும்?

விடை:—சூரிய சந்திராதிகள் வானத்திலிருக்கின்றனவென்பது தோன்றுகின்றதல்லவா? அந்த வானத்திற்கு அப்பாலும், ஒரு பெருவெளி இருக்கின்றதென்று பாவனை செய்துகொள்; அஃதாவது அண்டபகிரண்டங்களையும் அடக்கியுள்ள ஜகத்துக்கப்பால், ஓர் இடமிருக்கின்றதென்றும், அவ்விடத்தில் மோஸஸ்ஸுக்கு (மோஸஸ் என்பவர் பைபில் கூறும் தீர்க்கதரிசிகளில் ஒருவர்.) ஹராப் என்னும் பர்வ

தத்தில் காட்சி தந்ததுபோலக் கடவுள் வீற்றிருந்து தரிசனம் தந்தருளுகின்றனர் என்றும் எண்ணிக் கொள். இவரது சத்திய சங்கற்பத்தால், அளவிடற்கரிய பரப்பு வாய்ந்த சூரிய சந்திராதி மண்டலங்கள் யாவும், ஒரு சிறு பட்டாணி விதைப்பிரமாணம் ஆய்விட்டனவென்றும் பாவித்துக்கொள். சர்வவல்லமையுள்ள ஈஸ்வரனுக்கு இப்படிசெய்வது அசாத்தியமாமோ! மண்டலங்களைப் பட்டாணி அளவாக ஆக்கியபோது, அவைகளில் அடங்கியுள்ள கிரகங்களும், அக்கிரகங்களில் வசிக்கும் சராசரப் பொருள்களும், தத்தமக்குள்ள சம்பந்த நிலைமைகளில் சற்றேனும் வேறுபாடின்றி இருக்கக் கடவுள் சங்கற்பித்தாரென்றும் நினைத்துக்கொள். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவராசிகள் எங்கெங்குளவோ அங்கங்கே, அவை நிலை பெயராது இருக்க, முழுவடிவத்தில்எவ்வளவுபரிமாணம் குறைகின்றதோ, அதற்குத் தக்கவாறு, இச்சீவராசிகளும் கண்மூடிக் கண் திறப்பதற்குள்ளாக, அளவிலும் சம்பந்தத்திலும் குறைகின்றனவென்றும் எண்ணிக்கொள். இப்படியாக்குவது ஆக்கி அளித்துத் துடைக்கும் இறைவனுலாகும் என்பதற்குச் சந்தேகமில்லை. பரந்துள்ள உலகமானது இவ்விதம் பட்டாணிப் பிரமாணமாக மாறிவர, அதன்கண் வாழும் ஜீவராசிகளும் அவற்றிற்குத் தெரியாமலே தமதுவடிவிலும், சம்பந்த நிலைகளிலும், அவ்வளவுக்குத் தக்கவாறு, ஒரு க்ஷணத்தில் தெய்வ சங்கற்பத்தால் மாறிவருமாயின், இவ்வுலகின்கண்ணுள்ள நமக்கு, ஜகமானது பண்டாணிப் பிரமாணம் ஆய்விட்டதென்பதும், நாம் நமது உருவங்களிலும் சம்பந்த நிலைகளிலும், குன்றிவிட்டோமென்பதும் புலப்படுமா? நீ கூறாய்.

வினு:—திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களால் விளக்கிக் காட்டினுலொழிய, மேற்குறித்த விஷயங்கள் மனதிற்கு ஆவாகனமாகா?

விடை:—ஒரு மனிதன் இசை அரங்க திருஷ்டிக் கண்ணாடி (Opera glass) யின் வாயிலாக அதனது பார்க்க வேண்டியபக்கமாகப்பாராமல், மற்றொரு பக்கமாகத் தான் இருக்கும் அறைக்கெதிரேயுள்ள தெருவில் போகும் ஜனங்களைப் பார்க்கின்றானென்று எண்ணிக்கொள். கண்ணாடியின் மூலமாக அப்பொழுது அவனுக்குத் தோன்றும் ஜனங்கள் பொடி மனிதர்களாகத்தோன்றுவார்கள்; பிறகு, அவன் தனது அறையின் கதவுகளையும் பலகணிகளையும் நன்றாக மூடிவிட்டு, அறையை இருட்டாக்கி, அதே தெருவில் செல்லும் ஜனங்களை, அதே கண்ணாடியின் வாயிலாக அதனதுபார்க்கவேண்டிய பக்கமாய்ப்பாராது, மற்றொரு பக்கமாய், முன்போல் பார்க்கின்றானென்று எண்ணிக்கொள். அப்பொழுது தெருவில் போகும் ஜனங்கள் அவனுக்கு எப்படித் தோன்றுவார்கள் ?

வினா:—அவனுக்கு, அவர்கள் முன்தோன்றியது போலப் பொடிமனிதர்களாகவே தோன்றுவார்கள்; இதற்கென்ன சந்தேகம்?

விடை:—பெரிய மனிதர்கள் இவன் கண்ணுக்குத் தோன்றினாலல்லவா, கண்ணாடியின் மூலமாகப்பார்க்கும் மனிதர்கள், பொடி மனிதர்கள் என்பதை, அவன் ஒத்திட்டுணர்வான் ? தெருவில் செல்லும் ஜனங்கள் தவிர, வேறு மனிதர்கள் இவன் கண்ணெதிரில் இல்லாமையால், இவர் பெரியர் இவர் சிறியர் என்று கூறுவது எப்படி இயலும் ?

வினா:—மனிதனைப் பார்த்திருந்த கவனம் அவன் மனதில் இல்லையா ? அதைக்கவனத்திற்கு கொண்டு வந்து கண்ணாடியின் மூலமாகத்தோன்றும் மனிதர்கள் பொடி மனிதர்கள் என்பதை அவன் என் தெரிந்து கொள்ளல் முடியாது ?

விடை:—அவ்விதக் கவனம் நாளடைவில் குன்றி ஒழிந்து விட்டதென்றாவது, அல்லது ஏதோ ஒரு காரணத்தால் அவனை விட்டு நீங்கினதென்றாவது எண்ணிக்கொள்; அப்பொழுது கண்ணாடியின் மூலமாகத் தோன்றும் ஜனங்கள், பொடிமனிதர்கள் என்று அம்மனிதன் கூறுவானா? கூறான்.

வினா:—ஒத்திட்டுப் பார்க்க வேறு உருவமின்மையின், கண்ணாடியின் மூலமாகப் பார்க்கும் உருவங்கள், பெரியனவென்றும் சிறியனவென்றும் சொல்வதற்கு இடமில்லை என்று சொல்லுகிறீர். இதனையே இன்னொரு சுலபமான திருஷ்டாந்தத்தால் விளக்கிக் காட்டல் வேண்டும்?

விடை:—ஒரு கைதேர்ந்த சித்திர மெழுதுவோனால் எழுதப்பட்ட ஒரு நேர்த்தியான படத்தை, ஒரு மனிதன் பார்த்து மயங்கி விட்டானென்று நினைத்துக்கொள். அந்தப் படத்தில் சித்திரித்துள்ள மலைகளும், மலை அருவிகளும், செடிகளும், விநோதமாக விளையாடிக்கொண் டிருக்கும் ஸ்திரீ புருஷர்களும், அருவிகளின் ஓரமாக மேய்ந்து கொண்டிருக்கும் ஆடுமாடுகளும், உண்மைப் பொருளாகவே அம்மனிதனுக்குக் காணப்படுமல்லவா? இவைகள் சில சதுர அங்குலங்களுள்ள இடத்தில் ஒரு துணியில் வாஸ்தவமாக எழுதப்பட்டிருந்தும், அவைகள் ஒருவித விகற்பத்தையும் காட்டாமல், உண்மைப் பொருள்களாகவே அவனுக்குத் தோன்றுவதற்குக் காரணமென்ன? இவ்வுலகத்தில் நாம் தினந்தோறும் பார்க்கும் மரங்கள், மலைகள், அருவிகள், மனிதர்கள், ஆடுமாடுகள் முதலியவைகள் ஒன்றுக்கொன்று, உயரம், அகலம், பரிமாணம், நிறம் முதலியவைகளில் என்ன சம்பந்தமுடையனவா யிருக்கின்றனவோ, அதே

சம்பந்தமுடையனவாக அவைகள், தக்கவாறு சிறிய அளவில் சித்திரத்திலும் எழுதப்பட்டிருக்கின்றன. இக் காரணத்தினாற்றான், அதனைப் பார்ப்பவர்களுக்கு யாதொரு விகற்பமும் பிரதிதியாவதில்லை.

**வினா:**—படத்தில் எழுதியிருக்கும் உருவங்கள் சிறியவை யென்றும், அவைகள் ஒரு சிறிய இடத்தில் வரையப்பட்டிருக்கின்றன வென்றும், நமக்குத்தோன்ற வில்லையா? சேய்மை அண்மை என்னும் எண்ணங்களுக்கு நிஜ உருவம் இல்லையென்பது எப்படி பெறப்படும்?

**விடை:**—உருவங்கள் சிறியவையாகத் தோன்றினாலும், அவைகள் விகற்பமாகத் தோன்றுகின்றனவா? இல்லையே. இதற்குக் காரணம் நீ இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. மனிதனுடைய உருவத்தை நீ படத்தில் பார்க்கின்றாயல்லவா? சாதாரண மனிதனுடைய உருவம் 5½ அடி உயரமுள்ளதென்று நினைத்துக்கொள்; அப்பொழுது அவனது கைகள் 2½ அடி நீளமுள்ளனவென்றும் அவனது கால்கள் 2½ அடி நீளமுள்ளனவென்றும் நினைத்துக்கொள். இப்பொழுது 6 அங்குல நீளமுள்ள துணியில், ஒரு சித்திரமெழுதுவோன், மனிதன் உருவத்தை எழுதவேண்டி, 5½ அங்குலம் நீளமுள்ள உயரமும், 2½ அங்குலம் நீளமுள்ள கைகளும், 2½ அங்குலம் நீளமுள்ள கால்களுமாக ஒருமனித உருவத்தை யெழுதிக்காட்டினால் விகற்பக்தோன்றாது. அவன் இப்படிக்கின்றி 5½ அங்குல உயரமும், 1 அங்குலக் கைகளும், 1½ அங்குலக் கால்களுமாகச் சித்திரம் எழுதினால், அந்த உருவம் உனக்கு விகற்பமாகத் தோன்றாதா? அதற்குக் காரணம், அவயவங்கள் தக்க சம்பந்தங்களுடன் காட்டப்படாமையே யாகும். அவன் அவயவங்களைச் சரிசரியாகத் தக்கவாறு வகுத்துப் படத்தில் காண்பித்திருந்தலினால், நமக்கு விசாலத்வத்தின் வாஸ்தவஞானம்

பிறக்கிறது; அஃதாவது இவைகள் சிறிய உருவங்கள், சிறிய இடத்தில் எழுதப்பட்டுள்ளன என்னும் எண்ணம் வாராது இவைகள் மனித உருவங்களே, அருவிகளின் உருவங்களே, ஆடுமாடுகளின் உருவங்களே என்னும் ஞானம் மனதிலுண்டாகின்றது.

இன்னுமொரு திருஷ்டாந்தம் எடுத்துக்கொள்ளலாம். ஒரு வஸ்து தூரச்செல்லச் செல்ல, அது நமக்குச் சிறியதாகத்தோன்றுகிறதல்லவா? அதே வஸ்து, நம்மை நோக்கி அருகே வரவரப் பெரியதாகத் தோன்றுகின்ற தல்லவா? ஒரு தூர திருஷ்டிக் கண்ணுடியின் வாயிலாக அதன் ஒரு பக்கமாகப் பார்த்தால், பொருள்கள் அருகே இருப்பனவாகவும் பெரியவை யாகவும் தோன்றும். அத்தூர திருஷ்டிக் கண்ணுடியின் வாயிலாக அதன் மற்றொரு பக்கமாகப் பார்த்தால், அப்பொருள்களே தூரத்திலிருப்பனவாகவும் சிறியவைகளாகவும் தோன்றும். பொருள்களுக்கும் பார்ப்போனுக்குமுள்ள இடைவெளி அஃதாவது தேசம், ஒரே உருவினை யுடையதாயிருக்குமாயின், ஒரே பொருள் சிறியதாகவும் பெரியதாகவும் தோன்ருது; அத்தேசம், அப்பொருள் அவ்வாறு தோன்றுவதற்கு, ஹேதுவாவதில்லை. ஆகையினுல், விசாலத்வத்துக்கு அஃதாவது தேசத்துக்கு, யாதாவதொரு நிலையான உபாதி அல்லது உருவம், உண்டென்பது ஏற்படவில்லை.

மேலும், ஒருவன் கனவு காணும்பொழுது, அவனது கர்மேந்திரியங்களாகிய வாக்கு-பாதம்-பாணி-பாயுரு-உபஸ்தம் என்னும் இவைகள் அசைவற்றிருக்க, அந்தக்கரணமானது (மனம் - புத்தி - சித்தம்-அகங்காரவடிவ உட்கருவி) தானுகவே தனக்கென ஒரு உலகத்தைச் சிருஷ்டித்துக்

கொண்டு, விழித்திருந்த காலத்தில் எவ்வெவ் வியவகாரங் களைச்செய்ததோ, அவ்வவ் வியவகாரங்களைச் சொப்பனத்தி லும் செய்கின்றது. நமது தேகம் இருந்த இடத்தி லேயே இருக்க, அந்தச் சொப்பனத்தில் நடந்த வியவகாரங் கள் எந்த இடத்தில் நடந்தேறின? அந்தக்காரணத்தால் உண்டாக்கப்பட்ட தேசத்தில் நடந்தேறினவென்று சொல் வதற்கு ஐயமுளதோ? இல்லை.

இதுகாறும் சொல்லப்பட்டு வந்த திருஷ்டாந்தங்களால், உருவங்கள் தத்தம் அவயவங்களிலும் சம்பந்த நிலைகளிலும் சரிசரியாக அளவிற்குன்றி யிருக்குமாயின், நமக்கு விகற்ப மொன்றுந் தோன்றுதென்பதும், அவை அளவில் குன்றி யிருத்தல் புலப்படா தென்பதும், பெறப்படுகின்றன.

வினு:—அப்படியானல், பொருள்களின் இடையி லுள்ள தேசம் (வெளி) என்பதுதான் என்ன? அதற்கு யாதாவதொரு தன்னந்தனிமையான நிஜ இருக்கை அல்லது உருவம் உண்டா?

விடை:-தேசத்துக்குச் சாஸ்வதமான நிலை கிடையாது; ஏனெனின், அது மனதின் கற்பனையே யொழிய வேறன்று.

வினு:—தேசமானது மனதின் கற்பனை யென்பது எப்படி?

விடை:—ஒன்று வேறொன்றை நோக்கும் நிகழ்ச்சியில், துவிதம் ஆரம்பமாக இருக்கின்றது. இது வியாவகாரிகம் (Relativity) என்று சொல்லப்படும். இரண்டு எண்ணங்கள் அல்லது இரண்டு பொருள்கள் தோன்றுமந்தக்கணத்திலே யே, வியாவகாரிகதசை ஏற்படுகின்றது. இந்த வியாவகாரிகத சையில்தான், முதல் முதல் ஞானமும் (விஷயஞானமும்) சாமா னிய விசாரணையும் உதிக்கின்றன. அப்புறம், நாம் பல்

வேறுவகையான சிக்கமைந்த விசேஷ விசாரணைத் துறையிற் சென்று, பலவேறுபாடுகளுக்கு, சௌக்கியார்த்தம், பல பேரிடத் தலைப்படுகிறோம்; இவைகளை, இனம் பிரிக்கும் சக்தியாகிய ஞாபகத்தில், பொதிந்து வைக்கிறோம். ஒரு வஸ்துவுக்கும் மற்றொரு வஸ்துவுக்கும், ஒரு எண்ணத்துக்கும் மற்றொரு எண்ணத்துக்குமுள்ள சம்பந்தத்தை உணர்த்தும் பாவனையே, தேசம் என்று சொல்லப்படும்.

வினு:—இதையே இன்னும் தெளிவாக உரைத்தல் வேண்டும்?

விடை:—வியாவகாரிகதசையை நீக்கிப் பாரமார்த்திக தசையைப் பற்றி யோசிக்கலாம்; ஏகரீதியாகவும், பூரணமாகவும், விபுவாகவும் உள்ளது எதுவோ அதனையே பாரமார்த்திக சத்தை எனக்கூறுவர். எண்ணிறந்த வர்ணங்களெல்லாம் ஒன்றாகக் கலந்து ஒரு வர்ணமாக ஆய்விட்டனவென்று நினைத்துக்கொள்வோம்; அஃதாவது எல்லா வர்ணங்களும் ஒன்றாகக் கலந்து வெண்மை நிறமாக மாறிவிட்டனவென்று எண்ணிக்கொள்வோம். அப்பொழுது உள்ளது ஒரு வர்ணமாகையால், அதற்கு விசேஷப் பெயரிடுவதற்கும் யாதாவதொன்று அதனைப் பிரித்துக்காட்டுவதற்கும் அவசியமில்லாமல் போய் விடுகிறது. அச்சமயத்தில் உற்று நோக்குமொருவன் தனது திருஷ்டியைப் பகிர்முகத்தில் செலுத்துவானுனல், அவன் ஒன்றையும் காணுன்; பகிர்முகத்தில் பல வர்ணங்கள் தோன்றாமையால், அவனுக்குத் தனது தூல தேகமும் தோன்றாது; தனக்கு அன்னியமாக உலகமும் தோன்றாது. நமது உத்தேசத்தின்படி இருப்பது ஒரு வர்ணமாகையால், பல வேறுபாடுகளுள்ள தோற்றத்துக்கு ஹேது இல்லாமற் போய்விடுகிறது. மனதானது சேஷ்டையற்றிருக்கும் பொழுது, நமது கண்களை நாம் மூடிக்கொண்

டால், சற்றேறக்குறைய மேற்சொன்ன மாதிரிதான் இருக்கும்; தேகம் என்னும் கற்பனை நமது மனதைவிட்டகன்றிருக்கும். உற்று நோக்குவோன் ஒருவன், கன இருளில் தடவிக்கொண்டு போகின்றானென்று நினைத்துக் கொள். அவனை, அவனது தசை நரம்பின் சக்தியானது இங்குமங்கும் போகும்படி செய்விப்பதனால், அத்தசை நரம்பினுடைய அசைவின் நீட்டித்ததன்மையினால், அவன் தேச அளவைக் கணிக்கும் திறனுடையவனாகிறான்; அஃதாவது அந்தத்தசை நரம்பின் அசைவு சற்று நேரம் நிகழ்ந்தால், தான் கொஞ்சதூரம் சென்றதாகவும், நீட்டித்தகாலம் நிகழ்ந்தால், நெடுந்தூரம் சென்றதாகவும் நினைப்பான்.

வினா:—தசை நரம்பின் அசைவு அற்றவனாக இருந்தால், அவனுக்குத் தேச பாவனை எப்படி உதிக்கும்?

விடை:—அவன் ஸ்பரிச உணர்ச்சியால் தேச பரிமாணத்தை உணர்வான். எங்ஙனமெனின், தனது உடம்பின் பல பாகங்களைத் தொட்டுப் பார்த்தலினால், அப்பொழுது உண்டாகும் உணர்ச்சிகளின் பேதா பேதங்களைக் கவனித்துச் சேய்மையையும் அண்மையையும் தெரிந்து கொள்வான்.

வினா:—இந்த ஸ்பரிச உணர்ச்சியும் இல்லாமற் போனாலோ?

விடை:—சப்த உணர்ச்சியால் தெரிந்து கொள்வான்; எப்படியெனின், குறைந்த சப்தத்தைக் கேட்பதனாலும் உரத்த சப்தத்தைக் கேட்பதனாலும், சப்தமானது அருகேயிருந்து வருகிறதென்றும் தூரத்திலிருந்து வருகிறதென்றும், சுரோத்திரேந்திரியம் அவனுக்குத் தெரிவிக்கும்.

வினு:—செவிடாயிருந்தால், சப்தம் யாது பிர யோஜனமாம்?

விடை:—அவனது நாக்குத் தேச உணர்ச்சியை உண்டு பண்ணும். அஃது எவ்வாறெனின், கொஞ்சம் சர்க்கரையை நாக்கின் நுனியிலும், கொயினவை (ஒரு விதக் கசப்பு வஸ் துவை) நாக்கின் அடியிலும் வைத்தால், இருவித உணர்ச்சி கள் வெவ்வேறுன இடங்களில் உண்டாகும் காரணத்தைக் கொண்டு, அவன் தேச அளவை யூகிப்பான்.

வினு:—மூக்கிற்கு இவ்வித பாவனையை யுண்டாக்கும் சக்தியுண்டா?

விடை:—மூக்கின் ஒரு துவாரத்தண்டை ஒருவித வாசனையுள்ள புஷ்பத்தையும், மற்றொரு துவாரத்தண்டை மற்றொருவித வாசனையுள்ள புஷ்பத்தையும் வைத்தால், வெவ் வேறுன இடங்களிலிருந்து வெவ்வேறுன வாசனைகள் வரு கின்றன வென்னும் உணர்ச்சிகள் உண்டாம்.

வினு:—முகரும் சக்தி இழந்தவனுக இருந்தால், அப் பொழுது என்னவாகும்?

விடை:—மெய் - வாய் - கண் - மூக்கு - செவி என் னும் இவ்வைம்புலன்களும், தசை நரம்பின் அசைவால் உண் டாகும் உணர்ச்சியும், காலத்தைப்பற்றிய பாவனையும், தேச பாவனையை உண்டாக்குகின்றன வென்று கூறினேம். இவ் வைம்புலன்களும் இல்லையெனப் பாவிப்போமானுல், தேச பாவனைக்கு இடமில்லாமற் போம். அந்த நிலையில், மனிதன் தனது ஞாபகசக்தியால் மனதில் சேகரிக்கப்பட்டுள்ள கற் பனைகளைப்பற்றித்தான் ஸ்மரித்துக்கொண் டிருப்பான்.

வினு:—காலமென்பது இன்னதென்பதைப் பிரத்தி யேகமாய் எடுத்துக்கூறவில்லையே?

விடை:—முற்கூறிய விஷயங்களில் காலமென்பது இன்னதென்பது மறைவாகக் கூறப்பட்டிருக்கிறது. வியாவ காரிக தசையில்தான் காலம் நிகழ்தல் கூடும். அஃதாவது இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சம்பவங்கள், இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட எண்ணங்கள், ஒன் றன்பின் ஒன்றாய்த் தொடர்ச்சியாக நேரிடுமவசரத்தில், கால பாவனை உதிக்கின்றது. முன்பின் என்னும் எண்ணமே கால ஞானத்துக்கு ஹேதுவாகின்றது.

வினு:—அப்படியாயின், இக்காலமும் மனதின் கற்பனை யென்று எற்படுகின்றது?

விடை:—ஆமாம். ஒன்றன்பின் ஒன்றாக நேரிடும் சம்ப வங்களையுணரும் இந்திரியமில்லாத காலத்து, மனிதன் தனது ஞாபகசக்தியால், மனதில் சேகரிக்கப்பட்டுள்ள கற்பனை களைப் பற்றித்தான் ஸ்மரித்துக்கொண் டிருப்பான்.

வினு:—மனிதன் இந்த ஞாபக சக்திக்கு வசப்பட்ட வனு? அல்லது ஞாபக சக்தி அவன் வசப்பட்டதா?

விடை:—ஒன்றைக் கவனத்துக்குக் கொண்டு வரு வதும், கொண்டுவாராமல் தடுப்பதும், மனிதனுடைய இஷ் டத்திலிருக்கின்றன; ஆகவே, ஞாபகசக்தி மனிதனுடைய வசத்திலுள்ள தென்பது பெறப்படுகிறது.

வினு:—ஞாபகசக்தியை உபயோகப்படுத்தாம லிருக்கும் நிலையில், மனிதன் எதை அநுசரித்துக்கொண் டிருப்பான்?

விடை:—ஐம்புலன்களும் அந்தக்கரணமும் அசைவற் றிருக்குங் காலத்து, மனிதன் சஞ்சலமற்றவனாக இருப்பான்.

வினு:—சஞ்சல மற்றவனயிருப்பான் என்பது என்ன? மலை-மரம் முதலிய அசேதனப் பொருள்களைப் போல உணர் வற்றும், உணரும் சக்தியற்றுமா இருப்பான்?

விடை:—அந்த நிலையில், மனிதன் சப்த-ஸ்பரிச-ரூப-ரஸ-கந்தங்களும், இவைகளால் உண்டாகிய சாமானிய விசேஷ சங்கற்ப விகற்பங்களுமாகிய புயல்காற்றால், தேச காலங்கள் என்னும் வாரிதியில், இங்குமங்கும் மோதப்படும் ஜீவனைப்போலல்லாமல், சுத்த சைதன்ய மாத்திரமேயாய், நித்திய - நிராமய - பூரண ஸம்வித்தாய் விளங்கி நிற்பன். இந்தநிலையினை, யோகிகள் சச்சிதாநந்த பிரஹ்ம மென்பர். இந்நிலையை,

"தானான தன்மயமே யல்லா தொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றுண்டோ,
ஞானகா ரத்தினொடு ஞேய மற்று
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்."

என்று தாயுமானசுவாமிகள் கூறி யிருக்கின்றார்.

வினா:—மனிதன் அந்நிலையில் உணர்வற்றும் உணரும் சக்தியற்றும் அசேதனப் பொருளைப் போலவா இருப்பான் என்று நான் கேட்ட கேள்விக்கு, அவன் ஸம்வித்தாயிருப்பான்; தானான தன்மயமாயிருப்பான் என்று கூறுவது நேரான சமாதானமாகாது.

விடை:—சிற்றறிவுள்ளவனாயிருந்த ஜீவன், அந்நிலையில் தன்னைப் பேரறிவாளனாகக் காண்கின்றமையினாலும், தன்னைக் கண்டமாகக் காணாது அகண்டபாவனையில் நிலைத்தூன்றி நிற்றலாலும், துக்காக்கிரந்தனான தன்னை ஆநந்த ரூபியாகச் சாக்ஷாத்கரிக்கின்றமையினாலும், அந்நிலையை மரம்

மலை முதலிய ஜடப்பொருள்களின் நிலைக்கு ஒப்பிடலாமா?

கூடாது.

வினா:—அந்நிலையில், மனிதன் அறிவுமயமா யிருத்தலின் அவனை அறிவற்றவனென்று மதித்தல் கூடாதென்றும், அந்த நிலை சங்கற்ப விகற்பங்களாகிய அவித்தையற்ற சுயம்பிரகாச நிலையென்றும், அதுவே சாந்தநிலை யென்றும் நீர் கூறுவதாக எனக்குத் தோன்றுகின்றன. நான் தெரிந்துகொண்டது சரிதானா?

விடை:—ஆம்.

வினா:—அவ்விதச் சாந்த நிலையை எப்படி அடைவது?

விடை:—அச் சாந்த நிலையை அடைவது மிகக்கடினமாம். சிரத்தையினாலும் விடா முயற்சியினாலும் அதனை அடையலாம். யோகியானவன் தனது மனதை ஒருமைப்படுத்த முயலுங்கால், அதிக உயர்வும் அல்லது அதிகத்தாழ்வும் இல்லாத ஒரு தனி இடத்தில் பத்மாசனம் இட்டுக்கொண்டு, தனது உடலையும் கழுத்தையும் நேரே நிறுத்தி, கண்களை மூடிக்கொண்டு, தனது மனத்தைப் புலன்களின் வழியினின்றும் பிரிக்க முயலுகின்றான். இவைகள் எல்லாம் சுலபமாகச் சித்திக்கலாம். அவனுக்குத் தான் இருக்கும் இடத்தைச் சற்றுநேரம் மறந்திருத்தல் இயலும்; ஆனால், காலத்தை அவ்வளவு சீக்கிரத்தில் வெல்வது முடியாது. அவன் அதனுடன் போராடுவதில் அதிக கஷ்டமடைகிறான்; ஏனெனின், அவனது மனவாகாயத்தில் அவன் முன் மனதால் உணர்ந்த தோற்றங்கள் நெடுந்தொடராக வந்து, விடாது துள்ளிக்கொண்டே இருக்கும். அவன் ஐம்புலன்களோடு நெடுங்காலம் பழகி வந்தமையினால் உண்டான மனதின் சஞ்சலத்தன்மையே இந்தச்

சஞ்சல புத்திக்குக் காரணமாகும். விசையாக ஓடிக்கொண் டிருக்கும் இருப்புப்பாதை வண்டித்தொடரி லிருந்து ஒரு வண்டியைப் பிரித்துவிட்டால், அவ்வண்டி தான் முன் பெற் றிருந்த விசையைக் கொண்டே, நெடுந்தூரம் தானே செல் லும். அதனை நிறுத்துவதற்கு ஒரு தடையை யுண்டாக்கல் வேண்டும். இந்தத் தடையினால் அந்த வண்டியை ஒருமிக்க நிறுத்த முயன்றால், அந்த வண்டிக்கு ஹானி நேரிடும். ஆகையினால், அதன் போக்கை மெதுவாக நிறுத்தல் வேண் டும். இதுபோலவே மனதின் அசைவையும் நிறுத்தல் வேண்டும்.

**வினா:**—எத் தடையைக் கொண்டு எப்படி மெதுவாக மனத்தின் அசைவை நிறுத்தலாம்?

**விடை:**—ஓர் எண்ணத்திலிருந்து, மற்றோர் எண்ணத் துக்குப்போக மாத்திரம், மனதை அசையும்படி கொஞ்சக் காலம் பழக்கல் வேண்டும்; பிறகு ஒரே எண்ணத்தை நோக் கியே செல்லும்படி மனதைக் கட்டாயப்படுத்தல் வேண்டும். இவ்விதமாக மனதின் அசைவைக் குறைத்தல் வேண்டும்.

**வினா:**—இதைத்தான் எப்படி செய்வது? யாராவது இப்படி செய்திருந்தால், அன்னோரது வழியைப் பின் பற்றிச் செல்லலாம்.

**விடை:**—மனதினால் ஒரு மந்திரத்தை விடாது சிந் தனை செய்துகொண் டிருப்பதனால், மனதின் அசைவைப் போக்கலா மென்று ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

**வினா:**—எந்த மந்திரத்தை மனத்தாற் சிந்தனைகொண் டிருப்பது?

**விடை:**—மனத்தைக் குவியச் செய்யக்கூடிய மந்திரங் கள் எல்லாவற்றுள்ளும் பிரணவ (ஓம் என்னும்) மந்திரமே

மிகச்சிறந்த தென்று கூறப்பட்டிருக்கிறது. போராட்டங்கள் ஒழிந்துள்ள சச்சிதாநந்தப் பிரஹ்மமே இந்தப் பிரணவத்தின் பொருளாகும். ஆகையினுல், இந்த மந்திரத்தைச் சிரத்தையுடன் சிந்தனை செய்து வந்தால், நாளடைவில் மனதானது பரிபக்குவ நிலையைப்பெற்று விஸ்ராந்தியையடையும்.

விஞ:—இந்த மந்திரம் மற்றெல்லா மந்திரங்களை விட விசேஷமான தென்று எந்தக் காரணத்தினுல் கூறப்படுகின்றது?

விடை:—மற்ற மந்திரங்களை உச்சரிப்பதற்குத் தொண்டை, மேல் வாய், பற்கள் அல்லது உதடுகள் ஆகிய இவைகளின் உதவி இன்றியமையாததாயிருக்கின்றது. பிரணவ மந்திரத்தை உச்சரிப்பதற்கு இவ்வளவு முயற்சி வேண்டியதில்லை. ஆகையினுல், மனதினுல் ஸ்மரிப்பதற்குப் பிரணவ மந்திரமே அதிக சிரேஷ்டமானது. பிரஹ்மத்தில் விஸ்ராந்தி பெறுவதற்கு இது பெருஞ் சாதனமாயிருப்பதால், வேதங்களும் இதனைச் சிரேட்டமாகக் கூறுகின்றன.

விஞ:—எவ்வளவு காலம் இந்தப் பிரணவமந்திரத்தை அனுஷ்டித்தல் வேண்டும்?

விடை:—இந்தப் பிரணவ மந்திரத்தைப் பலதரம் மனதிற்குள்ளே உச்சரித்துக் கொண்டு வந்தால், மனதின் அசைவு குறைந்துகொண்டே வரும்; வெகு காலம் சென்றபின், மனது சாந்த நிலையை வகித்து, முத்தி நிலையை எய்தும். இச்சித்தியைப் பெறும் வரையில், பிரணவ மந்திரத்தைச் சிரத்தாபக்தியுடன் விடாது ஜபித்தல் வேண்டும். எல்லாப் போராட்டங்களும் முடிவுக்குவர மகத்தான சிரத்தை வேண்டும். மனதுக்குச் சஞ்சலத்தன்மை வந்தேறியதாகும். இந்தச்

சஞ்சலத்தன்மையைத் தொலைப்பதற்கும், நிச்சலத்தன்மையை இயல்பாகப் பெறுவதற்கும், பிரணவ மந்திரத்தை முமுட்சுவானவன் நாள்தோறும் ஜபித்துக்கொண்டு வருதல் வேண்டும்.

வினு:—ஒரு நல்ல காரியத்துக்கு இடையூறுகள் பல நேரிடுகின்றன என்பது, எல்லாருக்கும் அனுபவமா மன்றோ? மந்திர உபாசனைக்கும் பல இடையூறுகள் நேரிடு மன்றோ? அவைகளை நான் எப்படி வெல்ல மாட்டுவேன்?

விடை:—காமம், புகழ், கீர்த்தி, பரோபகாரம் முதலியவற்றைப் செய்வதற்கு நாம் அசக்தராயிருக்கின்றோம் என்னும் பயம், முதலிய லௌகிக எண்ணங்கள் மந்திர அனுஸந்தானத்திற்கு இடையூறாக நிற்கும்; கால தேசங்களாகிய கானற்சலத்தில் உன்னை உட்படுத்தி ஞானத்தையடைய வொட்டாமற் செய்யும். நாம் வசிக்கும் இவ்வுலகில், நம்மைக் கூடா நெறியில் செலுத்தக் கூடியவைகள் பொன்னாசையும் பெண்ணாசையுமே யாம். நம்மை இவ்விரண்டு ஆசைகளும் தமக்கு அடிமையாக்கிக் கொண்டபடியால், அவைகளை விலக்குவது வெகு சீக்கிரத்தில் முடியாது. “எவனொருவன் பொருளாசையைத் துச்சமாகக் கருதி மகளிரெல்லோரையும் தாயாரென்னும் பாவனையுடன் பார்க்கவல்லவனாகிறானோ அவனன்றோ நிரதிசயானந்தத்தை அடையமாட்டுவன்” என்று பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றனர். சிற்றின்பத்தில் ஆசையற்று; தூய்மையும் வணக்கமுமுள்ள சித்தத்துடன், நித்தியப்பொருளை மறைத்து நிற்கும் அவித்தையாகிய திரையைக் கிழிக்க முயலல் வேண்டும். இதைவிட வேறு உபாயம் கிடையாது. ஆகாய விமானம் மேலே

எழும்ப முயலுகின்றது; ஆனால், அது தன்னைப் பூமியிற்கட்டியிருக்கும் கயிறுகளை அறுக்க முடியாததாயிருக்கின்றது. அக்கயிறுகளை அவிழ்த்து விடு; அப்பொழுது அது மேலே விரைவாகச் செல்வதைக் காண்பாய்.

வினா :—என்னென்னவோ செய்து பார்த்தேன்; காடுங் கரையும் மனக்குரங்கு கால்விட் டோடிக் கொண்டிருக்கின்றது; நான் அதன்பின் ஓடுந்தொழிலை விடுவதற்கு அசக்தனாக இருக்கிறேன். நான் என் செய்வேன்?

விடை :—

" பற்றறவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்; துவிதமோ,
சிற்றறிவ தன்றியு மெவரேனு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தை செவியாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ,
உற்றுணர வுணர்வற்றன் மத்தவெறி யினர்போல்
வுளறவுவேன்; முத்திமார்க்க
முணர்வதெப் படியின்ப துன்பஞ் சமானமா
யுறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையா! நீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன். "

என்று கூறித் தாயுமானசுவாமிகளும் புலம்பியிருப்பதால், மனத்தை அடக்குவது பகீரதப் பிரயத்தனமேயாம்; ஆயினும், பிரணவ அனுஸந்தானத்தை விடாதிருத்தல் வேண்டும். மனதானது உன்னைப் பல ஜன்மங்களில் அடிமைப் படுத்தி உரம்பெற்றிருக்கின்றது. ஓடிக்கொண்டிருக்கும் ஒரு நாயைச் சங்கிலியினால் ஒரு தூணில் கட்டிவிட்டால்,

அது ஓடமுடியாமையினால் கத்திக்கத்தி ஓய்ந்து, ஓடும் எண்ணத்தை விட்டு, அயர்ந்து படுத்துக்கொள்ளுமன்றோ? அவ்விதமாகவே, மனதென்னும் நாயைப் பிரணவமென்னும் சங்கிலியினால் அறிவென்னும் தூணில் கட்டிவிட்டால், அப்பொழுது அம்மனதானது அசையுந் தன்மையற்றுச் சாந்த நிலையை யெய்தும். ஆதலால் தைரியத்தை விடாமல் பிரணவ மந்திரத்தை மாத்திரம் தினந்தோறும் சிரத்தாபக்தியுடன் ஜபித்துக்கொண்டு வந்தால், உன் அபீஷ்டம் நிறைவேறும். இது திண்ணம்.

---

காலதேச நிமித்தங்களில் இருக்கும் ஒரு விசேஷ குண மென்னவெனில், அவைகள் இதர வஸ்துக்களை விட்டுப் பிரிந்திருக்க முடியா. சுற்றுப்பக்கங்களிலுள்ள விஷயங்களோடு யாதொரு சம்பந்த மில்லாததாகவும், வர்ணம் அல்லது வரம்புகளில்லாததாகவும், வெளியை (தேசத்தை)ப்பற்றிச்சிந்திக்க முயற்சி செய்ய அஃதாவது வெளியை மாத்திரம் பிரித்துத் தனிப்பொருளாக எண்ண முயற்சி செய். அப்படி எண்ண உன்னால் முடியாது. இரண்டு எல்லைகள் மத்தியிலாயினும் அல்லது மூன்றுபொருள்களின் மத்தியிலாயினும் இருக்கும் இடைவெளியாக அதனை நீ பாவனை செய்தல் வேண்டியதாயிருக்கிறது. காலத்தைப் பற்றியும் அப்படியே-காலத்தைத் தனிப்பொருளாக நீ பாவனை செய்ய முடியாது. அதைப் பாவனை செய்ய ஒன்று முன்னும் ஒன்று பின்னும் வரும் இரண்டு சம்பவங்களைக்கொண்டு தொடர்ச்சி என்னும் பாவனையால் இவ்விரண்டு சம்பவங்களை இணைத்தல் வேண்டும்.............இவைகளுக்குத் தமக்கென ஓர் இருப்பு கிடையாது. நாற்காலிக்கும் சுவருக்கும் இருக்கும் இருப்பு கூட காலதேசங்களுக்குக் கிடையாது:—

ஸ்ரீமத் ஸ்வாமி விவேகாநந்தர்.

## 4 - வது அத்தியாயம்.

### நமக்கு நாமே ஏற்படுத்திக்கொண்ட போராட்டம்.

வினா:—முன் அத்தியாயத்தில் உலகமானது காலதேசத்திலுள்ளதென்றும், அக்கால தேசங்கள் மனதுக்கு அன்னியமாக இல்லையென்றும், அம்மனமானது நம் வசப்பட்டாலன்றித் துக்க நிவாரணத்துக்கு ஹேது இல்லையென்றும், அம்மனதைப் பிரணவமந்திர உபாசனையால் நம் வசப்படுத்தலாமென்றும் பிரதிபாதிக்கப்பட்டன. காலதேசங்களாகப் பொருந்தும் சக்தி, இம்மனதின் வசமுள்ளதா ? அல்லது மனம், தனக்கு அன்னியமாகப் பகிர் முகத்திலுள்ள விஷயங்களில் இருந்து, இச்சக்தியைக் கிரகிக்கின்றதா ? இதனை விளக்கிக்கூறல் வேண்டும் ?

விடை:—நாம் மனோராஜ்யம் செய்யும் பொழுதும், அல்லது கனவு காணும்பொழுதும், நாமே ஒரு உலகத்தை உண்டாக்கிக் கொள்ளுகின்றோம். இப்படி, அந்த நிலையில், நாமே சிருஷ்டித்துக் கொள்ளும் உலகத்தில் உள்ள பொருள்கள், எத்தன்மையனவென்பதைக் கவனித்தல் வேண்டும். நாம் நனவில் கண்ட பொருள்களை விடப் புதியனவாகப் கனவில் பொருள்களைக் காண்பதில்லை. மனோராஜ்யத்திலாவது, சொப்பனத்திலாவது, ஒரு மனிதன் தான் பறப்பது போலத் தன்னைக் காணலாம். நாம் பறக்கிற மனிதனை நனவில் காணாதிருந்தபோதிலும், மனிதனைக்கண்டிருக்கின்றோம்; பக்ஷிகள் பறப்பதைப் பார்த்திருக்கின்றோம். இவை இரண்டையும் சேர்த்துக்கொண்டு பறக்கிற மனிதனை, மனமானது சிருஷ்டித்துவிட்டது. ஆகவே, நாம் கனவில் காணும் பொருள்களெல்லாம், நனவில் கண்டபொருள்களாகவாவது, அவைகளின் புடைபெயர்ச்சியாலுண்டாகும் நூதனப் பொருள்களாகவாவது,

தோன்றுமேயொழிய, இவைகளை யாதாரமாகப் பெறாத முற்றும் நூதனப்பொருளாகத் தோன்ரு. இது எதைக்காண்பிக்கின்றதென்றால், மனதிற்குத்தேசத்தை உண்டாக்கக்கூடிய சக்தி மாத்திரமுள்ளது; ஆனால், தேசம் என்கிற எண்ணம், நமது இந்திரியங்களுக்கு விஷயமாயுள்ள பொருள்களின்றி உண்டாகாதென்பதைக் காண்பிக்கின்றது. நமது மனதில் பொதிந்துள்ள தேசத்தையுணரும் சக்தியை வெளியிலிழுப்பதற்குப் பகிர்முகப்பொருள்கள் ஹேதுவாக இருக்கின்றன; ஆகவே, இந்தச் சக்தி மனதினிடத்தில் சுபாவசித்தமாயுள்ளது.

வினா:—இந்தச்சக்தி மனதுக்கு வந்தேறியதெனக் கூறலாகாதோ? விஷயங்கள் இந்தச் சக்தியை மனதுக்குக் கொடுத்திருக்கின்றனவென்று எண்ணலாகாதோ?

விடை:—விஷயங்கள் அந்தக்கரணத்தால் அறியப்படுகின்றன. ஒரு பொருள் மனதிற்குத் தோன்றும்போது, முதலில் மனது அப்பொருளை சாமானியமாக அறிகின்றது; பிறகு இச்சாமானிய ஞானவாயிலாக விசேஷஞான முண்டாகின்றது. அஃது எங்ஙனமெனின், மனதானது முதல் முதல் ஒரு யானையைக் காண்கின்றதென்று பாவனைசெய்து கொள்வோம்; அப்பொழுது மனதில் ஏதோ மற்றொரு உருவமும் தோன்றுகின்றது. மனதானது இந்த இரண்டு உருவங்களையும் ஒத்திட்டுப்பார்த்துப் பொதுலக்ஷணங்கள் இன்னவையென்றும் விசேஷலக்ஷணங்கள் இன்னவை யென்றும் ஓர்ந்துணர்ந்து, இவைகளைத்தன்னுள் சேகரித்து வைத்துக் கொள்ளுகின்றது; இவ்விதமே வேறு பிராணிகளையும்கண்டு, பொதுலக்ஷணங்களைக் கொண்டு அவற்றிற்கியையப் பொதுப் பெயர்களையும், விசேஷ லக்ஷணங்களைக்கொண்டு அவற்றிற்

னையைப் பல்வேறு பெயர்களையும் அவற்றிற்கு இடுகின்றது. இவ்விதம் பல்வேறுபட்ட பொருள்களைக் கண்டறிந்து, அவைகளிலுள்ள சாமானிய குணங்களையும் விசேஷ குணங்களையும் இனம் இனமாகப்பிரிக்கும் சக்தி, பகிர் முகத்திற்றோன்றும் பொருள்களால் மனதுக்கு ஊட்டப்பட்டதெனக் கூறுவது பொருந்தாது. பகிர்முகத்திலுள்ள பொருள்கள், மனதினுள் அடங்கியிருக்கும் தேசகால எண்ணங்களை வெளியாகச் செய்வதற்கு நிமித்த காரணங்களாக இருக்கின்றனவென்று மாத்திரம் புகலலாமேயொழிய, அவ்வெண்ணங்களை உற்பத்தி செய்யும் சக்தி அவைகளுக்கிருக்கின்றதென்று கூறுதல் கூடாது.

வினு:—மனதானது வரம்புள்ளது அவ்வித மனதால் விளையும் கால தேசங்களும் வரம்புள்ளவைகளாக வன்றோ இருத்தல்வேண்டும்? அங்ஙனமன்றிக் காலதேச பேதங்களாலாய உலகமானது எல்லையற்றதாக இருக்கின்றது; அதனால், கால தேசங்களும் எல்லையற்றனவாக விருத்தல் வேண்டும்; இந்த எல்லையற்ற காலதேசங்களுக்குத் தமக்கென உருவம் இல்லையென்று பகரலாமா?

விடை:— நம்முடைய மனோராஜ்யத்திலும் கனவிலும் தோன்றும் காலதேசங்கள் எப்படி நமது மனதை இருப்பிடமாகக் கொண்டுள்ளனவோ, அப்படியே பகிர் முகத்தில் தோன்றும் கால தேசங்களாலாய உலகங்களும் கடவுளின் வரம்பு கடந்த மனதை இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றனவென்று சொல்வதற்கு என்ன ஆக்ஷேபனை இருத்தல் கூடும்!

வினு:—நாம் நித்திரை செய்யும்பொழுதும், இறக்கும்பொழுதும், நமக்கு உலகம் இல்லையாம்; ஆயினும், விழித்திருக்கும் அல்லது உயிர்த்திருக்கும் மற்ற மனிதர்களுக்கு

உள்தாம்; அதனால், இத்தகைய உலகம் எக்காலத்திலும் விழித்துக்கொண்டிருக்கும் சர்வ வல்லமையுள்ள ஈசுவரன் மனதில் இருத்தல்வேண்டுமென்றன்றோ நீர் கூறுகிறீர்?

விடை:—ஆம். மனிதன் தூங்கும்போதும் மரிக்கும் போதும் உலகம் அவனுக்கில்லாமற்போனாலும், விழித்திருக்கும் அல்லது உயிரோடிருக்கும் ஏனையோர்களுக்கு விளங்கி வருவதால், இந்த எல்லையற்ற உலகம் ஈசுவரனுடைய எல்லையற்ற மனதை இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றதென்று கூறல்வேண்டும்; கூறுவிடின், அடியில் வரும் தோஷங்கள் நேரிடும்.

(1) ஆதியில் சர்வவல்லமை, சர்வஞ்ஞத்வம், பரிசுத்தம், நிகரின்மை முதலியவற்றையுடைய அவாங்மானஸ கோசரமான ஈசுவரன் என்று கூறப்பட்ட ஒரு பரம்பொருள் உண்டென்பதையும், அவருடைய சுத்த சங்கற்பத்தினின்றும் சிருஷ்டி ஸ்திதி சங்காரங்கள் நடைபெறுகின்றனவென்பதையும், எல்லா ஆஸ்திகர்களும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். இந்த நம்பிக்கைக்கு ஹானி உண்டாகும்.

(2) மனிதன் ஈசுவரனுடைய அம்ஸபூதன்; இக்காரணத்தால் அவன் ஈசுவரனை முற்றிலும் ஆதாரமாகக்கொண்டிருக்கின்றான்; அதனால், அவனுக்குள்ள மனோசக்தி தேகசக்திகள் மிகச் சொற்பமாக இருக்கின்றன. அந்தச் சொற்ப சக்தியும் அவனிடத்துச் சொற்பகாலம் நிகழுகின்றது என்னும் விஷயத்தை எல்லா மதஸ்தர்களும் நம்புகிறார்கள். அந்த நம்பிக்கை சிதைவடையும்.

வினா:—பரந்திருக்கும் இவ்வுலகம் ஈசுவரனுடைய மட்டில்லா மனதை இடமாக உடையதாயின், அவ்வுலகத்தால் யார்க்கு என்ன பிரயோஜனமாம்?

விடை:—மனிதன் ஈசுவரனுடைய அம்ஸபூதன்; அவனிடத்திலுள்ள சக்தி ஈசுவர சக்தியை நோக்க, மிகச் சொற்பமாமென்பது முன்னே எடுத்துக்கூறப்பட்டிருக்கிறது. இவ்வளவு அற்ப சக்தியைப் பெற்றுள்ள மனிதன் வீடுகள் கட்டச் சக்தியுடையவனு யிருக்கிறான்; மாட மாளிகைகள், கூட கோபுரங்களைக் கட்டவும், பெருநதிகளைக்கடந்து செல் லப் பாலங்களையும், மனதைப் பிரமிக்கச்செய்யும் பெரும் அகழிகளையும் கட்டவும் ஆற்றலுடையவனுயிருக்கிறான்; இவை மாத்திரமா? காலதேசங்களையும் மின்சார சக்தியால் தனக்கு இடையூறில்லாமல் செய்துகொள்கிறான்; தனது மனோகற்பனு சக்தியினுல் புது உலகங்களை உண்டாக்கிக் கொண்டு அநாதிகாலமாக வந்துகொண்டிருக்கும் இவ்வுல கத்தையும் மறந்து விடுகிறான். இவ்வளவையும் அவன் தனக்கு ஈசுவரனுல் கொடுக்கப்பட்டிருக்கும் சொற்ப சக்தி யைக்கொண்டே செய்கிறான். இவையாவும் எப்பொழுது அவ னுக்கு இன்பந்தாராமல் துன்பந்தருவனவாகத்தோன்றுமோ, வியப்புண்டாக்கும் பொருள்கள் அடங்கிய உலகமானது எப் பொழுது இவனது மனதைக் கவராமல் போகுமோ, காதல் மிகச்செய்யும் அணியிழையாரது வாள்போன்ற கண்களும், மதலை மொழிப்பாலகர்களும், செல்வத்தால் விளையும் அதி காரமும், சுகமும், பேரும் பிரக்கியாதியும், உலகமளிக்கும் இவைபோன்ற பொருள்களும், எப்பொழுது இன்பம் பயப்ப தொழிந்து துன்பந்தருவனவாகத் தோன்றுமோ, அப் பொழுது அவன் இவையனைத்தையும் கக்கின சோற்றை போல அருவருத்து உதறித்தள்ளிவிட்டுத் தனக்குச் சொற்ப சக்தியை ஈந்துள்ளவரும் தனக்கு ஆதாரபூதராயிருப்ப வரும், தனது உண்மை வீடாகயிருப்பவரும் ஆய ஈசுவரனை நாடித் திரும்பிச்செல்வான்; பின்,

"விடையது ரிறையே தானத மற்றவன்பான்
மின்னெம தன்னையன் னவரைக்
கடையரே மறந்து துறந்துதா னன்றே
கடும்பவ விடும்பையுற் றனமிவ்
வடைவுணர்த் தினைபோன் றடலிதற் கேது
வாய்வாத் தாய்பிதா வெனநெஞ்
சுடைவுறு நின்றாய் பவந்தொறிவ் வணமுற்
றளவுயிர்க் களவியா துரையே."

என்று சிந்தாகுலனாகி, பகிர்முகப்பட்டுள்ள மனதை உள்முகப்படுத்துங் கருமத்தை மேற்கொள்வான். ஈசுவரனது மனதை இருப்பிடமாகவுடைய இவ்வுலகமானது ஒவ்வொரு ஜீவனிடத்தும் எப்பொழுதாவது ஒருசமயத்தில் விஷயபோகங்களில் வெறுப்பை யுண்டாக்கி, மனதை அந்தர்முகப்படுத்தும் அவாவை அவனுக்கு ஊட்டும். இது திண்ணமாம்.

**வினா:**—மனதானது அந்தர்முக விருத்தியில் ஈடுபடுவதனால் விளையும் பயனென்ன?

**விடை:**—மனிதனுக்கு எப்பொழுது விஷயானுபவத்தில் விரக்தியுண்டாகின்றதோ, எப்பொழுது உலக இன்பங்கள் கக்கின சோறுபோலத் தோன்றுமோ, அப்பொழுது அவன் மனதானது தன்மேலேயே திருஷ்டியைச் செலுத்த ஆரம்பிக்கும். அப்பொழுதுதான் மனிதன் தத்துவ ஆராய்ச்சி செய்வதற்கு அருகனாகிறான்; ஏனெனின், மனதைப் பகிர்முகத்தில்இழுக்கச் சக்தியுள்ள பொருள் அவனுக்கு ஒன்றுமில்லாமையால், "நான் யார், எங்கிருந்து வந்தேன்" முதலிய கேள்விகள் அவன் மனதில் உதிக்க ஆரம்பிக்கின்றன; அதனால், அவைகளுக்குச் சமாதானம் தெரிந்துகொள்ள முயலுவன்.

வினு:—இவ்வித ஆராய்ச்சியினுல் வரும் பிரயோசனம் யாது?

விடை:—இவ்வித ஆராய்ச்சியின் மூலமாகத்தான் மனிதன் தனது நிஜஸ்வரூபம் இத்தன்மைய தென்பதைத் தெரிந்து கொள்ளுகிருன்.

வினு:—தனது ஸ்வரூபம் இன்னதென்பதைத் தெரிந்து கொள்ளாத மானுடனும் இவ்வுலகில் இருக்கின்ருனே? மனதும்தேகமும் சேர்ந்ததுதான் மனிதன் என்பது எவனுக்குத் தான் தெரியாது? இவ்விரண்டும் சேடிக்கும் வரையில்தான் மனிதன் உயிருடையவனென்பதும், இவ்விரண்டும் சேட்டையற்றபொழுதுதான் மரணமடைந்தான் என்பதும் யாருக்குத்தான் தெரியா? உலக இன்பத்தில் வெறுப்பு வந்தபொழுதுதான் இதை உணர்ந்துகொள்ளல் இயலுமென்று கூறுவது நகைப்புக்கு இடமாயிருக்கின்றது.

விடை:—மனதற்றநிலையொன் றுளது என்று ஆன்ருேர் கூறியிருக்கின்றனர். அந்நிலையில் மனது சேட்டையற்று நிற்கத் தேக உணர்ச்சியுமில்லாமல் தான் மாத்திரமாய் மனிதனிருக்கின்ருன் என்று அனுபவிகள் கூருமல் கூறியிருக்கின்றனர்.

வினு:—இதை யுக்திவாயிலாக எடுத்துக்கூறல் வேண்டும்?

விடை:—ஒருவன் தத்துவ ஆராய்ச்சி செய்யும்பொழுது தனது ஸ்தூல சூக்ஷ்ம தேகங்கள் நிமிடத்திற்குநிமிடம் மாறிக்கொண்டு வருகின்றனவென்பதையும் தான் மாத்திரம் இவைகளோடு மாறுதலடையாமல் இருந்தபடியே இருந்து வருதலையும் அறிகின்ருன். தனது உடம்பு,குழந்தை உடலாக இருந்தபொழுது, தன்னை ஒரு குழந்தையாக மனிதன் பாவித்து வந்தான்; தனது உடல் பலவீனமாக இருந்த

பொழுது தன்னைப் பலவீனனாக எண்ணினான்; தனது உடல் வலிவாக இருந்தபொழுது தன்னை வலிவுடையவனாக எண்ணினான்; தனது தேகம் யௌவன தசையில் இருந்த பொழுது தன்னை வாலிபனாகப் பாவித்து வந்தான். அவன் இவ்விதமாக எந்தெந்தக் காலத்தில் உடலானது எந்தெந்த நிலையில் இருந்ததோ அந்தந்த நிலையே தன்னுடையதெனப் பாவித்து வந்தான்; இதனால், தனது தேகமானது இவ்வாறு பலவாறு மாறுதல்களை விட்டு விட்டு அடைந்தபோதிலும், தான்மாத்திரம் இம்மாறுதல்களை யடையாமல் இவைகளைச் சாக்ஷிமாத்திரமாய்க் கண்டு வருவதாகத்தனது அனுபவத்தை ஒத்துக்கொள்ள வேண்டியவனாயிருக்கின்றான்.

> "பொன்றுவ துடம்பதனு ணின்றபொருள் பொன்றா
> தென்றுமொ ரியற்கையொடு நிற்குமியல் பைக்கேள்
> முன்றொடர் மகப்பருவம் விட்டிளமை மூப்போ
> டொன்றுமுட லாயினு முயிர்க்கியல்ப தன்றால்."

> "ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந் துளவாதல்
> வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்றாய் விளைந்தமைதல்
> மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற
> வாறியல்பு முடம்பன்றி யறிவுடையா வாதலினால்."

என்று பகவத்கீதை (அத் 2-14-23) கூறுவதையும் உணர்க.

வினா:—தேகம் விகாரமடைய, தேகி விகாரமடையா திருப்பதாயின், இந்தத்தேகியை உணர்வதெப்படி?

விடை:—இதை, நித்தியாநித்திய வஸ்து விவேகத்தால் அஃதாவது ஆன்மா இன்னது, அனான்மா இன்னதென்று ஆராய்ந்துணர்தல் வாயிலாக உணர்தல்வேண்டும். இப்பொழுது ஒரு மனிதனிடத்திலுள்ள அறிவானது தேகேந்திரியாதி உபாதிகளின் குற்றங் குறைவுகளைத் தன்மேலேற்றிக் கொண்டு பிராந்தி ஞானத்தை யடைந்திருக்கின்றது. தேகத்

துக்குச் சுரம் வந்து விட்டால் எனக்குச்சுரம் வந்து விட்டதென்றும், குடல் அஜீரணப்பட்டால் யான் அஜீரணத்தால் வாதைப்படுகின்றேனென்றும், இன்னும் ஸ்தூல சூக்ஷ்ம தேகங்களுக்கு என்னென்ன கஷ்டங்கள் நேரிடுகின்றனவோ அவையாவும் தனக்கே நேரிடுகின்றன வென்றும் ஆன்மாவானது எண்ணிப் பிரமிக்கின்றது. ஆனால், உபாதிரகித ஆன்மாவை நோக்கின், அது சுரத்தால் பீடிக்கப்படக்கூடியதும், அஜீரணத்தால் வாதைப்படக்கூடியது மன்றும். மேலும், ஆன்மாவானது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல, பிராமணனுமல்ல, சூத்திரனுமல்ல, ஹிந்துவும் அல்ல, முசல்மானுமல்லவாம். இந்த ஜாதியுடையதென்றும், இந்தச்சமயத்தைச் சேர்ந்ததென்றும், இந்த வகுப்பைச் சேர்ந்ததென்றும் ஆத்மாவைக்கூறல் இயலாது. வேறுபாடுகளெல்லாம் உபாதிக்கேயன்றி ஆத்மாவிற்கு இல்லையாம். தனக்குக் குழந்தைப்பருவம்போக யௌவனப்பருவம் வந்தபொழுதும், யௌவனப்பருவம் அகலக் காளைப்பருவம் நெருங்கியபொழுதும், தான் மாத்திரம் இப்பருவங்களோடு மாறுமல் ஒருபடித்தாய் இருந்து வருவது ஒவ்வொரு மனிதனுக்கும் அனுபவமாகும். ஆகையினுல், சதா மாறிக்கொண் டிருக்கும் இவ்வுலகில், தான் மாத்திரம் நாமரூபமின்றியும், ஜாதிசமயக் கோட்பாட்டுக்கு அதீதமாயும், கோரிக்கையும் பயமும் இல்லாமலும், எல்லாவித ஸ்தூல உபாதியினின்றும் விடுபட்டதாகியும், சுகதுக்கமற்றதாகியும் இருப்பதாக, தன்னை மனிதன் ஆராய்ச்சினுல் தெரிந்து கொள்ளுகின்ருன். ஸ்படிகத்துக்குத் தனக்கென ஒரு நிறமில்லாதிருந்தும், அது தன்னை அடுத்த பொருட்களின் நிறத்தைப் பொருந்தித் தோன்றுதல்போல, ஆன்மாவும் தேகத்தோடு சையோகமாகும் பொழுது தேகத்துக்குரிய விகாரங்களை அடைந்திருப்பதுபோலத் தோன்று

கின்றது. இவ்விதமான ஆராய்ச்சியின் முடிவில், மனிதனுக்கு ஆன்மாவானது காலதேசங்களுக்கு அதீதப்பட்டதென்றும் அகண்டமென்றும், தன்னுள்ளே குறைவற்ற நிறைவை யுடையதென்றும், சுத்த சம்வித் என்றும் தோன்றும். தனது நிஜஸ்வரூபமாகிய ஆன்மாவின் லக்ஷணம் இத்தன்மையதாயின் மற்றவரது ஆன்மாவின் லட்சணமும் இத்தன்மையாகத்தான் இருத்தல் வேண்டுமென்றும் அவன் நிர்ணயிக்கிறான்; ஏனெனின், ஒருபானைச் சோற்றுக்கு ஒரு சோறுதான் பதம்-அஃதாவது பானையிலுள்ள அரிசி வெந்து போய்விட்டதா என்று தெரிந்துகொள்வதற்கு ஒரு சோற்றை எடுத்துப் பதம் பார்த்தல் போதும்; எல்லாச் சோற்றையும் தொட்டுப்பார்க்கவேண்டியதில்லை என்று பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறியுள்ளார். ஆகவே, தனது ஆன்மா எப்படி காலதேசங்களுக் கதீதப்பட்டு அகண்டமாய் விபுவாய் மாறாததன்மையதாய்த் தோன்றுகின்றதோ அப்படியே ஏனைய பிராணிகளின் ஆன்மாவும் இருத்தல்வேண்டுமென்பது ஐயந்திரிபற விளங்கும். மக்கள்-தேவர்-நரகர்-மிருகம் - பக்ஷி முதலிய பிராணிகளின் ஆன்மாக்கள் உபாதியால் வெவ்வேறாகத் தோன்றுகின்றனவே யொழிய, சாராம்சத்தில் ஏகமேயா மென்பதைத் தெளிவாக வுணர்தல் வேண்டும்.

வினா:—உலகத்தில் நாம் எத்தனையோ ஜீவர்களைக் காண்கின்றோம். ஒவ்வொரு ஜீவனும் தன்னை மற்ற ஜீவர்களிலும் வேறென்றே நினைக்கின்றான். இது நல்ல ஆத்மா, இது கெட்ட ஆத்மா, என்று உலகோர் கூறுவதை நாம் கேட்டிருக்கின்றோம். ஒருவன் இறந்துவிட்டால், அவனுடைய ஆத்மா உடலைவிட்டுப் பிரிந்துபோய்விட்டது என்று பாமரர்கள் கூறக்கேட்டுள்ளோம்; ஆகையால், ஆன்மா ஒன்றென்று கூறுதல் ஒவ்வாது.

விடை:—எரி முதலியவற்றில் சூரியப் பிரதிபிம்பங்கள் அநேகமாக விருத்தலைக் காண்கின்றோம்; இதனால், சூரியன் பல என்று கூறலாமா? (ஸ்தூலசூக்கும) உபாதிகளில் ஆன்மாவானது பிரதிபலித்துப் பலவாகக் காணப்பட்ட போதிலும், அவையாவும் வெவ்வேறு ஆன்மாவென்று எப்படிச் சொல்லல் இயலும்? ஜீவர்கள் யாவரையும் சிதாபாசர்களென்று அறியவேண்டும்? ஜீவர்கள் உபாதியுடையோராகையால், ஆன்மா ஜீவர்களாகாது. இந்த ஜீவர்களை உபாதிகளைந்து ஆராய்ந்து பார்க்கில், சாராம்ஸத்தில் இவைகள் ஏகமேயென்பது அஃதாவது ஆன்மாவே என்பது புலப்படும். இந்த நிஜ ஏகமான ஆன்மாவை, அதன் சாயாவடிவினனாகிய ஜீவன் ஓர்ந்துணர்ந்து அதனோடு ஐக்கியமுறின், அப்பொழுது தன்னை எல்லாவற்றிலும் பிரதிபிம்பமாகக் காண்பான்.

இந்நிலையைச் சுபாவசித்தமாக அடையப்பெற்ற புருஷன், சர்வஞ்ஞத்வம் முதலிய பிரஹ்ம இலக்ஷணங்களையுடையவனாய், தன்னைப் பிரஹ்மமாகவே காண்பான். அக்காலத்து உலக துக்கங்கள் கஷ்டங்கள் அவனை அசைக்கமாட்டா. அவன் தன்னை எல்லாரிடத்தும், தன்னிடத்து எல்லாரையும் காணும் திறனுடையோனாகையால், கிலேசமற்றவனாய்ச் சிருஷ்டி முழுதுக்கும் தன்னை நியந்தாவாகக் கண்பான். **அஷ்டவக்ர மஹரிஷி** என்ன கூறி ஆனந்தித்தனரோ அவ்விதமே அவனும் ஆனந்தபரவசனாய் ஓலமிடுவான். அம்மஹரிஷி கூறியதாவது:—"மண் பாத்திரம் முடிவில் மண்ணேயாதல் போலவும், பொன்னாற் செய்த பணி (நகை) உருவமாறிப் பொன்னேயாதல் போலவும், அலைகள் தண்ணீரில் உருவிழந்து நிற்றல்போலவும் என்னிடத்திருந்துதித்த உலகம் என்னிலே லயமாதல் வேண்டும். ஓ! ஆனந்தமே! பிரமன்முதல் புல்லீறாக உள்ள ஜீவராசிகள் முற்றும், இவ்வுலகத்தோடு கூட மரித்த போதிலும், மரியாது

சாஸ்வதமாய் (எஞ்சி) இருக்கும் என்னை யான் நமஸ்கரிக்கின்றேன். ஓ! ஆனந்தமே! நான் சமானாகிதனுனபடியாலும், எனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்மையாலும், அண்டகோடிகள் யாவும் என்னினின்றும் வேருக இல்லாதகாரணத்தால்எனக்குத் தேகமிருந்தும், நான் வருவதுமில்லை போவதுமில்லை யாதலாலும், யான் என்னையே நமஸ்கரிக்கிறேன். ஓ! ஆனந்தமே! எனக்கு யானே நமஸ்காரம் செய்கின்றேன்; ஏனெனின், சரீரத்தொடக்கில்லாமல், இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஒருவனே தரித்திருக்கின்றமையின், என்னைவிடக் கெட்டிக்காரனும் சாமர்த்தியம் உடையவனும் இல்லை. சங்கற்பமும் பாஷையும் எட்டியறியக் கூடியவை எவைஎவையோ அவை யெல்லாம் என்னிடத்தில் உள்ளன வென்ருயினும், அல்லது ஒரு பொருளுமில்லையென்ருயினும், சொல்லக்கூடிய எனக்கு ஓ! ஆனந்தமே! நான் நமஸ்கரிகிறேன்.'' என்று இவ்வாருக **அஷ்டவக்ர மஹரிஷி** பிரலாபித் திருக்கின்ருர்.

**வினு:**—ஒவ்வொருவனுடைய ஆன்மாவும் இவ்விதம் ஆனந்தஸ்வரூபமேயானுல், ஒப்புயர்வில்லாத அந்த ஆன்மா தனது நிரதிசயானந்தத்தினின்றும்நீங்கி, க்ஷணம் க்ஷணம் மாறிக்கொண்டேயிருக்கும் அநர்தசடதுக்கமான உலகம் தரும் கஷ்டங்களை, ஹிம்சையை ஏன் நாடிச் செல்லுகின்றது. தனது சுய பரமானந்த சாந்த நிலையைக் கை சோரவிட்டுத், திர்ஷ்டா திர்ஷ்டங்களான அலைகளால் ஏன் மொத்துண்ணுகின்றது? அதன் சர்வஞ்ஞத் தன்மையை ஆவரணித்து வியாபகமான மனதின் சக்தியைச் சிற்றளவினதாகச் செய்யக்கூடிய சக்தி யாது?

**விடை:**—இந்தக் கேள்விக்கு எல்லாச் சமயத்தினரும் ஒரே வகையான சமாதானம் கூறுவதில்லை. சர்வஞ்ஞத்துவமாகிய கண்ணைக் குருடாக்கிச் சர்வ வல்லமையாகியசக்தியைக்

குறைக்குஞ் சக்தி அவித்தைக்கு உண்டென்று கூறுவர் ஒரு சாரார். இந்த அவித்தை பரப்பிரஹ்மத்தைப்போல அநாதி நித்தியமென்றும் சிருஷ்டிக்குக் காரணமென்றும் உரைக்கப்படுகின்றது; ஏனெனின், தேககிருத்தியங்களும், மனோகிருத்தியங்களும் அந்த அவித்தையிலிருந்தே உதித்துள்ளன.

வினா:—அவித்தை பிரஹ்மத்துக்கு அடங்கினதா; அல்லது பிரஹ்மம் அதற்கு அடங்கினதா?

விடை:— இந்தப் பிரஹ்மம் இத்தன்மையதென்பதை யுக்தி பூர்வகமாக முன்பு உணரல்வேண்டும்; நமக்குத் தெரிந்துள்ளவன் ஜீவன். இந்த ஜீவனுடைய ஞானக்கண்ணானது உரையிறந்து பெருமைபெற்றுள்ள அவித்யா சக்தியால் எவ்வளவுதான் மறைக்கப்பட்டிருந்தபோதிலும், தனது நிஜ குணத்தைமுற்றிலும் தன்னைவிட்டு நீங்காமல் கொஞ்சம்வைத்துக் கொண்டிருக்கின்றது. இவ்விதம் சிறிது தலைகாட்டிக் கொண்டிருக்கும்நிஜகுணத்தைக்கொண்டு பரப்பிரஹ்மத்தின் தன்மையைத் தெரிந்துகொள்ளல்வேண்டும். ஜீவன் எவ்வளவுதான் விஷய போகங்களில் அழுந்தியிருந்தபோதிலும், ஓரானோர்பொழுது இவைகளின் நிலையாமையைக்கண்டு, இவைகளை விட்டகல முயல்கின்றான். ஜீவனுக்கு முதலில் இன்பம்போலத் தோன்றி முடிவில் துக்கத்தை விளைவிப்பது அவித்தையாமென்று ஆன்றோர் கூறியிருக்கின்றனர். மனிதன் இம்மண்ணுலகில் ஸ்தூல சூட்சும உபாதிகளைக்கொண்டு நுகரும் சுகங்களுக்கும் துக்கங்களுக்கும் இந்த அவித்தைதான் காரணமாம். பலபரிமாணங்கள் பொருந்திய சுகதுக்கங்களாய எல்லாவித உணர்ச்சிகளும், எல்லாவித ஆசையும் புத்தியால் உண்டாகும் எல்லாவித வியவகாரங்களும் இந்த அவித்தையிலிருந்தே விளைந்துள்ளனவாம். இவற்றைவிட்டு

அகல வேண்டுமென்று எண்ணங்கொள்ளும் ஜீவனது நிஜசுபாவம், அவித்தையின் சுபாவத்திற்கும் அவித்தையாலுண்டாகும் உலகத்தின் சுபாவத்திற்கும் வேறாகத்தான் இருத்தல் வேண்டும் என்பது, கரதலாமலகமென விளங்கல்வேண்டும். இந்த நிஜசுபாவம் உபாதிசகித மனிதரிடத்து விளங்காது; உபாதிரகித ஜீவனிடத்து விளங்கும். இந்த உபாதிரகித ஜீவனும் பரப்பிரஹ்மமும் வேறாகா. பரமாத்மா சுத்த சைதன்யமாகும்; சுத்த சத்தாகும்; மோக்ஷாநந்தமேயாகும். இதனிடத்தில் கர்மகுணங்கள் லவலேசமும் கிடையா. காலதேசங்களுக்கு அதீதப்பட்டிருத்தலினால் பாகுபாடற்றதாயும் ஒப்புயர் வில்லாததாயும் பரப்பிரஹ்மமானது விளங்குகிறன்து. சிருஷ்டி ஸ்திதி சங்கார கர்த்தர்களாகிய பிரம்மா, விஷ்ணு, மஹேசுவரன் ஆகிய இம்மூவரும் அவித்தையின் உதரத்திலிருந்து உதித்தவராவர். நன்மை தீமைகளுக்கும், தர்மாதர்மங்களுக்கும், பக்ஷாபக்ஷங்களுக்கும், இரக்கம் இரக்கமின்மைக்கும், சுகதுக்கங்களுக்கும், சீதோஷ்ணத்துக்கும், தமோ ரஜோ குணவிருத்திகளுக்கும், அசைவுக்கும் அசைவின்மைக்கும், இந்த அவித்தையே பிறப்பிடமாகும். ஆகையினால், எல்லாவித அசைவுகளையும் உருவகஞ்செய்து அவைகளுக்குச் சக்தி என்று பொதுப்பெயரிட் டிருக்கின்றனர்; அவைகளை மாயையென்றும் அழைக்கின்றனர். மாயை என்பதற்குப் பிழை அல்லது ஆரோபம் என்பது பொருளாம்; ஏனெனின், அது ஞானக்கண்ணை மறைக்கின்றது. ஆகையினால், சுயஞ்சோதியாகிய ஆன்மா, இருளுருவமாகிய அவித்தைக்கு, எப்படி அடக்கமெனக் கூறலாகும்? வெளிச்சத்தின்முன் அந்தகாரம் நில்லாது, மறைந்துபோமன்றோ? ஜீவனது நிஜஸ்வரூபமாகிய ஞானவடிவை, அவித்தை அடக்கியாள்கின்றது,

என்று எண்ணுவது, மலடிமகன் வியவகாரம்போலாகும். ஆகையினால், பிரஹ்மம் அவித்தைக்கு அடங்கினதாகாது என்பது பெறப்படுகின்றது.

வினு:—அப்படியானல், பரப்பிரஹ்வம் அவித்தையின் சம்பந்தமில்லாதது என்று கூறல்வேண்டும். அப்படி கூறுவது அனுபவத்துக்கு விரோதமாக இருக்கின்றது. ஞானமும் அஞ்ஞானமும் தம்முள் வேறுபாடான குணங்களையுடையனவாம்; ஆயினும், அவை இணைபிரியாமல் இருத்தலைக்காண்பது உலகோர் அனுபவம். இதற்குச் சமாதானம் என்னை?

விடை:—பரமாத்மாவானது சுயஞ்சோதியாகவும், சர்வஞ்ஞத்துவமாகவும், கல்மஷாகிதமாகவும் விளங்கியிருத்தலால், மாயையினுல் அதனது பரிசுத்தத்தன்மை அபகரிக்கப்பட்டிருக்கின்றது என்று கூறுவது இயையாது. தாமரை இலையின் மேலுள்ள ஒரு நீர்த்துளியானது எப்படி அத்தாமரையிலையை நனைக்கச் சக்தியற்றதா யிருக்கின்றதோ அப்படியே அவித்தை, அஃதாவது, மாயையானது பரமாத்மாவை உறைவிடமாகக் கொண்டிருந்தும் பரமாத்மாவைத் தன் வயப்படுத்தும் சக்தியற்றதாக இருக்கின்றது. ஜீவன் தனது ஒப்புயர்வில்லாத சுயஞ்சோதி வடிவைத் தனது ஸ்வானுபவத்தில் எப்பொழுதுஉணர்கின்றனே அப்பொழுது இவ்வுண்மை அவனுக்கு ஐபந்திரிபற விளங்கும். அதுவரைக்கும் அவனுக்கு "யான் மாயைக்கு வசப்பட்டவ" னென்கிற எண்ணம், அவனை விட்டகலாது.

வினு:—இப்படி பரப்பிரஹ்மத்தைத் தனக்கு உறைவிடமாகக் கொண்டிருக்கும் மாயை, பரப்பிரஹ்மத்தை எப்படி உபாதியை யேற்றுக்கொள்ளச் செய்தது? பரப்பிரஹ்

மம் தன்னிஷ்டமாகவே மாயையின் வசப்பட்டதா, அல்லது மாயையானது பரப்பிரஹ்மத்தைப் பலவந்தமாகத் தன் வசப்படுத்திக்கொண்டதா?

**விடை:**—சிருஷ்டிக்கும் அவசரத்தில், பரப்பிரஹ்மமானது தனது இச்சைபாகவே கர்த்தாவாயிற்று என்பதை உபநிஷத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ளுகிறோம். ஐதரேய உபநிஷத்தின் ஆரம்பத்தில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கின்றது:—

"முதலில் பரமாத்மா ஒன்றே இவ்வுலகமாக விருந்தது; அதைத்தவிர வேறொன்றுமில்லை. சர்வஞ்ஞராகிய அவர் தம்மைச் சுற்றிப்பார்த்து 'உலகங்களைச் சிருஷ்டிப்பேன்' என்று தமக்குள்ளே நினைத்து இவ்வுலகம் யாவையும் சிருஷ்டித்தார்." இந்த உபநிஷத்து வாக்கியத்தால் பரமாத்மாவானவர் அவித்தையைத் தம்மீது வேண்டுமென்றே ஏற்றிக்கொண்டனரென்பதும், இந்த அவித்தையானது அவரிடம் கௌணமாயிருந்ததென்பதும், இதனை வெளிவரச் செய்யவும், அடக்கவும் அப்பரமாத்மாவுக்குச் சக்தியுண்டென்பதும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகின்றன. ஆகையினால், இந்த அவித்தைக்குப் பரப்பிரஹ்மத்தைவிட வேறு ஆதாரமில்லை என்பதும் இந்த அவித்தை பரப்பிரஹ்மத்துக்கு அடங்கினதென்பதும் வெளியாகின்றன.

**வினா:**—புராணங்கள் உமாதேவியென்றும் பராசக்தி என்றும் கூறுவது இந்த மாயையைத்தானா?

**விடை:**—அவித்தையைச் சிருஷ்டிபுரியும் பிரம்மனுடைய காதலியெனப் புராணங்கள் உருவகப்படுத்திக் கூறுகின்றன; சிருஷ்டி அவசரத்தில், அந்த அவித்தை முக்கியக் கருவியாமென்றும் கூறுகின்றன. புராணங்களில் அஃ

றிணையில் பிரஹ்மம் கூறப்படுவதில்லை; ஆனால், ஆண்பாலாகப் பாவிக்கப்பட்டுப் பிரஹ்மா, விஷ்ணு, உருத்திரன் என ஆண்பாற்சொற்களால் கூறப்பட்டிருக்கின்றது. அவித்தையானது இவர்கள் மூவருக்கும் முறையே ஸரஸ்வதி, இலட்சுமி, உமை என்னும் நாமமுடைய மனைவிமாராகக் கூறப்பட்டிருக்கின்றது. பிரஹதாரண்ய உபநிஷத்திலும் (1-4-3) "அவர் தம்மை இரண்டுபாகங்களாகச் செய்துகொண்டார்; அவை புருஷனும் மனைவியுமாய்விட்டன" என்று உரைக்கப் பட்டிருக்கின்றது. பந்தமில்லாதவன் விவாகஞ் செய்துகொண்டு பந்தமுள்ளவனாகின்றான்; அவ்விதம் பந்தத்தில் தன்னை ஆட்படுத்திக் கொள்வதால் எப்படி ஒருவிதமாகச் சுகத்தை அனுபவிக்கிறானோ அப்படியே பரமாத்மாவும் மாயையைத் தானே வருவித்துக்கொண்டு, தன்னை உபாதிக்கு உட்படுத்திக்கொள்வதால் ஒருவிதமாகச் சுகத்தை அடைகின்றது என்று அது கூறுகின்றதென்பது நமக்குத் தோற்றுகின்றது.

வினா:—சர்வஞ்ஞத்வத்தை விட்டு அறியாமையை எவன் தேடிக்கொள்வான்? பூர்ணானந்தத்தை நிராகரித்துப் பலவிதமான சுகதுக்கங்களால் கொந்தளிப் படைந்திருக்கும் சம்சார சாகரத்தில் தான் விழும்படி எவன்தான் ஒருப்படுவான்?

விடை.—பரப்பிரஹ்மமானது சில சமயம் மாயையுடன் (அவித்தை, அஞ்ஞானத்துடன்) கூடி லீலை புரிகின்றதென்றும் சில சமயம் சாந்தமாக இருக்கின்றதென்றும் வியாசர் முதலிய மஹரிஷிகள் தத்தம் ஸ்வானுபவத்தில் பரப்பிரஹ்மத்தின் இயல்பை ஓர்ந்திருக்கின்றனர். (பிரஹ்ம சூத்ரம் 11 1, 33).

வினா:—வாஸ்தவத்தில் நமது நிஜசொரூபம் அவாங்மனோகோசர பரப் பிரஹ்மமாக இருக்கும்பக்ஷத்தில், இப்

பொழுது நாம் படும் பொறுத்தற்கரிய அரிஷ்டங்களினின்றும் நம்மை விடுவித்துக்கொள்ள ஏன் சக்தியற்றவர்களாக இருக்கிறோம்? அவித்தையாகிய தடையை ஏன் பிளக்க அசக்தர்களாக இருக்கிறோம்? நமது நிஜசுபாவமாகிய ஆனந்த வடிவத்தை நமது ஸ்வானுபவத்தில் உணர ஏன் ஆற்றலற்றிருக்கிறோம்?

விடை:—பிறந்தது முதல் இறக்குமளவும், நமது வாழ்நாள் துக்கத்தோடன்றி எள்ளளவும் சுகமில்லாதிருந்தும், அதனிடத்து நமக்கிருக்கும் பற்றுதலை நாம் யூகிக்கக்கூடுமேயொழிய உரைத்தல் முடியாது. நாம் இனிய பந்துமித்திரர்களைத் துறந்து உயிரிழக்க மனமில்லாதிருக்கிறோம்; அட்டையைப்போல எக்காரணத்தினாலேயோ இவ்வுயிரை அவ்வளவு கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். இதனை அடியிற் கூறும் மிட்டாய்க்காரன் சரித்திரம் செவ்வனே விளக்கிக்காட்டும்.

வட இந்தியாவில், ஒரு கிராமத்தில், ஒருவன் மிட்டாய்க்கடை வைத்துக்கொண்டிருந்தான்; இவனது கடையண்டையே இவன் வீடும் இருந்தது. அக்கிராமத்திலுள்ள கடைகளில் இவன் கடையில்தான் விற்பனை அதிகம். இந்த மிட்டாய்க்காரன் தன் கடையில் வரும் வருமானத்தைக் கொண்டு, சிக்கனமாகச் செலவுசெய்து, தனது மனைவியையும் தனது இரண்டு பிள்ளைகளையும் அதிக அன்போடு காப்பாற்றி வந்ததோடு மிகுந்த திரவியத்தையும் எவருக்கும் தெரியாமல் சேகரித்துக்கொண்டு வந்தான்.

ஒருநாள் பகல், சுமார் 12 மணிக்குப் பார்ப்போர் கண்களைக் கவரத்தக்க அழகுவாய்ந்த ஒரு சன்னியாசி தாகதாபத்தால் பீடிக்கப்பட்டவராய், வெயிலின் உக்கிரத்தைச் சகிக்க முடியாமல், சற்றுநேரம் இளைப்பாற, மிட்டாய்க்காரன்

கடையில் வந்து உட்கார்ந்தார். உட்கார்ந்த அச்சன்னியாசி தமது தாகதாபத்தைத் தணித்துக்கொள்ளக் கொஞ்சம் ஜலம் கேட்டார். அந்த மிட்டாய்க்காரன் தர்மசிந்தனை யுடையவனானபடியால், தன்னிடத்திலிருந்த மிட்டாயில் கொஞ்சமும் ஒரு லோட்டா நிறைய ஜலமும் அவர்க்குக் கொடுத்தான். இவற்றை யுண்டு விடாய் தீர்ந்த சாது, தாம் தரித்திருந்த கிழிந்த வஸ்திரத்தை மிட்டாய்க்காரனுக்குக் காண்பித்து, இந்தக்கிழியல்களின் வழியாய் இரவில் கொசுக்கள் என்னைக் கடித்து நித்திராபங்கம் செய்கின்றனவென்று கூறி, அவ்வஸ்திரத்தைத் தைத்துத் தரும்படி மிட்டாய்க்காரனைக் கேட்டுக்கொண்டார். சாதுக்களுக்குச் செய்யும் சேவை வீண்போகாது என்னும் கடப்பாடுடையவனான அந்த மிட்டாய்க்காரன் அதிக சந்தோஷத்துடன், ஊசியால், சாதுவின் வஸ்திரத்தைச் சுமார் மூன்று மணிநேரம் தைத்துச் சாதுவினிடத்தில் திரும்பக் கொடுத்துவிட்டான். அன்றிரவு சன்னியாசி நித்திராபங்கம் சற்றுமின்றி உறங்கினபடியால், இவ்வுபகாரம் செய்த அக்கடைக்காரனுக்கு ஏதாவது ஒருபிரதியுபகாரம் செய்தல் வேண்டுமென்று திருவுளங்கொண்டார்.

துறவிகள் என்ன பொருளை உபகாரமாக ஈவர்? மனை - தனம், பெண்டு-பிள்ளை இவைகளைத் துறந்த துறவிகள் வகுப்பைச் சேர்ந்த இந்தச் சாது, எங்கிருந்து மிட்டாய்க்காரனுக்குச் செல்வங்கொடுத்துதவுவர்? பிரஹ்மஞானிகளுக்கு உலகம் துக்கமாகத் தோன்றினும், அவர்கள் உலகத்தார்க்கு நன்மைபுரியும்பொருட்டு உலகத்தில் உலாவிக்கொண்டு வருவார்கள். இந்தச்சாது அத்தன்மைய ஞானிகளில் ஒருவராவர். இவருக்குக் கொஞ்சம் சித்தும் விளையாடத் தெரியும். ஏதாவது உபகாரம் செய்ய இச்சைகொண்ட இச்சாது

பின்வருமாறு தம்முள் ஆலோசிக்கலாயினர். "இந்தக் கடைக்காரன் தர்மசிந்தனையுள்ளவனாயிருப்பதுடன் சாது சேவைப்பிரியனாகவும் இருக்கிறான்; ஆனால், இவ்வுலக சுபா சுபங்களில் மிகவும் அழுத்தமுள்ளவனாக இருக்கிறான். இவன் ஆத்மஞானத்தை எள்ளளவும் விரும்பான். அதனை இவனுக்களிக்க முயல்வது நிஷ்பிரயோஜனமாகும். சர்வ போகங்களையும் ஐஸ்வர்யங்களையும் தாத்தக்க கோலோகத்துக்கு உன்னை அழைத்துக்கொண்டு போகிறேனென்றால், அவனுக்கு விருப்பமாக இருக்கும் என்று எண்ணித் தமது விருப்பத்தை மிட்டாய்க்காரனிடம் வெளியிட்டார். இந்தச் சாது பிரஹ்மஞானி என்பது மிட்டாய்க்காரனுக்கு நன்றாகத் தெரிந்தபடியால், அவர் தன்னைக் கோலோகம் இட்டுக் கொண்டு போவார் என்பதில் அவனுக்குக் கிஞ்சித்தும் சம்சயமுண்டாகவில்லை; சற்றுநேரம் தீர்க்க ஆலோசனைசெய்து அந்த மிட்டாய்க்காரன் பின்வருமாறு பகரலானான்:—

"ஓ! பரமபுருஷரே! அந்தப் புண்யலோகத்துக்கு யார் தான் வர விரும்பார்கள்; செல்வம், பேர், பிரக்கியாதிகளைத் துறந்து, கானகம் சென்று இக்கோலோகத்தை அடையும் வண்ணம் அநேகர் கடுந்தவம் புரிகிறார்கள். அது எனக்குத் தெரியும். அவ்வளவு அரிதாகக் கிடைக்கக்கூடிய பதவியைத் தாங்கள் எனக்கு வெகு சுலபமாய் அளிக்கிறீர்கள். தங்களது ஈகைச்சுபாவமும், உதாரகுணமும் மிகவும் மேம்பாடானவை என்பதற்கு ஐயமின்று. தேவரீர் சர்வஞ்ஞராதலால், தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை. ஆயினும், யான் தங்களுக்கு ஒருமனு செய்துகொள்ளுகின்றேன்; அதனைக் கருணையுடன் செவிசாய்த்தருளல் வேண்டும். அதோ இருக்கும் எனது புதல்வர்கள் இருவர்களையும் தாங்கள் கண்டிருக்கிறீர்கள். அவர்கள் மிகவும் இளைஞர்கள்;

அவர்களை ஆதரிப்பவர்கள் இவ்வுலகில் என்னைவிட எவரும் இலர். யான் தங்களுடன் கோலோகம் வந்து விட்டால், அச்சிறுவர்கள் அநாதையர்களாகித் துக்கசாகரத்தில் ஆழ்ந்து விடுவார்கள்; இன்னும் எட்டு வருடம் யான் அவர்களுடன் இவ்வுலகில் இருக்க எனக்கு விடைதாரும். இதற்குள்ளாக அவர்கள் தமது தமது ஜீவனத்தைத் தேடிக்கொள்ளும் ஆற்றலையடைவார்கள். பிறகு தங்களுடன் யான் கோலோகம் வரத் தடையிராது. தாங்கள் அதுவரைக்கும் என்னை க்ஷமித்தருளல் வேண்டும்" என்றிங்ஙனம் மிக விநயத்துடன் அந்த மிட்டாய்க்காரன் கேட்டுக் கொண்டதைக் கேட்ட சன்னியாசி "ஏது, இவனுக்குப் பிள்ளைகள் விஷயத்திலிருக்கும் அவாவிலும் அன்பிலும் ஆயிரத்தில் ஒரு மடங்குகூடக் கடவுள் விஷயத்திலும் மோக்ஷமடையும் விஷயத்திலும் இல்லை. இவனை இப்பொழுது தொந்தரவு செய்வதில் பிரயோஜனமொன்றுமில்லை" என்று இவ்வாறு தமக்குள் சிந்தித்து "அப்படித்தான் ஆகட்டும்" என்று கூறிப் பரிவ்ராஜகராய் மீண்டும் சென்றார்.

எட்டு வருஷம் பொறுத்துப் பரோபகார சிந்தையுள்ள சாது, மிட்டாய்க்காரன் முன்வந்து நிற்கவே, அந்த மிட்டாய்க்காரன் "ஐயா! கடவுள் பொறுக்க முடியாத கஷ்டத்தில் என்னை ஆழ்த்தியிருக்கிறார்; என் இரண்டு குமாரர்களையும் பாரும். அவர்கள் மிகவும் துன்மார்க்கர்களாக மாறிவிட்டார்கள்; வயிற்றை வாயைக்கட்டி அதிக சிரமத்துடன் யான் சேர்த்துவைத்த பொருள் எல்லாவற்றையும் கட்குடியாலும் துன்மார்க்கர்களோடு கூடிவருவதாலும் தும்சம் செய்து விட்டார்கள். இவர்கள் இம்மாதிரியாகப் பணத்தை வீண் செலவு செய்யாவண்ணம் இவர்களுக்கு விவாகம் செய்

விக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன். அப்பொழுதாகிலும், அவர்கள் குடும்ப போஷணத்தின் நிமித்தம் பணத்தைச் சிக்கனமாய்ச் செலவழிக்கக் கற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். ஆகையினால், ஓ! பரமபுருஷரே! கலியாணச் செலவுக்கு என்னிடத்தில் தற்காலம் போதுமான பொருள் இல்லை; அதனால், இன்னும் எட்டு வருஷம் இவர்களுடன் இப்பூலோகத்தில் நான் இருக்க வேண்டியது அத்தியாவசியகமாம். எட்டு வருடம் கழித்தவுடனே யான் தங்களைப் பின்தொடர்ந்து கோலோகத்துக்கு வருவது திண்ணம்'' — என்று இவ்வாறு புகன்று சாதுவின் அடிகளில் பணிந்து நின்றான்.

இவ்விதம் மனம் நொந்து மிட்டாய்க்காரன் கூறிய சொற்களைச் சாதுவானவர் செவிசாய்த்துக் கேட்டு, அவனுக்குத் தன் குடும்பத்தின் மேலிருந்த பந்த பாசத்தை நோக்கி அவன் மேல் இரக்கங்கொண்டு "அங்ஙனே ஆகுக" என்று விளம்பி யதேச்சையாய்ச் சஞ்சரிக்கலாயினர்.

மிட்டாய்க்காரன் கேட்டுக்கொண்ட வண்ணம் எட்டு வருடம் கழிந்த பிறகு அந்தப் பரமபுருஷர் வந்தபொழுது அங்குத் தாம் முன்பார்த்த மிட்டாய்க் கடையைக் காணமல், அது இருந்த இடத்தில் ஒரு கிலமான குடிசையும் அதற்குள் ஒரு பலசரக்குக் கடையும் இருப்பதைக் கண்டனர். இந்தக் கடை மிட்டாய்க்காரன் மூத்த குமாரனுடையது. அவன் கிராமத்திலுள்ள எளியவர்க்குச் சில்லரைச் சாமான்களை வேண்டியபோது அற்பவிலைக்கு விற்று வந்ததுடன் தன் ஜீவனத்தின் நிமித்தம் வேறு வேலையையும் செய்து வந்தான். இதனை விசாரித்துணர்ந்துகொண்ட சந்நியாசியானவர் அவனைத்தேடிக் கண்டு பிடித்து "உன் தந்தை எங்கே" என்று மிகுந்த அனுதாபத்துடன் கேட்டார்.

“ஓ! பரமபருஷரே! அவர் எழு வருடங்களுக்குமுன் இறந்து எங்களைத் துன்பக்கடலில் ஆழ்த்திவிட்டுப் பரம பதம் போய்விட்டார். நாங்கள் இப்பொழுது கொடிய வறு மையால் பீடிக்கப்பட்டு வருகிறோம்; அதோ தெரிகிற சிறு குடிசையைவிட எங்களுக்கு வேறே சொத்துக்கிடையாது; அதில் ஒரு பலசாக்குக் கடையை நிருமித்து நான் நடத்தி வருகிறேன்; அதோ கிருஷி வேலைசெய்து கொண்டிருக் கிறவன் எனது சகோதரன்” என்று மிட்டாய்க்காரனுடைய மூத்தகுமாரன் மனம் நைந்து மறுமொழி பகர்ந்தான்.

இச்சொற்களும், மிட்டாய்க்காரன் குமாரர்கள் இருந்த ஸ்நிதியும், சன்னியாசியின் மனதை மிக இளகச்செய்தன. வயலில் உழுது கொண்டிருந்த ஏரில் பூட்டப்பட்டுள்ள எரு தாய் மிட்டாய்க்காரன் பிறந்திருக்கிறுனென்பதைச் சன்னி யாசி தமது ஞானதிருஷ்டியால் கண்டு, யாருமில்லாத சமயம் பார்த்து, அதனருகிற்சென்று, தமது கமண்டலத்திலிருந்த ஜலத்தில் கொஞ்சம் அதன் தலைமேல் தெளித்தார். உடனே அந்த எருதுக்குப் பூர்வஞானம் பிறந்தது; தான் முன் ஜன்மத்தில் மிட்டாய்க்காரனுக இருந்ததும் தனக்கும் சாது வுக்கும் அச்சன்மத்தில் உண்டாயிருந்த உடன்படிக்கையும், அதன் கவனத்தில் உதித்தன; அது உடனே சாதுவின் முன் தலை வணங்கி மரியாதைசெய்து பின்வருமாறு புலம் பிப் புகன்றது:—“ஓ! ஐயா! குறித்த நாள் இதுதான். எங்க ளைச் சுற்றித் தரித்திரம் பிடுங்கித்தின்பதைத் தாங்களே பாரும். இந்த முட்டாள் பிள்ளைகள், இந்தத் துரதிர்ஷ்ட முடைய எனது குமாரர்கள், நான் கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத்த எல்லாவிதச் சொத்தையும் செலவழித்து விட்டார்கள். இவ்விதம் இவர்கள் நடந்து வருவார்களானுல், இரண்டொரு வருஷத்தில் பசி நோயால் பீடிக்கப்பட்டு

மரிப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் இன்னும் சில வருஷகாலம் இவர்களுக்காக நான் உழைத்து இன்னொருதரம் இவர்கள் முன்னிலைமையை அடையும்படி பார்க்க விரும்புகிறேன். அதுவரைக்கும் என்னை இவர்களுக்காக உழைக்கும்படி உத்தரவு தாரும்'' என்றிவ்வாறு அந்த எருது மன்றாடிக் கேட்டுக்கொண்டது. இவை யாவற்றையும் அந்தச் சன்னியாசி மௌனத்துடன் செவிசாய்த்துக் கேட்டு ''இவனுக்கு எவ்வளவுதான் போதித்தபோதிலும், அது செவிடன்காதில் சங்கூதியது போல நிஷ்பிரயோஜனமாய் முடியும். இவனுக்கு உயிரிடத்துள்ள பற்றுக்கு அளவில்லை. இவனுக்கு நாம் என்ன செய்தல் கூடும்'' என்று தமக்குள் நினைத்துக் கொண்டு ''உன்னிஷ்டப்படியே இரண்டொரு வருஷம் பொறுத்து வருகிறேன்'' என்று கூறிப் போயினர்.

அந்த மிட்டாய்க்காரனுக்கு எப்படியாவது ஒரு நன்மையைச் செய்யவேண்டுமென்று அத்தபோதனர் திருவுள்ளங் கொண்டமையின், இரண்டு வருஷங்கள் கடந்தவுடன் அந்தக் கிராமத்துக்கு மீண்டும் வந்தனர்; பலசரக்குக்கடையைக் காணாமையால், மிட்டாய்க்காரன் வசித்துவந்த வீட்டிற்குஏகினர். அவ்வீட்டில் ஒரு நாய் இருந்தது. அது இவரை நோக்கி உள்ளே கால் வைக்க வொட்டாதபடி குலைத்து மேலே விழ வரவே, அச்சன்னியாசி உரத்தகுரலுடன் வீட்டிற்குள் இருந்தவர்களைக்கூவி அழைத்தனர். அப்பொழுது மூத்த குமாரன் வெளியே வந்தான். சாதுவானவர் அவனது க்ஷேமலாபங்களை விசாரித்தபிறகு முன்பு யான் பார்த்து விட்டுப்போன எருது எங்கே யென்று வினவினார். ''ஆ பரமபுருஷரே! அந்த மிருகம் ஒரு வருடத்திற்கு முன் இறந்துவிட்டது; அதைப்போன்ற நல்ல உழைப்

பாலி கிடைப்பது அரிது; அது கொஞ்சம் ஆகாரம் சாப்பிட்டுச் சூரியோதயத்திலிருந்து சூரிய அஸ்தமனம் வரையில் இடைவிடாது உழைத்து வந்தது; அதற்குத்தேக பலம் இல்லாதபோதிலும், அது உழைத்ததைப் பார்த்தால் மனோபலத்தினுற்ருன் உழைத்திருத்தல் வேண்டுமென்பது புலப்படுகிறது. அப்படிப்பட்ட எருது உலகத்தில் இருந்தது கிடையாது; இனிமேல் கிடைக்கவும் மாட்டாது'' என்று மனமுறிந்து மறுமொழி புகன்ருன். இந்த வரலாற்றைக் கேட்ட தபோதனர் திரிகாலஞான முடையோராதலின், குலைத்துக்கொண்டு தன்மேல் விழவந்த நாய்தான் அந்த எருதென்றும், அது மிகுந்திருந்த சொற்ப ஆஸ்தியையும் திருடர்கள் கொள்ளையடிக்கா வண்ணம் பாதுகாத்துக்கொண்டு, அவ்வீட்டிலிருந்து ஒருசிறு துரும்புகூடப்புறம் போகா வண்ணம் அன்னியரை வீட்டிற்குள் நுழைய வொட்டாது உக்கிரத்துடன் குலைத்துக்கொண்டு வருகின்றதென்றும், தமது ஞான திருஷ்டியால் உணர்ந்து கொண்டனர்; பின் யாரும் இல்லாதசமயம் பார்த்து அந்த நாயிருந்த இடத்திற்கேகி, தூர இருந்தபடியே தமது கமண்டலத்திலிருந்த நீரை அதன் தலைமீது புரோக்ஷித்தார்; உடனே, அந்நாய்க்குப் பூர்வ ஞானம் பிறந்தது. கீழ்ச்சென்ற தனது பிறப்புக்களும், தனக்கும் சாதுவுக்கும் நேர்ந்துள்ள உடன்படிக்கையும், அந்நாயின் மனதில் தோன்றின. உடனே அது தன்தலையால் சாதுவின் அடியிணைகளைப் பலதரம் வணங்கித் தனக்கு நேரிட்டிருக்கும் மகத்தான தௌர்பாக்கியத்துக்காகக் கண்ணீர்விட்டுப் புலம்பிக் கொண்டே ''ஓ, பிரபோ! இந்தக் கிராமத்தின் சுற்றுப் பக்கங்களில் அநேக திருடர்கள் இருக்கிருர்கள்; மிகுந்திருக்கும் எனது சொத்து அவர்கள் கையில் அகப்படாமல் இருப்பதற்கு இந்த வீட்டைக்காவல் செய்து வருகின்றேன்; எனது பாக்யஹீன புதல்வர்கள் பூர்வ புஷ்கள நிலையையடை

யும் வரையிலும் இப்பூவுலகத்தில் இருக்க இச்சையுடைய வனாயிருக்கிறேன். இவ்வபீஷ்டத்தை நிறைவேற்றக் கருணை புரியும்'' என்று தழுதழுத்த குரலுடன் கெஞ்சி அவரை வேண்டிக்கொண்டது. நாயின் மனோபாவத்தை உணர்ந்து இதனுடன் தர்க்கித்துரைப்பது வீணெனக் கண்ட சாது அதன் வேண்டுகோளுக்கிணங்கிச் சில வருடங்கள் கழிந்த பின்னர் மீண்டும் வருகிறேனென்று கூறிப்போயினர்.

கூறிப்போன வண்ணமே சாதுவானவர் குறித்த காலத்தில் அக்கிராமத்துக்கு வந்து மிட்டாய்க்காரன் வீட்டைக்காணாது, அது இருந்த இடத்தில் இரண்டு புதிய குடிசைகளைக் கண்டார்; அங்கிருந்தவரை நோக்கி அவர்களைப்பற்றி விசாரித்துக் கேட்டபொழுது, அவர்கள் வாயிலாக மிட்டாய்க்காரன் குமாரர்கள் இருவரும், ஒருவர்மேல் ஒருவர் நியாயாதிபதியினிடம் வழக்கிட்டு உள்ள சொத்தையும் போக்கடித்து மிகவறியவர்களாய்க், குடிசை கட்டிக்கொண்டு அதில் வாசம் செய்து வருகிறார்களென்று தெரிந்துகொண்டார். கருணையே வடிவமான அச்சாது, அச்சகோதரர்கள் வசித்து வந்த குடிசைக்குள் நுழைந்து உற்றுநோக்கியபோது தான் முன் பார்த்துப்போன நாயைக் கண்டிலர்; பிறகு தமது ஞான திருஷ்டியின் வலிவால், அந்த மிட்டாய்க்காரன் நாய் ஜன்மத்தை அகற்றி, பாம்பு உருவமெடுத்து, தான் முன்பு உறங்கிவந்த அறையின் தரையின் கீழ் ஒரு கள்ளத்துவாரத்தில் புதைத்து வைத்திருந்த பித்தளைத் தவலையைச் சுற்றிப் படுத்து, தவலையில் சேமித்திருக்கும் பொருளைப் பாதுகாத்துக் கொண்டிருப்பதைக் கண்டுகொண்டார். அச்சமயத்தில் அந்த இரண்டு சகோதரர்களும் சச்சரவு செய்துகொண்டே அந்தக் குடிசையிலிருந்து வெளியே வந்தனர்; இந்தச் சாதுவைப்பார்த்த உடனே அவர்களில் ஒருவன் மற்

றவனைப் பார்த்து "ஐயோ! தம்பி! இந்த அவலக்ஷணம் பிடித்த ஆண்டியினுல்தான் நமக்கு இவ்வளவு தரித்திரம் வந்திருக்கிறது; இவன் எப்பொழுது எப்பொழுது நம்மைக் கண்டு விட்டுப்போனனே அப்பொழுது அப்பொழுதெல்லாம் நாம் மேலும் மேலும் தரித்திரர்களாய் வந்து கொண்டே இருக்கிறோம்" என்று கூறி, சாதுவை நோக்கி "எங்களுக்குத் தரித்திரத்தை யுண்டாக்குவதற்காகவா ஓ! மூதேவிச் சாதுவே! நீ எங்களைப்பார்க்க வந்திருக்கிருய்; நீ இப்பொழுதே இந்த இடத்தை விட்டு ஓடிப்போ; அப்படி செய்யாவிட்டால் உனக்குப் பெருந்தீங்கை விளைவிப்போம்" என்று கோபா வேசத்துடன் வைதான். இதைக்கேட்ட அந்தச்சாது சற்றும் பயப்படாது அதிக சாந்தத்துடன் பின் வருமாறு விளம்ப லாயினர்:—"எனது அன்புள்ள சிநேகிதர்களே! நீங்கள் இவ்வளவு ஏழைகளாகவா ஆய்விட்டீர்கள்! உங்களுக்குப் பணம் வேண்டியதாயின், உங்கள் தகப்பன் படுத்துறங்கி வந்த அறையின் தரையைத் தோண்டிப் பார்த்தால், உங்களுக்கு ஒரு பெரிய புதையல் கிடைக்கும்; அதைக்கொண்டு நீங்கள் பொறுத்தற்கரிய உங்கள் தரித்திரத்தை ஒழித்து விடலாம்." அவர் கூறிய இச்சொற்களைக் கேட்டவுடனே சகோதரர்கள் இருவரும் பேருவகையடைந்து பூமியைத் தோண்ட ஆரம்பித்தனர்; தோண்டிக்கொண்டே போன பொழுது ஓரிடத்தில் ஒரு பாம்பு சீறி இவர்களைக்கடிக்க வந்தது. அப்பொழுது அந்த இரண்டு சகோதரர்களும் "இந்தச் சாது நம்மைவேண்டுமென்றே பாம்புக்கு இரையாக்கவேண்டி இப்படி சொன்னுன். இவன் மிகவும் கபடன். இவனைச் சும்மா விடல் கூடாது" என்று பேசிக்கொண்டே சாது இருக்குமிடத்தை நோக்கி வெகு கோபத்துடன் வந்தனர்; அச்சகோதரர்களின் மன நிலைமையை யறிந்த சாது "என்னைப் பொய்

பன் என்றும் கடடன் என்றுமா நீங்கள் நினைக்கிறீர்கள்; பித்தளைப் பாத்திரத்தின் வாய்ப்புறம் அதோ தெரிகின்றது; அதனைப் பாருங்கள்; உங்களுக்கு எவ்வளவு ஐஸ்வரியம் வேண்டுமோ அவ்வளவும் அப்பாத்திரத்தில் அடங்கியிருக்கிறது; அதனருகேயிருக்கும் பாம்பைத்தைரியமாய்க்கொன்று விடுங்கள். பாத்திரத்திலுள்ள பணம் உங்களுடையதாய் விடும்'' என்று அவர்கள் மனதில் தைக்கும்படி விளம்பினர். இவர்கூறுவது உண்மையோ, பொய்யோ என்னச் சந்தேகங்கொண்டு அந்தச் சகோதரர்கள் தூரத்திலிருந்தபடியே சாது குறிப்பிட்ட இடத்தைக் கவனத்துடன் பார்த்தனர்; பார்க்கவே, தவலையின் வாய்ப்புறம் துருப் பிடித்திருப்பதைக்கண்டனர். அதனால் அவர்களது களிப்பு எல்லைபற்றதாயிற்று. பின் அவர்கள் சன்னியாசியைப் பொத்த வேண்டுமென்னும் அடாத எண்ணத்தை நீக்கித் தங்கள் கோபம் முழுவதையும் பாம்பின் மேல் செலுத்தி, அதன் தலையை நறுக்கி வீழ்த்தினர். மிட்டாய்க்காரன் கடைசியில் இவ்விதமாக உலகப்பற்றினின்றும் விடுபட்டவனாகிக் காலக்கிரமத்தில் சாதுவினால் கோலோகம் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டான்.

அரிதுபெற் றிடினும் பெற்றதின் விருப்ப
மறப்பெரு தனவிரும் புயிர்க
டெரியகிற் கிலமீ தெனைமுன மடையாச்
செல்வமாய்ச் சொல்பவித் திரமா
யுரியசிற் சுகமாய் நித்தமா யொருவீ
டுளதெனக் கேட்மெற் றதனிற்
பிரியமற் றினமு முனமுறும் பொல்லாப்
பிறவியே பெறவிரும் புதலே.

என்று ஆன்றோர் கூறியவண்ணம் நாமெல்லோரும், நம் முயிரிடத்தும், காணி - மனை - பெண்டு - பிள்ளைகளிடத்தும்

அதிக அழுத்தமுள்ளவர்களாகி, அவைகளை விட்டகல விருப்பமற்றவர்களாயிருந்து வருகிறோம்; இவையாவும் துக்கரூபமென்பது நமக்கு நன்றாகத் தெரிந்திருந்தும், ஆநந்த ரூபமாகிய கடவுளையடைய முயற்சி செய்யாது வாழ் நாளை வீணாளாகக் கழித்து வருகின்றோம்; இங்ஙனம் வருவது நமக்கு மிகத் தெரிந்த விஷயமாம். இது மிகவும் வியப்பைத் தரக் கூடியதல்லவா? மனிதன் இவைகளிடத்தில் தனது இச் சையாலே ஒட்டுப்பற்றுண்டாக்கிக்கொண்டு, கோசகார கிருமி போலத் தன்னைப் பந்தத்திற்குள்ளாக்கிக்கொண்டு ஸ்வரூப ஹானிக்கு வழியைத் தேடிக்கொள்ளுகிறான். ஜனனமும் மரணமும் இவனை இந்தப் பற்றினின்றும் விடுவிக்கா; அவ னுக்குப் புதிய பலமுள்ள வேறு தேகங்களை அளித்து இந்தப் பற்றை இன்னும் அதிகரிக்கச்செய்யும். உளுத்துப்போன உடல் நீங்கிப்போவதும் புதியஉடல் வருவதுந்தான்மரணமும் ஜனனமுமாம். இவ்வுலகிலுள்ள மனிதர்கள் தங்களுக்கு வரும் இடுக்கண்கள் நீங்காதபோதுதான் நாம் செத்துப்போவது நல்லதென்று எண்ண ஆரம்பிக்கின்றனர். யான் சர்வவல் லமையுள்ள ஆத்மா என்னும் உணர்ச்சியினால் தேகத்தை விடக்கூடிய திறன் கிடைப்பது மிக அருமையாம். சஞ்சல நிவிர்த்திக்கு யாதாவதோருபாயம் தோன்றுமானால், அப் பொழுது உயிர் துறக்கமனிதன் விரும்புவானா? எத்தனைகாலம் சஞ்சல மின்றி இருத்தல் இயலுமோ அத்தனை காலமும் உயி ரோடிருந்து சுகத்தை அனுபவிக்கலாமே என்று உவகை கொள்ளானா? இத்தன்மையான மனிதன் இறந்து போக இஷ்டங் கொள்ளும்போதுகூட, அவித்தையோடு பிரியா திருந்து உயிரோடு உறவாட வேண்டுமென்னும் ஆசை அவனிடத்தில் கரந்து நிற்கும்.

நாசிகேதன்போலத் தியாகஞ் செய்பவரைக் காண்பதரி தாம். உலக ஆசையை அத்தியந்தம் விட்டுவிடுதல் இத்

தன்மையதென்பதை நாசிகேதன்சரித்திரம் தெளிவாய் விளக்கிக் காட்டுகின்றது.

நாசிகேதன் என்னும் ஒருபிராம்மண வாலிபன் சிறு வயதிலேயே தேவர்களோடு கலந்துபேசும் சக்தியுடையவனு னன்; சத்தியமானது வேதரூபமாக இருக்கின்றதென்பதை மதித்து அவ்வேதத்தை யோதுவதன்கண் மிக ஆவலுடைய வனுய்ச் சிறுவயதிலேயே அவ்வேதக்கல்வியில் பூரணத்தேர்ச் சியடைந்தான். யாவன், தான் தானம் செய்யும்போது, பெற் றுக் கொள்வோனுக்குச் சுகிர்தத்தைத் தாராமல் உபத்திரவ மாக முடியக்கூடிய பொருளைத் தானம் செய்கிருனே, அவன் அந்தியத்தில் கடுநரகில் அழுத்தப்படுவான் என்னும் நியமம் ஒன்றுண்டென்பதை நாசிகேதன் வேதங்கள் வாசித்தமை யால் தெரிந்துகொண் டிருந்தான். தனது தகப்பன் உப யோகமற்ற பொருள்களை யெல்லாம் தானம் செய்வதைக் கண்ட நாசிகேதன், தன் தகப்பனுக்கு நேரிடப்போகும் கதியை நோக்கிச் சிந்தாகுலனுகி, பின்வருமாறு சிந்திக்க லானுன்:—"என் தந்தை இருந்த பொருள் எல்லாவற்றையும் தத்தஞ் செய்துவிட்டார். தானம் செய்ய இப்பொழுது பொருள் கிடையாது. நானும் என்னுடைய தந்தையின் சொத்துத்தானே. நான் துன்மார்க்கப் பிள்ளையல்லவே. என்னை யாருக்காவது அவர் தானம் செய்துவிட்டால், பிர யோஜனமற்ற பொருள்களைத் தானம் செய்தமையால் தமக்கு நேரிடப்போகும் நரகவாதனையை அவர் நீக்கிக் கொள்ளல் இயலுமல்லவா?" என்று இவ்வாறு சிந்தித்துப் பிதாவினிடம் சென்று தனது எண்ணத்தைத் தெரிவித் தான். தந்தையானவர் "இவன் சிறுபிள்ளை, ஏதோ விளையாட்டாகக் கூறுகிருன்" என்று நினைத்து அவன் சொன்ன விஷயத்தில் தமது கவனத்தைச் செலுத்தாமல்

இருந்தார். தந்தை தன் சொல்லைக் கவனியாமலிருப் பதைக் கண்ட இளைஞன், அடிக்கடி அவரிடம் சென்று தனது எண்ணத்தை வற்புறுத்திக் கூறி வந்தான். அதனால், ஒருநாள் அவர்க்கு எரிச்சல் வந்துவிட்டது. அவர் "உன்னை யமதர்ம ராஜனுக்குத் தத்தஞ்செய்ய விரும்புகிறேன்; போ; என்னைத் தொந்திரவு செய்யாதே" என்று புகன்றனர். இவ்விதம் அவர் கோபத்தால் கூறினரே யொழிய, வாஸ்த வத்தில் தமது இனிய புதல்வனை யமதர்மராஜனுக்குத் தத் தம் செய்யவேண்டுமென்ற எண்ணத்தோடு கூறவில்லை. ஆனல், அவர் குமாரனே அவ்வார்த்தைகளை உண்மையென நம்பினவனுய் "என் தந்தை என்னை யமதர்ம ராஜனுக்குத் தத்தஞ்செய்து விட்டபடியால் நான் யமதர்ம ராஜனிடம் செல்வேன்" என்று எண்ணித் தனது யோகசக்தியால் யம லோகம் சென்றனன்; அங்கே அக்காலத்தில் யமதர்மராஜன் இல்லாமையால், அவன் வாயிலில் மூன்று பகல் மூன்றிரவு அவன் வருகையை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந் தான். யமதர்ம ராஜன் நான்காம் நாள் வந்துவிட்டார்; வந்தவுடனே, வாயிலில்காத்துக்கொண் டிருந்த வாலிபனிடம் சென்று, இத்தனை நாள் அவனைக் காக்கவைத்ததற்காகத் தனது அனுதாபத்தை அவனிடத்துக்கூறி, இதற்குப் பிரா யச்சித்தமாக "மூன்று நாளைக்கும் மூன்று வரங்கள் அளிக் கிறேன்; அவைகளை நீ பெற்றுக்கொள்வாயாக" என்றுரைத் துப் பிள்ளையைச் சந்தோஷிப் பித்தனன். நாசிகேதன் இரண்டு வரங்களைக் கேட்டுப் பெற்றுக்கொண்டு "ஆத்மா தேகத்தை விட்டபின் எத்தன்மையதா யிருக்கும்" என்று அதனையுணரும் ஞானத்தை மூன்றும் வரமாக வேண் டினன். இவ்வரத்தை யவனுக்களிக்க யமதர்ம ராஜனுக்கு மனமுண்டாகவில்லை. அவன் "இதை நீக்கி வேறெந்த வரத்தையாவது கேள்" என்று நாசிகேதனனிடம் நவின்

றனன். யமதர்மராஜன் பின்னும் அடியிற் கண்டவாறு கூறினன்:—"நீண்ட ஆயுளும், திரண்ட செல்வமும், விசாலமான இராஜ்யமும், தேவதா ஸ்திரீகள் போன்ற கட்டழகிகளும், சகல ஐஸ்வரியமும், மட்டில்லா விஷய சுகமும் அளிக்கிறேன். நீ இவைகளைப் பெற்றுக்கொள்." என்றிப்படி யமதர்ம ராஜன் போதனை செய்தும், அச்சிறுவன் இவைகள் மேல் சற்றும் விழைவிலனுப் ஆத்ம ஞானத்தையே திடச்சித்தத்துடன் வரித்தனன். அவனது திடச்சித்தம் வியக்கத்தக்கதாக இருந்தது. அவன் யமதர்ம ராஜனிடத்து "நீர் அளிப்பதாகச்சொல்லும் விஷயபோகங்களடங்கிய வாழ்நாளை எவ்வளவு காலம் நீடித்திருக்கவைத்த போதிலும், காலதத்துவத்தில் அது எம்மட்டு; எல்லாவிஷய சுகங்களும் மனிதனைப் பலவீனனாக ஆக்குகின்றன. ஆகையினால், ஐஸ்வரியமும், அழகும், ஆடல் பாடல்களும் ஆகிய இவையெல்லாம் உமதாதீனத்திலேயே யிருக்கட்டும்; எனக்கு வேண்டாம்" என்றனன். யமதர்மராஜன் எவ்வளவோ அரியபொருள்களைக் கொடுக்கின்றேனென்றும் சொல்லினான்; எவ்வளவோ இதவார்த்தைகளையும் கூறினான். அவற்றிற்கு நாசிகேதனை அவனது மனநிலையினின்றும் மாறச் செய்யமுடியவில்லை. யமன் கடைசியில் ஞானத்தை அச்சிறுவனுக்குப் போதித்தல் வேண்டியவனானான்.

நாசிகேதனுக்கு உண்டாகிய சோதனையில் ஆயிரத்தில் ஒரு பங்காவது நம்மில் எவரேனும் பொறுத்து அதிற் சிக்குப்படாது இருத்தல் இயலுமா? எல்லாப் பந்தங்களையும் நாமே உண்டாக்கிக் கொண்டோமாகையால், அவையெல்லாவற்றையும் நாமே மனப்பூர்வகமாய்ப் பொறுத்துக்கொண்டு வருகிறோம். எல்லாப் பற்றுகளையும் ஆத்மாவே வருவித்துக் கொண்டபடியால், அவைகளை விட்டுவிட்டுத் தனது நிஜஸ்வரூபத்தை உணரும் சக்தியும் ஆத்

மாவிலே தான் இருக்கிறது. "ஆத்மாவுக்கு ஆத்மாவே சிநேகிதன்; அல்லது ஆத்மாவே பகைஞன்" என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார். அவித்தையால் மூடப்பட்ட மனிதனுக்கு, அவித்தையைத் தமது வசப்படுத்திக் கொண்டிருக்கும் குருவை யடுத்து, அவ ரருளால்தான் தனது சுயஞ்சோதி வடிவை ஸ்வானுபவத்தில் ஓர்ந்துணர்தல் முடியும். ஆத்மாவைத் துன்புறுத்தும் இவ் வுலகிலுள்ள எல்லாப்போராட்டங்களும் துன்பங்களும், அவ் வாத்மாவாலே வருவிக்கப்பட் டிருக்கின்றன என்பது இப் பொழுது தெளிவாகத் தோன்றல் வேண்டும்; மாயாசக்தி என்பது ஆத்மாவானது தன்னைத் தானே பிரமிக்கச்செய்து கொள்ளும் பிராந்தியே தவிர வேறன்று. சிருஷ்டி, ஸ்திதி, சங்காரங்களை யுடையதென்று கூறப்படும் லீலா உருவமாகிய உலகத்தின் மேல் எப்பொழுது விருப்பமில்லாமல் அதனை விட வேண்டுமென்னும் ஆசை உண்டாகின்றதோ அப்பொழுது அதனை விடுதல் நேரிடுமென்பதுந் தெளிவாகத் தோன்றுதல் வேண்டும். ஆகையினாலே அநாதி காலமாக மாறிக்கொண் டே வரும் சிருஷ்டியானது, ஏதோ ஒரு காரணத்தினால் ஆத்மாவானது தன்னுள் அமைவுற்றிராது தன்மேல் தானே வருவித்துக்கொண்ட பெருந்தொடருள்ள போராட்டமே யன்றி வேறல்லவென்பது நமக்குப் புலப்படல்வேண்டும்.

---

"ஜீரணசக்தி குறைந்த குடலுள்ள ஒருமனிதன் தனக்குப் புளிப் புள்ள வஸ்துக்கள் ஒத்துக்கொள்ளாவென்று தெரிந்திருந்தும் அவற் றை அவன் பார்த்தவுடனே முன் தான் தின்று அநுபவித்த வாசனையி னால் அவன் நாவில் ஜலம் ஊரும்படியான அவ்வளவு பற்று அவனி டத்தி லிருக்கின்றது; அதுபோல் ஒருவன் யான் எனது என்னும் எண்ணத்தை அடக்க மிகவும் கஷ்டப்பட்டு முயன்றபோதிலும், பரி பக்குவமாகாத அவனது அகங்காரம் அவனை எப்படியாயினும் வியவ காரத்தில் காட்டிவிடும்" ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

## 5-வது அத்தியாயம்.

### வேதாந்தம்.

வினு:—முன் அத்தியாயத்தில், ஆத்மா வானது சிருட்டி, திதி, சங்காரம் என்னும் பெயர்களையுடையனவாய்த் தோன்றும் தோற்றங்களைத் தானே சிருஷ்டித்துக்கொண்டு அவைகளோடு விளையாடிக் கொண்டிருக்கின்ற தென்பதும், அவைகளைத் தனக்கிஷ்டமான பொழுது உதறித் தள்ளல் முடியுமென்பதும் சொல்லப்பட்டன; எல்லா உயிர்களையும் அந்தகாரத்தில் அழுத்தும் மாயாசக்தியானது ஆத்மா தானுகவே உண்டாக்கிக் கொண்ட பிராந்தியேயன்றி வே றல்ல வென்பதும், இவ்வுலகில் தோன்றும் போராட்டத் தொடர் முற்றும் ஆத்மாவினுல் விளைவிக்கப்பட்டதென்ப தும் கூறப்பட்டன. இவைகளுக்குப் பிரமாண மென்ன?

விடை:—வேதாந்தம்.

வினு:—வேதாந்தம் என்ருலென்ன?

விடை:—வேதத்தின் கடைசிப் பாகம் வேதாந்த மென்று சொல்லப்படும்.

வினு:—வேதாந்த சாஸ்திரம் எதைப் பிரதிபாதிக் கின்றது?

விடை:—வேதாந்த சாஸ்திரத்தைத் தெரிந்து கொள் வதற்கு முன், வேதங்களின் முதற்பாகத்தைப்பற்றிச் சிறிது தெரிந்து கொள்ளல்வேண்டும்.

வினு:—வேதங்கள் என்று சொல்வது எவற்றை?

விடை:—ஆதியில் வேதம் ஒன்ருக இருந்தது. ஸ்ரீ கிருஷ்ணத்வைபாயனர் என்பவர் அதனை ரிக், யஜுர், ஸா மம், அதர்வணம் என்று நான்கு பாகங்களாகப் பிரித்தனர்.

வினு:—அவர் ஏன் அதனை நான்கு பாகங்களாகப் பிரித்தனர்?

விடை:—கலியுகத்திலுள்ள ஜனங்களின் புத்தி நுட்பக் குறைவையும், அவர்களது விஷயபோக இச்சையையும், நாஸ்திக புத்தியையும் நோக்கி உலகோபகாரமாக அவர் வேதத்தை நான்கு பிரிவாகச் செய்தனர்.

வினு:—வேதம் என்னும் பதத்துக்குப் பொருள் என்னை?

விடை:--வித் என்னும் தாதுவின் அடியாகப்பிறந்தது வேதம் என்னும் சொல். "வித்" என்பதற்கு "அறிய" என்பது அருத்தமாம். ஆகையினுல், வேதம் என்பதற்கு வித்தை என்று பொருளாம்; அதனைச் சாஸ்திரம் எனவும் கூறலாம்.

வினு:—ஆங்கிலத்திலே ஸைன்ஸ் (Science) என்கிறுர்களே அதுபோல் வேதமும் ஸைன்ஸாகுமா?

விடை:—ஆங்கிலத்தில் "ஸைன்ஸ்" என்னும் பதம் "ஸையோ" என்னும் தாதுவின் அடியாகப் பிறந்ததாம். "ஸையோ" என்னும் பதத்துக்கு "நான் அறிகிறேன்" என்பது பொருளாம். ஆகையினுல், வேதமும் ஸைன்ஸ்தான்.

வினு:—இக்காலத்து மேல்நாட்டுச் சாஸ்திரங்கள் கூறியுள்ளவை மிகவும் மேம்பாடானவை; ஏனெனின், அவைகளின் உண்மையை எடுத்துக்காட்டக்கூடிய பண்டிதர்கள் இருக்கின்றனர்; அதனை நாமும் பரிசோதித்துக்கண்டு கொள்ளலாம். மேல் நாட்டுச் சாஸ்திரங்கள் கூறியுள்ளவைகளை விளக்கிக்காட்டி நிரூபிக்கக்கூடிய கருவிகளும் கலாசாலைகளும் பல உள. எல்லாவிதக் கலாசாலைகளிலும் பௌதிகபரீக்ஷணசாலை (Laboratory) ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இப்பரீக்ஷண சாலைக்குள் ஒருவன் சென்று தான் வாசித்த

விஷயங்களின் தத்துவ உண்மைகளைக் கண்ணுற் காணக் கூடிய வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. மூடத்தனமாய் நம்ப வேண்டிய தொன்றுமில்லை. வேதசாஸ்திரங்கள் கூறியிருக்கும் பொருள்கள், இவ்வாறான சோதனைக்கு நிற்குமா?

விடை:—தற்கால மேல்நாட்டுச் சாஸ்திரிகள் தாங்கள் கூறுவதுதான் சரியென்று மதித்து மமதை கொண்டிருக்கின்றனர். அவர்கள் கூறும் முடிவுகள் என்னவென்பதைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம். மேல்நாட்டுச் சாஸ்திரிகள் ஜகத்தைப்பற்றி என்ன சொல்லுகிறார்கள். அவர்கள் ஜகமானது பிரதான்ய (Matter) த்தாலுண்டானது என்றுகூறி இப்பிரதான்யம் அழியாத வஸ்துவென்றும் இயம்புகின்றனர்; மனிதனுடைய மனதையும் ஆத்மாவையும் ஆராய்ச்சி செய்து தீர்க்கமான முடிவுக்கு இன்னமும் வரவில்லை. சில மேல் நாட்டுச் சாஸ்திரிகள் ஆத்மாவைக்கண்டறிவது அசாத்தியமென்று அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர். ஆத்மா உண்டோ இல்லையோ என்று வேறு சிலர் சங்கிக்கின்றனர். ஆத்மா இருந்தாலென்ன, இராவிட்டால் என்ன என்று உபேக்ஷித்திருக்கின்றார்—ஒரு சாரர். நாம் மேல்நாட்டுச் சாஸ்திரங்களை வாசிப்போமாயின், ஜகத்தை ஏதோ ஒரு சக்தி நடத்திக்கொண்டு வருகிறதென்பதும் அச்சக்தி ஜடமென்பதும் நமக்குத் தெரியும். ஜகத்தானது பிரதான்யத்தால் (Matter) உண்டாயிருக்கின்றதென்றும், இப்பிரதான்யமானது உயிரற்றதென்றும், அசேதனமென்றும் மேல்நாட்டுச் சாஸ்திரங்கள் நமக்குப் புகட்டுகின்றன. ஜகமானது உணர்வற்றதென்பதும், உயிரற்றதென்பதும், ஏதோ ஒரு அசேதன சக்தியால் இயக்கப்பட்டு வருகின்றதென்பதும், மேல் நாட்டுச்சாஸ்திரங்களின் சித்தாந்தமாகும்.

ஜகம், மனம், ஆத்மா என்னும் இவைகளை ஆராய்ச்சிக்கு உட்படுத்திய வேதங்களும் மேற்சொன்ன மேல் நாட்டுச் சாஸ்திரிகள் சித்தாந்தத்திற்கு வேருப முடிபுக்கு வந்திருக்கின்றன. வேதங்கள் ஜகத்தை ஆராய்ச்சிசெய்து "அது உயிரற்றதல்ல, அசேதனமல்ல, ஆனல், உயிருள்ளது, சேதனத்தன்மையைப் பொருந்தியுள்ளது" என்னும் முடிபுக்கு வந்திருக்கின்றன; ஏனெனின், ஜகமானது அகண்ட சர்வவல்லமையுள்ளதும் குறைவற்ற நிறைவு பொருந்தியதுமான பரமாத்மாவால் வியாபிக்கப்பட்டிருக்கிறது; என்று இவ்வாருக வேதங்கள் ஒலமிடுகின்றன. ஆத்மா உளன், அவன் நித்யன், நிராமயன், சச்சிதானந்த ஸ்வரூபமுடையவன் என்று வேதங்கள் தர்க்கவாயிலாகக் கசடறப் பிரதிபாதிக்கின்றன.

வினு:—இவையெல்லாம் சொல் மாத்திரமாய் இருத்தல்கூடாதோ? ஆத்மா என்பது ஒன்று இருக்கிறதென்றும், அது முன் இருந்தபடியால் எதிர்காலத்திலும் இருத்தல் வேண்டுமென்றும் அதனது, சுபாவம் அழியாததன்மை என்றும் கூறின், அதனை யார் நம்புவார்! இவைகளை யுக்தி அனுபவ வாயிலாகக் கூறுதல் வேண்டும்.

விடை :—ஒவ்வொரு மனிதனும் தனது நிஜஸ்வரூபத்தை உற்று உணர்ந்தால், மேற்கூறிய இலக்ஷணங்களுடைய ஆத்மா தான் என்பதை அனுபவத்தில் உணர்வான்; அக்காலத்தில், அவ்வனுபவமே ஆத்மாவின் இருப்பை அவனுக்கு ருசுப்படுத்தும்; வேறு ருசுக்கள் அநாவசியகமாகும். ஆனல், யுக்தி பூர்வகமாகவும் அதன் இருப்பை ஸ்தாபித்தல் கூடும்.

வினு:—யுக்தி பூர்வகமான நியாயங்கள் என்னே?

விடை:—ஆத்மா இல்லை யென்றால், இல்லையென்று சொல்லும் புருஷன் இருத்தல்வேண்டும்; அப்புருஷனும் இல்லை யென்று சொன்னால், அப்புருஷன் சுபாவத்தைக் காணும் வேறோர் புருஷன் இருத்தல் வேண்டும். ஆகையினாலே, ஒருவன் தன் அபாவத்தைப் பாவித்தல், மணலைக் கயிறாகத் திரித்தல் போல்வதாம். ஒரு மனிதன், தன் அபாவத்தைத் தான் காணுதல் என்றும் பொருந்தாது. நான் உளன் என்பதைச் சங்கிப்பது முயற்கொம்பு போலாகும். அப்படி சங்கிக்கின், சங்கிக்கும் அப்புருஷனே அக்ஷர புருஷனாவான்; அஃதாவது என்றும் அழியாத ஆத்மாவாவன். இவ்விதம் சங்கராசாரியார் எழுதியிருக்கிறார்.

வினா:—மேல்நாட்டுச் சாஸ்திரிகளில் எவரேனுமொருவர் இவ்வாறு சிந்தித்து இம்முடிவுக்கு வந்திருக்கின்றனரா?

விடை:—தற்காலத்து மேல்நாட்டுச் சாஸ்திரிகளில் ஒருவரும் இவ்வாறு சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்திருக்கின்றாரென்பது தோன்றவில்லை; ஆனால், பூர்வீககாலத்தில் மேல்நாட்டில் 'டேகார்டி' (Descartes) என்னும் பேர்பெற்ற சாஸ்திரி ஒருவர் இருந்தார். அவர் எல்லாவற்றையும் சந்தேகிக்கத் தொடங்கிச் சந்தேகிக்குந் தம்மைச் சந்தேகிப்பது இயலாதென்பதைத் தெரிந்து கொண்டு "நான் சங்கற்பிக்கிறேன்; ஆகையினால், நான் உளன்" (Cogito ergo Sum) என்னும் பிரசித்திபெற்ற வாக்கியத்தை கூறியிருக்கின்றனர்.

வினா:—சங்கிப்பதும் சங்கற்பித்தலும் ஒன்றா?

விடை:—ஆம்; எப்படியெனின், எனக்குச் சம்சயம் பிறந்தவுடனே நான் தீர்க்கமாக ஆலோசித்து ஏதோ ஒரு முடிவுக்கு வருகிறேன்; முதலில் எப்பொருளைப்பற்றிச் சந்

தேகம் உண்டாயிற்றே; அதுபற்றி ஆராய்ச்சிசெய்யத் தெளிவான எண்ணம் எனக்கு உண்டாகிறது; பிறகு அதுபற்றிச் சிந்தித்தலே ஒழிக்கிறேன். ஆகையினால் இப்படி சங்கித்துப் பிறகு, ஆராய்ச்சிசெய்து ஒருமுடிவுக்கு எந்த 'நான்' வந்ததோ, அந்த 'நான்' என்று முளதாக இருத்தல் வேண்டுமென்று டேகார்டி என்னும் தத்துவசாஸ்திரி பிரதிபாதித்தார். எது உளதோ அது ஒரு வஸ்துவாக இருத்தல் வேண்டும். இன்மை ஒரு பொருளாகாது; இருத்தல் ஒருபோதும் இன்மையாகாது; நான் ஏதோ ஒருவஸ்துவாக ஒருபொழுதும் இல்லாமலில்லை; ஒருகாலும் இன்மையாகேன். இருத்தல் இன்மையினின்று ஒருகாலும் உண்டாகாது; பரஸ்பரம் எதிர்மறையாதலின்.

வினு:—நன்று; நன்று; வேறு சில நியாயங்களையும் கேட்க ஆவலுடையவனு யிருக்கிறேன். அன்புகூர்ந்து புகலல் வேண்டும்?

விடை:-மனிதனுடைய சுபாவத்தை ஆராய்ச்சிசெய்து பார்ப்போம். அவனது சுபாவம் நித்தியமா? அல்லது அநித்தியமா? என்பதைச் சோதித்துப் பார்ப்போம். ஓர் உயிருள்ள பிராணியின் சுபாவத்தை ஓர்ந்துணர, அதன் வெறுப்பு விருப்புக்களை நோக்குகிறோம். எதை அது வெறுக்கின்றதோ அது அதன் சுபாவமல்லவென்றும், எதை அது விரும்புகின்றதோ அது அதன் சுபாவமென்றும் நாம் அறிந்து கொள்ளுகிறோம். ஒரு மீனைத் தண்ணீரிலிருந்தெடுத்து ஷாஜிஹான் சக்ரவர்த்தி வீற்றிருந்த மயில்வாகன ஆசனத்தில் இருக்கச்செய்தால், அதிலிருக்க அம்மீனுக்குப் பிரியமிருக்குமா? அது "சாக்கடைத் தண்ணீரிலாகிலும் என்னை எறிந்து விடுங்கள்; அரசன் வீற்றிருக்கக்கூடிய ஆசனம் எனக்கு வேண்டாம்; வேண்டாம்" என்றல்லவாகூறும்!

மீன் சுபாவமாக வசிக்குமிடம் தண்ணீரேயன்றி, நிலம் அன்று. ஆகையினால், அதற்குத் தண்ணீரில் விருப்பமுண்டு; நிலத்தில் விருப்பமில்லை. இவ்விதமே நம்முடைய வெறுப்பு விருப்புக்களை ஆராய்ச்சிசெய்து பார்ப்போம். எல்லாரும் உயிருடன் இருக்க விரும்புகிறார்கள்; உயிர் துறக்க இஷ்டப்படுவதில்லை. நாம் எல்லாரும் சந்தோஷத்தையடைய விரும்புகிறோமே யொழிய, துக்கத்தையடைய இச்சிக்கிறதில்லை; நம்மை எல்லாரும் புத்திமான் என்று சொல்லல் வேண்டுமென்று விரும்புகிறோமேயன்றி மூடன் என்று சொல்ல விரும்புகின்றோமில்லை; அவர் நம்மை மூடனென்று கூறுவாராயின், அவரைக் கோபிக்கிறோம். இவை என்ன காட்டுகின்றன? நம்முடைய சுபாவத்தின் சாராம்ஸம் என்றுமிருத்தல்(உயிரோடிருத்தல்), ஆனால் அழிந்துபோதல் (மரணமடையவிரும்புதல்) அல்ல; ஆநந்தம் ஆனால் துக்கமல்ல; அறிவு, ஆனால் அறியாமை யல்ல வென்பதை யன்றோ காண்பிக்கின்றன. ஆகையினால், பண்டைக்காலத்து ரிஷிகள், ஆத்மா மித்தைஅல்லவென்றும், தேகமழியும்போது அதனுடன் ஆத்மா அழிவதில்லையென்றும், ஆநந்தமே அதனது வடிவமென்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். ஆத்மாவின் சுபாவிக வடிவம் சச்சிதாநந்தமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன; அஃதாவது ஆத்மாவானது (சத்) என்றுமுள்ளது, (சித்) எல்லாவற்றையும் அறிவது, (ஆநந்தம்) சதா ஆநந்தமாயுள்ளது என்பதாம்.

**வி:**—நான் என்றுமுள்ளவன், எல்லாமறியக்கூடியவன், சதா ஆநந்தமயன் என்பது உண்மையாயின், எனக்கு அநேக விஷயங்கள் தெரியாமல் இருக்கின்றனவே! எனது அறியாமை, ஆநந்தத்துக்கு விக்னமாயிருக்கின்றது; அந்த

ணல் நான் என்றுமுள்ளவன் என்பது அசம்மதமாகி விடுகின்றது. இவ்வறியாமைக்குக் காரணம் யாது?

விடை:—நீ சச்சிதாநந்த வடிவன் என்பதற்குச் சந்தேகமில்லை; ஆனல், நெடுங்காலப் பழக்கத்தினல் உனது நிஜஸ்வபாவம் உனக்குப் புலப்படுவதில்லை. தேகமே நான் என்னும் உனது பாவனுமுதிர்ச்சியினல், தேகத்தையன்றி, தேகத்துக்கு வியதிரேகமான உனது சுபாவம், உன் எண்ணத்தில் உற்பத்தியாகாதிருக்கின்றது. ஒருவன் உன்னைக் கண்டு "அப்பா! நீ நினைப்பதுபோல் நீ தேகமல்ல; ஆனல், சச்சிதாநந்த ஸ்வரூபி" என்று கூறினல், அவனைக்கண்டு நீ நகைக்கக்கூடிய அளவாக உரம் பெற்றிருக்கிறது—உன்னுடைய தேகாத்மபுத்தி. ஆத்மாவுக்கு அந்தமில்லை; அழிவு இல்லை. ஆனல், தேகத்துக்கோ அந்தமுண்டு; அழிவுண்டு. ஆகையினல், உனது அறியாமையினலே "நான் தேகமென்று" நீ நினைத்துக் கொண்டிருக்கிற வரையில், உனக்குண்டாகும் ஞானமும் ஆநந்தமும், உனது உயிரும் அந்தத்தை அடைகின்றன; அழிவை யடைகின்றன. உன்னை நீ தேகேந்திரியாதிகளினின்றும் பிரித்துப்பார்; உன்னைத் தேகேந்திரியாதிகளினின்றும் பிரித்துக்கொண்டு, அவைகளுக்கு நான் சாட்சி மாத்திரமாக இருக்கின்றேனென்னும் ஞானம் உனக்கு எப்பொழுது உண்டாகுமோ அப்பொழுது உன் நிஜஸ்வரூபம் உன் அனுபவவாயிலாகத் தோன்றும்; அதுவரைக்கும் உன்னுடைய நிஜஸ்வரூபம் தோன்ருது. உன் நிஜஸ்ரூபவம் தடஸ்தமானவுடனே, உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை; எல்லாம் உன்னுள் இருக்கக் காண்பாய். ஆகையினல் ஆத்மாவின் இலக்ஷணங்களைப்பற்றி வேதங்கள் சங்கிக்கவில்லை; பின்னையோ

அவற்றை ஐயந்திரிபற விளக்கிக்காட்டுந் திறனுடையவைக ளா யிருக்கின்றன.

விஞ:—ஆத்மாவின் பரிமாணம் என்ன?

விடை:—ஆத்மாவின் பரிமாணத்தைப்பற்றி அபிப் பிராய பேதங்களுள. சிலர் அதனை அநந்தம் அஃதாவது விபு என்கிறார்கள்; வேறு சிலர் அணுவுக்கு அணு என்கிறார் கள்; இன்னும் சிலர் அது விபுவுக்கு விபுவுமல்ல; அணுவுக்கு அணுவுமல்ல; ஆனல், இவ்விரண்டிற்கும் நடுத்தரமானது என்று அபிப்பிராயப்பட் டிருக்கின்றனர்.

விஞ:—இந்த அபிப்பிராயங்களில் எது அங்கீகரித்தற் குரியது?

விடை:—எதாவது ஒரு [illegible]ப்பிராயம் சரியென்று [illegible]றின், அது மற்றவைகளோடு முரணும்; ஆகவே, எல்லா விதப் பரிமாணமும் ஆத்மாவுக்குப் பொருந்துமென்பதே நமது முடிவு

விஞ:—இந்த முடிவைத் தக்க நியாயங்களுடன் விளக் கிக் காட்டல் வேண்டும்?

விடை:—"அது எல்லாவற்றிலும் சிறிய பொருளினும் சிறியது; எல்லாவற்றிலும் பெரிய பொருளினும் பெரியது" என்று ஆத்மாவின் பரிமாணத்தைப்பற்றி ஒரு உபநிஷத்துக் கூறுகின்றது. இந்த வாக்கியத்தை எப்படி யுக்தியோடு பொருந்த வைப்பது? இரண்டு கோடிகளும் தம்முள் சந்திப்பை யடையும் என்னும் நியமம் நமக்குத் தெரிந்துள் ளது. அத்யந்த சூடும் அத்யந்த சீதளமும் ஒரே குணத் தைத்தான் விளைவிக்கின்றன என்பது எவராலும் மறுக் கொணத விஷயமாம். இப்பொழுது 'எல்லாவற்றிலும் பெரிய பொருளினும் பெரியது' என்னும் வாக்கியத்தின்

கருத்தைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம். ஏதாவது ஒரு பெரிய வஸ்துவைக் கண்டு, அதனினும் பெரிய வஸ்து இல்லையென்பது நமக்குத் தோன்றுமாயின், அப்பொழுதுதான் நாம் அதனை எல்லாவற்றி லும்பெரியது என்று கூறுகின்றோம்; ஒரு பொருளை எல்லாவற்றிலும் பெரியதைவிடப் பெரியது என்று இசைக்கும்பொழுது அத்தகைய பொருளை மனதால் யூகித்துக் கூறுகின்றோமேயொழியக் கண்ணாற் கண்டு கூறுகின்றோமில்லை. நாம் இவ்விதம் அதனை மனதால் யூகித்து அதைவிடப் பெரியது என்று கூறுவோமாயின், அத்தகையபொருள் மனதிற்கும் எட்டாததாகத்தான் இருத்தல் வேண்டுமென்பது விளங்கும். கண்ணால் கண்டும் மனதால் யூகித்தும் உணரக்கூடியது, காலதேச வஸ்துவில் நிகழக்கூடியதாக இருத்தல் வேண்டும். எது கண்ணுக்கும் மனதுக்கும் ஆவாகனப்படாதோ அது கால தேச வஸ்து பரிச்சேத ரகிதமா யிருத்தல் வேண்டும். பொருள்கள் தேசத்தால் அஃதாவது இடத்தால் ஒன்றினின்றும் ஒன்று பிரிக்கப்பட்டிருக்கின்றன. சம்பவங்கள் காலத்தால் பிரிக்கப்பட்டிருக்கின்றன; காரண காரிய நியமனத்தால் காரணங்கள்காரியங்களினின்றும் பிரிக்கப்பட் டிருக்கின்றன. ஆகையினால், பிரிக்கும் இயல்பினையுடைய கால தேச வஸ்து ஆகியஇவைகளின் பரிச்சேதரகித வஸ்துஒன்றேயாயிருத்தல் வேண்டும். இரண்டென்னும் மானத விகற்பமற்ற காலத்தில் ஒன்றே நிகழ்தல்தெளிவாக விளங்கும். இங்ஙனமே எல்லாவற்றிலும் சிறிய பொருளினும் சிறியது என்று சொல்லுங்கால், அத்தன்மைய பொருள் மனதால் ஆவாகனப் படக்கூடியதேயொழிய, கண்ணுக்குப் புலப்படக் கூடியதன்று. அதனை அத்தகைய சிறியபொருளினும் சிறியது என்று கூறுங்கால், அது காலதேச வஸ்து பரிச்சேத ரகிதமாயிருத்தல் வேண்டுமென்

பதுவிளங்குகின்றது. ஆகவே, அத்தகைய வஸ்துவும் ஒன்றே யாயிருத்தல் வேண்டும். ஆதலினால், பெரியதினும் பெரியது; சிறியதினும் சிறியது ஆகவிருப்பது ஒரு வஸ்துவாகவே இருத்தல் வேண்டுமென்பது தெளிவாகப் பெறப்படுகிறது. மேற்கண்ட நியாயத்தால் ஆத்மாவின்கண் பெரியதினும் பெரியது என்னும் பரிமாணமும் சிறியதினும் சிறியது என்னும் பரிமாணமும் பொருந்துமென்பது ஐயந்திரிபறத் தோன்றுதல் வேண்டும். பெரியது, சிறியது என்னும் கோடிகள் (முனைகள்) இடையில் பல்வேறுவகைப்பட்ட உருவங்கள் இயலுமாகையால், எல்லாவித உருவங்களும் தமக்காதாரமாக இருக்கும் ஆத்மாவினிடம் பொருந்தியுள்ளன என்பது கூறவும் வேண்டுமோ!

வினா:—ஆத்மாவானது கால தேச வஸ்து பரிச்சேத ரகிதமாயின், ஆத்மா ஒன்றாகவே இருத்தல் வேண்டும்; அங்ஙனமன்றி இவ்வுலகின்கண் பல ஆத்மாக்கள் உயிர்த்து வருவதை நாம் காண்கிறோம். ஆத்மாக்கள் பலவென்பதைச் சாஸ்திர நியாயங்களுடன் பிரதிபாதிக்க வல்லோர் பலர் இருக்கின்றனர். இவர்களுக்கு என்ன சமாதானம் உரைத்தல் கூடும்?

விடை:—ஆத்மாவானது கால தேச வஸ்து பரிச்சேத ரகிதமாமென்பதை ஒப்புக்கொண்ட பிறகும், ஆத்மா ஒன்றல்ல, பலவென்று கூறுவாராயின், அவரை என்னென்று சொல்வது? அவர்கள் அப்படி கூறுவதற்குக் காரணம் அவர்களது குருட்டுப்பக்தியும் அஞ்ஞானமுமேயாம்.

வினா:—ஆத்மாவினிடம் எல்லாவிதப் பரிமாணங்களும் உளவாகும் என்பதைச் சில திருஷ்டாந்தங்களால் விளக்கிக் காட்டல் வேண்டும்.

விடை:—ஒரு மனிதனுக்குச் சிறிது சொத்திருந்தால் அவனைச் சொத்துள்ள மனிதன் என்பார்கள்; ஒருவன் சொத்தையெல்லாமிழந்து கடன்காரனாக இருந்தால், அவனைக் கடன்காரன் என்பார்கள்; ஆனால், ஒரு மனிதன் சொத்துமில்லாமல் கடனுமில்லாமலிருந்தால், அவனை நடுத்தர மனிதன் என்று மதிப்பார்கள்; அஃதாவது சொத்தில்லா மனிதன் என்பார்களே யொழிய, கடன்காரன் என்றும் சொத்துள்ளவன் என்றும் பகரார்கள். சொத்துள்ளவனை "மிகை" (Positive) என்னும் நிலைமையிலும், கடன்காரனை "குறை" (Negative) என்னும் நிலைமையிலும், நடுத்தரமான மனிதனை "பூஜ்யம்" (Zero) என்னும் நிலைமையிலும் வைப்போம். இந்நிலைமைகளின் சம்பந்தத்தினின்றும் ஒரு நியமம் இயங்கிக்கொண்டிருக்கின்றதென்பது நமக்குத் தோன்றும். "மிகை" நிலைமையிலிருந்து "குறை" நிலைமைக்குச் செல்லவும், "குறை" நிலைமையிலிருந்து "மிகை" நிலைமையையடையவும், "பூஜ்யம்" என்னும் மத்திய நிலைமையின் மூலமாகச் செல்லல்வேண்டும் என்னும் நியமம் ஏற்படும்.




இதனை, இன்னொரு திருஷ்டாந்தத்தாலும் விளக்கிக் காட்டுவோம். இப்பொழுது ஒரு பூதக்கண்ணாடியை எடுத்துக் கொள்வோம்; இந்தப் பூதக்கண்ணாடியின்முன் ஒரு விளக்கை வைத்தால், அவ்வொளியின் பிரதிபிம்பம் அக்கண்ணாடியின் அப்புறத்தில் எப்பொழுது தோன்றும்? பூதக்கண்ணாடிக்குக் கேந்திரம் என்னும் ஒரு ஸ்தாயையுண்டு. அந்த ஸ்தாயையில் ஒரு விளக்கை வைத்தால், அதன் பிரதிபிம்பம் தோன்றாது. ஆனால், அந்தக் கேந்திரத்திற்கு அப்

புறத்தில் (அஃதாவது பூதக்கண்ணுடிக்கு வெகு தூரத்தில் விளக்கை வைத்தால்) அதன் உருவம் பூதக்கண்ணுடியின் மற்ருெரு பக்கத்தில் தோன்றும். இந்த உருவம் தோன்று மிடத்தைப் பிரதிகேந்திரமென்று கூறலாம். இந்த விளக்கைக் கேந்திர ஸ்தாயையின் அருகே கொண்டுபோக, பிரதிகேந்திரம் ஒற்றிச் சென்றுகொண்டே யிருக்கும்; அஃதாவது விளக்கின் பிரதிபிம்பம் பூதக்கண்ணுடியின் வேருெரு புறத்தில் தூரம் தூரமாகச் சென்றுகொண்டே யிருக்கும்; ஆனுல், கேந்திர ஸ்தாயையில் விளக்கைக் கொண்டுவந்து நிறுத்தினுல், பிரதிகேந்திரம் எங்குமில்லாத தூரம் சென்று விடும்; பிரதிபிம்ப உருவமும் கண்ணுக்குத் தோன்ருமல் மறைந்துபோம்; ஆனுல், கேந்திரத்தின் மற்ருெரு பக்கத்தில் அணுவளவாகவேனும் விளக்கைத் தள்ளி வைப்போமானுல், முன் மறைந்த பிரதிபிம்பவிளக்குத் தோன்றும். ஆகையினுல், எல்லேயற்ற தூரத்திற்கும் பூஜ்யத்துக்கும் தொடர்ச்சியின்மை கிடையா தென்பது விளங்குகிறது. ஆனதுபற்றி மஹத்துக்கு மஹத்தானது அணுவுக்கு அணுவாகுமென்பது பெறப்படுகிறது.

வினு:—எல்லாவித உருவங்களும் ஆத்மாவின்கண் இருத்தல்கூடு மென்பது இப்பொழுது நன்கு புலப்படுகிறது. ஜீவர்களைப் பற்றி வேதங்கள் என்ன பிரதிபாதிக்கின்றன?

விடை:—ஜீவர்கள் எண்ணிறந்தவர்கள்; அநாதியாயுள்ளவர்களென்று வேதங்கள் கூறுகின்றன.

வினு:—இந்த ஜீவர்கள் எப்படி ஜனன மெடுக்கிருர்கள்?

விடை:—ஜீவர்கள் தாம் தாம் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி உத்தம அதம உலகங்களில் முறையே ஜனிக்கிருர்கள்.

வினு:—இப்படி எத்தனை காலம் பிறந்து பிறந்து உழல்வார்கள்?

விடை:—தங்கள் நிஜஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளுகிறவரையில் ஜீவர்கள் எண்ணில் பிறவி எடுத்தல்வேண்டும். ஜீவன் அநித்யதேகமே "நான்" என்று எண்ணுகிறவரையில், உடலுக்கு வரும் சுகாசுகங்களைத் தன்மேல் ஏற்றிக்கொண்டு உடலோடு ஐக்யமுறுதலால், அவன் தனது கர்மானுசாரத்துக்கிசைய, பலலோகங்களுக்குப் போவதும் வருவதுமாக இருப்பான். ஞானோதயத்தால் ஜீவனுக்குத் தனது நிஜஸ்வரூபம் தடஸ்தமாகிறவரையில், அவன் நாய் படாப்பாடு படுவான்.

வினு:—ஜீவன் தன்னை உடலோடு ஐக்யப்படுத்திக்கொள்வதால், உடலுக்குண்டாகும் சுகா சுகங்களைத் தனக்கு உண்டாவதாக நினைக்கிறுன் என்பது கூறப்பட்டது. இது உண்மையாயின், உடல் நசிக்கும்போது ஜீவனும் அதனுடன் நசித்துத்தானே போகவேண்டும்; அப்பொழுது ஜீவன் இன்னெரு உடலை எடுத்துக் கொள்ளுகிறுன் என்னும் சுருதி வாக்கியம் பொய்யாதல் வேண்டுமே?

விடை:—அப்படியல்ல; ஒரு குழந்தையின் சுபாவத்தை ஆராய்ந்து பார்ப்போம். மாதாவின் கர்ப்பத்தினின்றும் குழந்தை உற்பத்தியானவுடனே அதன் மனது சூனியமாயிருக்கின்றதா? அல்லது சில வாசனைகளைப் பீஜரூபமாகத் தன்னுள் அடக்கி வைத்திருக்கின்றதா? அதன் மனது சூன்யமாயில்லாவிடின், அதன் முன் ஜனனத்தை அங்கீகரித்தல் வேண்டும்.

வினு:—அன்று ஜனித்த குழந்தையின் மனதின் தன்மையை எப்படி கண்டறிதல் கூடும்?

விடை:—ஔவை - திருவள்ளுவர் முதலிய சில குழந்தைகள் பிறந்த அன்றே பேசினவென்று தமிழ்ச் சரித்திரம் கூறவில்லையா! ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பிறந்த அப்பொழுதே பேசினரென்பது ஸ்ரீமத் பாகவதத்தில் எழுதப்பட்டிருக்கவில்லையா? பிறந்த அன்றே பேசுந்திறமையைக் காட்டாவிட்டாலும், இரண்டொரு வருஷத்தில் அபாரசக்தியைக்காட்டின ஆழ்வாராதிகள் நாயன்மார்கள் சரித்திரத்தை நீ வாசித்ததில்லையா? குழந்தை வளர வளர அதன் சுபாவத்தை உற்றுநோக்கினல், கருவிலே அமைந்ததுபோல் அதனிடத்துச் சில தகுதிகளும் மனச்சாய்வுகளும் காணப்படும். இவ்விதத் தகுதிகளும் மனச்சாய்வுகளும் குழந்தையினிடத்து எப்படி மேலோங்கித் தோன்றுதல் கூடும்? பலநாள் பழகின அப்பியாசமே ஒருவனிடத்து மேற்பட்டு நிற்பதை நாம் கண்ணுறுகின்றேம். குழந்தையினிடத்தில் சில விசேஷ மனச்சக்திகளுளவாயின், அவை முன் ஜனனத்தில் அப்பியசித்து உரமடைந்தவைகளாயிருத்தல் வேண்டுமென்பது பெறப்படுகிறன்து. மேலும், ஒரு மனிதன் இறக்கும்பொழுது, அவன் தான் கொண்ட ஆசைகளில் அநேகம் நிறைவேறுமல் இருத்தலின், இனிவரும் ஜனனத்தில் அவை பூர்த்திபெறும் என்னும் விருப்பத்துடன் தன் தேகத்தை விடுகிருன்.

வினு:—ஒரு மனிதனுடைய உடல் மரித்து அழியும்பொழுது மனிதனும் அதனுடன் அழியாமல் வேறு ஜனனம் எடுக்கின்றுன் என்று சொன்னல், மரணம் என்பது என்ன? இதனை விளங்க உரைத்தல் வேண்டும்?

விடை:—மரணம் என்பது அழிவல்ல; நம்மனேர் கிழிந்த பழைய வஸ்திரத்தை எறிந்துவிட்டுப் புதிய வஸ்திரத்தைத் தரித்துக்கொள்வதுபோல, ஒருவன் பழைய தேகத்

தை எறிந்துவிட்டுப் புதிய தேகத்தை எடுத்துக்கொள்ளு கின்றான். பழைய தேகத்தை எறிந்துவிடுவதை மரணம் என் பர். பழைய வஸ்திரத்தை எறிந்த ஜீவன் புதிய வஸ்தி ரத்தைத் தரித்து ஜீவித்திருப்பதுபோல, பழைய தேகத்தை விட்ட ஜீவன் புதிய தேகத்தைத் தரித்து ஜீவித்திருக் கின்றான்; அவன் பழைய தேகத்தோடே அழிந்துபோவ தில்லை.

வினு:—உடலை விடுவதும் உடலை எடுப்பதும்தானு ஜீவனுடைய வேலை; இதற்கு முடிவில்லையா?

விடை:—உடலை ஒருங்கேவிட்டு, அதனை எப்பொழு தும் ஏற்காதிருத்தல் சுலபமான காரியமல்ல. ஜீவனிடத் தில் பூர்த்தியாகாத ஆசைகள் எண்ணில; அவன் இவ்வாசை களினின்றும் விடுபடுவதற்குப் பல ஜன்மங்களை அத்தியா வசியமாக எடுத்தல் வேண்டும். ஜீவன் இவ்வுடலின் சம் பந்தத்தை நீக்கப் போராடிக் கொண்டுதான் இருக்கிறான்.

வினு:—ஜீவன் எல்லாவிதச்சுகங்களையும் இந்தத்தேகத் தைக்கொண்டு அனுபவிக்க, அவன் இந்த உடலைத்துறந்து நிற்கப்போராடுகிறான் என்று நீர் கூறுவது என்னை? சுவர்க்க மென்பதும் நரகமென்பதும் மனிதனுடைய உணர்ச்சிக்கு வேறாக உளவா? ஒரு மனிதன் நன்றாகத் தூங்கிக்கொண் டிருக்கும்பொழுது அவன் சுவர்க்கத்திற்குக் கொண்டுபோகப் பட்டானென்று எண்ணிக்கொள்வோம்; அங்கே அவன் 2000 வருஷமிருந்தானென்றும் எண்ணிக்கொள்வோம்; அந்த 2000 வருஷமும் அவன் ஒரே நித்திரையில் இடைவிடாது இருந்தா னென்றும் நினைத்துக்கொள்வோம்; அந்த 2000 வருஷமும் கழிந்த பிறகு இவ்வுலகத்திற்குக் கொண்டுவரப் பட்டானென்றும் நினைத்துக் கொள்வோம். பிறகு அவ

னுக்கு நித்திரை தெளிந்த உடனே அவனைச் சுவர்க்க லோகத்தைப்பற்றிக் கேட்டால், அவன் என்ன சொல்லு வான்? எனக்கு ஒன்றுந்தெரியாதென்று தானே சொல்லு வான்; ஏனெனின், அவன் அந்த 2000 வருஷமும் உணர் வற்று நித்திரை செய்துகொண்டிருந்தா னன்றோ? இவ்வித மாக அவனை நரகத்தில் வைத்தாலும் அவன் நரகமின்ன தென்பதை உணரான். ஆகையினால், ஒருவன் விழித்துக் கொண்டு உணர்ச்சியுடனிருக்கும் பொழுதுதான் வாஸ்த வத்தில் அவன் இருக்கின்றானென்று மதிக்கலாம். அங்ஙன மிராவிடின், அப்புருஷன் இருந்தும் இல்லாதவனே யாவன். ஆகையினால், ஒருவனுடைய சுகமும் துக்கமும் அவனுடைய அறிவில் விஷயமாய் நிகழ்கின்றன. இதை நீர் அங்கீகரிக் கின்றீரா?

விடை:—சுகமும் துக்கமும் அறிவில்தான் நிகழ்கின் றன; ஆனால், துக்கம் கலவாததும் துக்கத்தால் தொடரப் படாததுமான சுகத்தைப்பற்றியல்லவா நாம் பேசுவது? இவ் விதமான சுகம் தேக ஞானமுள்ள அளவும் கிடையாது என பதைத்தானே நான் சொல்ல வந்தேன்.

வினா:—உம்முடைய கட்சி எனக்கு நன்றாகப் புலப்படு கிறது; நான் அதனைப்பூர்வபக்ஷம் செய்கிறேன்; சற்று அவ சரப்படவேண்டாம். நீர் அங்கீகரித்த வண்ணம் சுகதுக்கங் கள் அறிவில் நிகழுமாயின், கர்மகாண்டத்தைச் சரிவர அனுஷ்டித்தால் சதாநந்தம் இயல்பாகவே நம்மை எய்து மென்று ஜைமினி முனிவர் கூறியிருப்பது எவ்வாறு பொருந் தும்? அவ்விதக் கர்மங்களைப் புரிந்து சதானந்தமடைய உடல் கருவியாயிருக்க, அதனைத் தொலைக்க முமுக்ஷுக் கள் ஏன் போராடல் வேண்டும்? சுவரை வைத்துக் கொண்டல்லவா சித்திரமெழுதுதல் வேண்டும்? சுகப்

பேற்றையடைதற்குத் தேகம் இன்றியமையாத கருவி யாயிருத்தலின், இக்கருவியினை உபேக்ஷித்து நீக்க, சுகப் பிராப்தியை விழைந்தோன் கனவிலும் நினையான். இவ் வுலகத்தில் நிகழும் ஒவ்வொரு சலனமும் ஆண்டவனன்றி உண்டாகாதென்றும், சராசரப்பொருள்க ளனைத்தையும் கட வுள் தமது ஆதீனத்தில் வைத்திருக்கின்றனரென்றும், அள விறந்த ஜீவர்களும் (Souls) தனக்கெனவுணர்வற்ற பிராதான் யமும் (Matter) அநாதியாயுள்ள நித்திய தத்துவங்களென் றும் தத்துவ ஞானிகள் கழறுகின்றனரெனின், சர்வ வல்ல மையும், சர்வஞ்ஞத்வமும், கிருபா சமுத்திரமும், அநந்த புரு ஷருமாகிய கடவுளானவர், அளவில் பரப்புள்ள ஆகாசமென் னும் கூடத்துக்கு அளவில் ஜீவர்களை விருந்துண்ண அழைத் திருக்கின்றாரென்று நாம் உணரல்வேண்டும். ஜீவர்கள் அநாதியாயிருத்தலின், அவர்கள் பசியும் எல்லையற்றதாகும். அத்தகைய பசியைத்தணிப்பதற்கு உணவு முதலியவைகளும் எண்ணிறந்தவைகளா யிருத்தல் வேண்டும். அளவில் பரப் புள்ள இவ்வாகாசமாகிய கூடத்தின்கண், பரிமாறியிருக்கும் அளவில்லாத உணவு முதலியன யாவை யெனின், அவை தனு - கரண - புவன-போகங்களாகிய இவ்வுலகமேயாகும். எல்லா ஜீவகோடிகளுக்கும் இந்த ஜகமே உண்மையான உணவுப்பொருளாகும். பசி வயிற்றில்மாத்திர முண்டாவ தல்ல; கண் முதலிய இந்திரியங்களிலும் உண்டாவ துண்டு. உருவத்திற்காகக் கண்களும், சங்கிதத்துக்காகக் காது களும், உருசிக்காக நாவும், ஸ்பரிசத்துக்காகத் தொக்கும், வாசனைக்காக மூக்கும், பசிகொண்டு அவஸ்தைப்படுகின்றன. மனதோ இப்புலன்களின் அவாக்களை ஞாபகமென்னும் சஞ்சி தத்தில் கட்டி வைத்திருக்கின்றது; சிருஷ்டியின் மூலத்தை யுணர வேண்டுமென்கிற பசிநோயாலும் பிடிக்கப்பட்டிருக்

கிறது. ஆகையினால், இவ்விதமான பசிகளைத் திருப்தி செய்ய ஜகம் முழுவதும் இன்றியமையாததா யிருக்கின்றது. மேலும், கர்மேந்திரியங்களாகிய வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் இவைகள் தத்தமக்குரிய பசியை மேவியிருக்கின்றன. ஆகவே ஞானேந்திரியமாகிய ஐம்புலன் களின் பசி வகைகள் 5, கர்மேந்திரியங்களின் பசி வகைகள் 5, மனத்தின் பசிவகை 1, ஆகப் பசிவகைகள் 11 ஆக இருக் கின்றன.

சத்துவ, இராசத, தாமத குணங்களுடன் மேற்படி 11 வகைப்பசிகளும் கலந்திருத்தலால், 33 வகைகளாகப் பின்னும் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு ஜீவனும் இத்தன் மைய 33 அவாக்களுடன் ஜனிக்கிறான். இவ்வவாக்களுக் கியைந்த போகங்களை நுகர, ஜீவன் இவ்வுலகில் விடப்பட் டிருக்கிறான் என்பது வெளிப்படை; ஏனெனின், ஜீவனது சுபாவத்தை உற்று நோக்கின், அவன் சுவேச்சை யாக இவ்வுலகத்தில் ஜனித்திருக்கிறான் என்று சொல்வதற்கு இடமில்லை. அவன் சுவேச்சையாய் ஜனித்திருப்பானாயின், தனது விருப்பத்துக்கு மாறான நிலையில் இரான். ஆகவே, அவனினும் வேறான சக்தியொன்று அவனை இவ்வுலகில் உய்த்திருக்கின்ற தென்பது கரதலாமலகமென விளங்கல் வேண்டும். அச் சக்தியை வாக்கிறந்த பூரணப் பொரு ளென்று ஆன்றோர் கூறியுள்ளார். அவ்வாக்கிறந்த பூரணப் பொருள் ஏதோ ஒரு காரியத்தின்பொருட்டு இப்பரந்த உல கத்தைச் சிருஷ்டித்து அதனுள் ஜீவகோடிகளைப் பிரவேசிக் கச் செய்திருக்கின்றது. ஜீவர்கள் 33 அவாக்களுடையவர்க ளென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு அவாவும் நாடிச்செல்லும் போகப் பொருள்களோ கோடிக் கணக்காயிருத்தலின், ஒவ்வொரு ஜீவனும் 33 கோடி போகங்

களைப்பெற முயல்கின்றான். அந்த ஜீவனுக்கு இந்த 33 கோடி போகங்களையுமளிக்க 33-கோடி அதிஷ்டான தேவர்களைக் கடவுள் சிருஷ்டித்திருக்கிறார். ஜீவர்கள் இத்தேவர்களைக் கிரமப்படி ஆராதித்தால், மோக்ஷம் உள்பட எல்லா இஷ்ட சித்திகளையும் எய்துவர். ஆகையினால், ஜைமினி ரிஷி என்ன கூறுகின்றாரெனின், "இந்த விருந்துண்ணும் கூடத்தைவிட்டு நீ என் அகலல்வேண்டும்? அப்படி செய்வது மூடத்தனமாகும். இந்தத் தேவர்களைத் திருப்தி செய்து அவர்களிடத்தில் உனக்கு வேண்டியவைகளைப் பெற்றுக் கொள். விருந்துண்ணும் கூடத்தில் நீ விருந்துண்ணுகையில், பக்குவான்னங்களைப் பரிமாறுகிறவர்களுடன் சச்சரவு செய்தால் உனக்கு வேண்டியது கிடைக்காது. ஆகையினாலே, உனக்கு வேண்டியவைகளைத் தரவல்ல தேவர்களை உபாசிப்பது உனது கடமையாகும். இத்தேவர்களை உபாசிக்கும் முறை வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. நீ இவ்வுலகத்திலே யிருந்து தேவர்களைச் சந்தோஷிப்பித்து உன்னைச் சுகபுருஷனாக ஆக்கிக்கொள்; இதற்கு மாறாக, உலகத்தைவிட்டுச் செல்ல முயலாதே; அப்படி முயலுவாயாகில், உனது எண்ணம் ஈடேறாது; ஏனெனின், உன்னிலும் வல்லமையுள்ள கடவுள் கையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாய். அவர்தாம் உன்னை இவ்வுலகத்தில் கொண்டுவந்து விட்டார். இந்தக் கடவுள் உனக்கு மித்திரரா, சத்துருவா என்று கவனித்துப் பார். 33 கோடி போகங்களை நுகரத்தக்க அவாக்களை உன்னிடத்தில் உண்டாக்கி, அவைகளினால் உன்னைத் துன்புறுத்தி உன்னை அடிமைப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதா அவரது விருப்பம் என்பதை நீ யோசித்துப்பார். உனக்கு வேண்டிய 33 கோடி போகங்களைத் தரவல்ல 33 கோடி தேவர்களைச்

சிருஷ்டித்திருக்கும் பகவானை உன்னுடைய விரோதியாக நீ மதித்தால் அது தெய்வ நிந்தனையாகும். ஆகையால் நீ இவ்வுலகத்திலே யிருந்து, தேவர்களைத் தக்கபடி ஆராதித்தால், துக்கமென்பது உன்னை அணுகவே அணுகாது. எப்பொழுதும் விருந்துண்டுகொண்டே சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்திருப்பாய். தேக ஞானத்தைப் போக்கவேண்டிய அவசியமில்லை; பின்னையோ அவ்வித ஞானம் சுகப்பிராப்திக்கு அவசியமெனப் புலப்படும்.'' என்று கூறி யிருக்கின்றார்; ஆதலின், நிஜ ஆநந்தத்துக்குத் தேகாபிமான ஒழிவு எப்படி அவசியமாகும்? இதனை ஐயந்திரிபற விளக்கல் வேண்டும்?

விடை:—நீ கூறியவற்றை யெல்லாம் அதிக கவனத்துடன் கேட்டேன். உனது அபிப்பிராயம் இப்பொழுது தான் எனக்குத் தெளிவாகத் தெரியவந்தது. ஜைமினி ரிஷி கூறிய விஷயமனைத்தும் சத்தியமே. வேதங்களை ஆதாரமாகக்கொண்டு அவர் புகன்ற விஷயங்கள் தவறாகா. அவ்வவ்வதிகாரிகளுக்குத் தக்கவாறு பல் வேறுவகைப்பட்ட உபாயங்களை வேதங்கள் விதித்திருக்கின்றன என்பது உனக்குத் தெரியாதா?

வினா:—வேதங்கள் முமுக்ஷுக்களைக் குறித்து அவ்வுபாயங்களைக் கூறியிருக்கின்றமையின், அதிகாரிகளின் பேதம் இங்குக் கவனித்தல் அநாவசியகமாகும்?

விடை:—உத்தம அதிகாரிக்குப் பிரயோஜனமாகும் உபாயம் அதம அதிகாரிக்குப் பிரயோஜனமாகுமா?

வினா:—ஆகாது; ஆகாவிடினும், சந்தோஷ அடைவு எல்லா அதிகாரிகளுக்கும் பொதுவே யன்றோ?

விடை:—சந்தோஷ அடைவு பொதுவேயாயினும், அவ்வடைவு பல உபாயங்களால் நேரிடும். உபாயம் ஒன்றாயிருத்தல் வேண்டுமெனின், பக்தியோகமென்றும், ஞானயோகமென்றும், கர்மயோகமென்றும், யோகம் மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்டிருப்பது எற்றிற்கு? தேவர்களைக் கிரமப்படி ஆராதித்தால், அவர்கள் மூலமாக நமக்கு வேண்டும் சுகம்கிடைக்கும் என்று எண்ணுகிறவர் பலர் இருந்தபோதிலும், சுகப் பிராப்திக்காகப் பல தேவர்களை என் ஆராதித்தல் வேண்டும்? அவர்களை எதிர்பாராது அதனையடையும் மார்க்கமில்லையா என்று எண்ணும் சாதகர் பலர் உளர் என்பதை மறந்துவிட்டு, இவ்வளவு ஆவேசத்துடன் உன் கட்சியை நிலைநாட்ட முயல்கின்றாய் போலும்! மேலும், தேகம் அநித்தியமா? நித்தியமா? அநித்தியமெனின் அதன்மூலமாக அடையப்படும் சுகமும் அநித்தியமேயாகும்; தேகம் நித்தியமெனின், அது யுக்திக்கும் அனுபவத்துக்கும் முரணும். இஃதன்றியும் சுகம் உனது சித்தாந்தத்தின்படி, தேவர்களுக்கு அடிமைப்படுவதினால் விளைகின்றது. மனிதனது சுபாவத்தை உற்று நோக்கின் அடிமையாயிருத்தல் அவனது மனோரதமாகாது; ஒவ்வொரு மனிதனும் தான் எஜமானனாக இருக்க விரும்புவானே யொழிய அடிமையாயிருக்க விரும்பான். உனது சித்தாந்தத்தின்படி உனக்குச் சுகத்தைத் தரவல்ல தேவர்களும் கடவுளுக்கு அடிமைப்பட்டிருக்கிறார்களென்றால், இவ்வடிமைகள் கொடுக்கக்கூடிய சுகம் பரமாநந்தத்துக்கு எப்படி ஒப்பாகும்? ஆதலின், உனது சித்தாந்தம் மனிதனுடைய நிஜசுபாவத்துக்கு மாறாயிருத்தலின், அது ஒவ்வாததாகும்.

வினா:—உண்மைச் சுகம், உடலின் சம்பந்தத்தை விட்டாலொழிய, உண்டாகாதென்று நீர் சொல்லுகிறீர். உடலின் சம்பந்தத்தை எப்படி ஒழிப்பது?

விடை :—நான் தேகமுமல்லன்; மனமுமல்லன்; இவைகளுக்கு அன்னியன். எல்லா ஆசைகளும் எனது உறுப்புக்களில் தங்கியிருக்கின்றனவே யன்றி என்னிடத்தில் இல்லை. இந்த உடல் போனபிறகும் நான் எஞ்சியிருப்பவன்; ஆதலின், இந்த ஆசைகளிலும் வேறாயிருப்பவனாவன். யாசகன் தன் ஆசைகளையும் குறைவுகளையும் நிரம்பப்பொருந்தி யிருக்கின்றான். யாசகனாக இருக்க எனக்கு இஷ்டமில்லை; யான் யாசகனல்லன்; ஆகையினால், நான் புலன்களை விட்டு அகல்வதும், மனத்தைவிட்டு நீங்கி நிற்பதும், சூட்சும காரணசரீரங்களை அதிக்கிரமித்து ஆநந்த மயனாயிருப்பதும், என்னை எனக்குக் காட்டாமல் மூடிக்கொண்டிருக்கும் பஞ்சகோசங்களுக்கு அப்பாற்பட்டுச் சித்ரூபமாயிருத்தலும் எனது கடமையாயிருத்தல் வேண்டும். நான் எக்கணத்தில் இந்த உபாதிகளை அதிக்கிரமித்துச் செல்லுகின்றேனோ அக்கணமே, எப்படி காய்தோன்றினவுடனே புஷ்பத்தைவிட்டு இதழ்கள் கீழே விழுந்து விடுகின்றனவோ அப்படியே என்னை விட்டு ஆசைகள் அகன்றுவிடும். ஜீவன் தனது நிஜசுபாவத்தால் நித்யன்; பசி அற்றவன்; குற்றங்குறை வில்லாதவனாவான். ஜீவனது நிஜதத்துவம் சச்சிதாநந்தமாமென்று இவ்வாறு சிந்தித்துத் தெளிந்தால், உடலின் சம்பந்தத்தை ஒழித்தல் இயலும். இதுதான் வேதாந்தத்தின் போதனையாகும். இதனை ஸ்வானுபவத்தில் கொண்டுவரல் வேண்டும்.

வினா:—வேதாந்தத்தின் போதனைகள் இவையானால், வேதங்கள் என்ன உபதேசிக்கின்றன ?

விடை:—ஜகத்தைப்பற்றியும், அதனை நிர்வகித்துவரும் எண்ணிறந்த தேவர்களைப் பற்றியும், சுகத்தை இவ்வுலகத்திலேயே யடையும் வண்ணம் ஜீவர் அநாதியாகப் படும் பாட்டைப் பற்றியும் வேதங்கள் சொல்லி முடிக்கின்றன.

வினா:—வேதாந்தம் இவைகளை அங்கீகரிக்கவில்லையா?

விடை:—வேதாந்தம் இவைகளை வியாவகாரிகதசையில் ஒருவாறு அங்கீகரித்திருக்கின்றது; ஆயினும், இவைகளின் மேல் அதற்கு லக்ஷியமில்லை.

வினா:—பின்பு வேதாந்தத்தின் முக்கிய முடிவுதான் என்னை?

விடை:—ஜகம் யாவும் உன்னுள் இருக்கின்றதென்றும், உனக்கு வெளியே ஒரு பொருளும் இல்லையென்றும், கடவுள் உன்னுள்ளே இருக்கிறாரென்றும் வேதாந்த சாஸ்திரம் கூறுகின்றது.

வினா:—அகடிதகடனா சாமர்த்திய முடைய மாயா ரூபமான தேகம், மனம், ஜகம் ஆகிய இவ்வுபாதிகளில் சிறைப்பட்டிருக்கும் நான், என்னுள் இருக்கும் கடவுளை எங்ஙனம் தரிசிப்பது?

விடை:—அவரைத் தரிசிப்பதற்குத்தான் மனிதன் தனக்குத் தெரியாமலே இவ்வளவு கஷ்டப்படுகின்றான். கால தேச வஸ்து பரிச்சேதரகிதமாயும் விபுவாயுமுள்ள ஈசுவரன் தான் எனது நிஜப்பிரபு. அவரைத் தரிசித்த க்ஷணமே உலகங்கள் மறைந்துவிடுகின்றன. நான் அடையப்பிரயத்தனம் செய்யும் பொருள் அவரேயாகும்; அவர் என்னுள் இருக்கிறார்; அவர் எனக்கு என்னைவிட அதிக அருகேயிருக்கின்றார். அவர் என்னுள் இருக்கிறார் என்பதை அறியாது பகிர்முகத்தில் அவரைத் தேடிக்கொண்டிருந்தேன்; பிறகு அவர் என்னுருயிர்க்கு உயிராய் என்னுள் இருக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டு அவரைக் கண்டு களிக்க என்னுள்ளே நான் ஆழ்ந்து ஆழ்ந்து அடிவரைக்கும் முழுகிச் செல்வேனாகை. இவ்வித மார்க்கத்தில் ஈடுபட்டிருக்கும் மனிதனைத் துவைதி என்பர்.

வினு:—இந்த அத்வைதமார்க்கத்தைவிட மோக்ஷமடைய வேறு மார்க்கமுண்டா?

விடை:—ஏகான்ம வாத மார்க்கம் என்று ஒன்றுண்டு.

வினு:—ஏகான்ம வாதம் என்ருல் என்ன?

விடை:—ஏகான்ம வாதம் இன்னதெனக் கூறுமுன் நான்குவித முத்திகளைக் குறித்துச் சொல்லுகிறேன் கேள். சாலோகம், சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்யம் என்று முத்தி நான்கு விதமாகும். பகவான் வசிக்குமிடத்திலேயே வசித்தல் சாலோக முத்தி யெனப்படும்; 'அத்யந்தகுமாரன் அல்லது ஊழியக்காரன்' என்னும் சம்பந்த வாயிலாகப் பந்தமற்ற ஆன்மாவைப் பகவான் தன் சமீபத்தில் சேர்ப்பித்தல் சாமீப்ய முத்தி எனப்படும்; பக்தனுடைய மனமானது தனது நாயகன்மேல் இருக்கும் பிரேமை மிகுதியால் அவனைத் தவிரப் பிறிதொரு பொருளையும் நினையாது பிரேமரசத்தில் முழுகிக்கிடப்பதால், பக்தனுடைய உருவம் நாயகன் (ஈசுவரன்) உருவமாக மாறப்பெறுவது சாரூப்யமுத்தி யெனப்படும்; பக்தனுடைய ஆன்மா பகவானுள் இரண்டறக்கலந்து நீ, நான் என்னும் துவிதபாவனைக்குச் சற்று மிடமில்லாமல் தானேதானு யிருப்பது சாயுஜ்யமுத்தி அல்லது கைவல்ய முக்தி எனப்படும். இந்த முக்திகளில் யாதாவதொன்றைக் கைவரப்பெற்றவன், குறைவற்ற நிறைவைப் பொருந்தினவனுகிருன். முத்தி என்பது குறைவற்ற நிறைவு. ஒவ்வொரு முத்தியும் குறைவற்ற நிறைவாமாதலின், மனிதன் எந்த முத்தியை எய்தியபோதிலும் அதனை விடான். பக்தியினுல் முத்தியை வெகு சுலபமாய் அடையலாம். பக்தனைப் பக்தியானது அவனது நாயகனேடு கூட்டுவிக்கின்றது. பக்தன் தான் இதுகாறும் அடைய விரும்பிய நாயகனைக் கிட்டியதும் அவனுக்குக்கர்த்துருத்வத்தை வகித்தல் அவசிய

மில்லாமல் போகிறது; அவன் செய்யவேண்டிய கிரியை ஒன்றுமில்லாமல் போகின்றது. பக்தன் தனது நாயகனிடத்தில் பரம விச்ராந்தியடைந்து, கிலேசமற்று, உறைகிறான்; அந்த நிலையே எல்லாவித நிலைகளிலும் உயர்ந்ததென உணர்கிறான். வேதாந்த அத்வைத பாஷியம் போதிக்கும் முக்தி இதுவே யாகும்.

ஆத்ம சாக்ஷாத்காரம் அடைவதற்கு ஏகான்ம வாதம் கூறும் மார்க்கமும் சற்றேறக்குறைய இதுபோலவே இருக்கும். ஆசாபாசங்களுக்கு அடிமைப்பட்டிருப்பது தகாது என்று ஏகான்மவாதி அவைகளிடத்தில் விரோத பாவனையோடு இருப்பன். சாத்விகம், இராசதம் தாமதம் ஆகிய முக்குணங்களான கயிற்றால் ஜீவன் கட்டுண்டிருக்கிறான் என்று வேதங்கள் ஓலமிடுகின்றன. ஏகான்மவாதி தனது சுவாதீனத்தை யடைகிறவரையில், பந்தபாசக் கயிறுகளை ஒவ்வொன்றாக அறுத்துக்கொண்டே யிருப்பன். "சுக துக்கங்களென்னும் துவந்துவங்களுக்கும், நான் நீ என்னும் துவந்துவங்களுக்கும் அப்பாலும் நீ செல்வாயாக. நீ மாறுதலில்லாதவன், ஒரு வரையறைக்கு உட்படாதவன், அஃதாவது அநந்தன், குற்றங் குறைவு இல்லாதவனென்று நீ உன்னைத் தெரிந்துகொள்" என்னும் பாடத்தைத் தான் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருச்சுனனுக்கு முதல் முதல் கற்றுக் கொடுத்தார். இவ்விதமாக முமுக்ஷுவானவன் தன்னை அளவுக்கு உட்படுத்தக்கூடியது ஒன்றுமில்லையென்பதைக் கண்டு பிடித்து பிறகு ஆநந்த ரூபமான ஆத்மாவை ஸ்வானுபவத்தில் ஓர்கிறான். ஒரு துளித்தண்ணீர் சமுத்திரத்தில் விழுந்த மாத்திரத்தில் எப்படி அதில் ஐக்கியமாய் மறைந்துவிடுகிறதோ அப்படியே அவனும் பரமாத்மாவில் ஐக்கியமாய் மறைந்து விடுகிறான் என்று சொல்லுதல் அவ்வைக்கியத்

தன்மை இத்தன்மையதென்பதை ஒருவாறு தெரிவிக்கும் உபசாரமொழியே யாகும்.

"நீயற்ற வந்நிலையே நிட்டையதி னியிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலும் நீபோகா யென்றமுளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா."

என்று தாயுமான சுவாமிகள் திருவாய் மலர்ந் தருளியது போல, இரண்டறக்கலந்த அந்நிலையிலே ஆத்மா அழிய வில்லை; பின்னையோ ஜனன மரணங்களுக்குட்பட்டவனாக வும், அஞ்ஞானியாகவும், பலவீனனாகவும் இதுகாறும் மனிதன் தன்னைக் கருதி வந்தமை யொழிய, நான் சாஸ்விதன், எல்லையற்றவன், சர்வஞ்ஞன் என்னும் உணர்வுமபப்பேற்றை அடைகிறான். இந்நிலையில் தனது இருப்பு இன்மையாவ தில்லை. அவன் நான் வரையறைக்கு உட்பட்டவனென்னும் பொய்ச் சொப்பனத்தினின்றும் விழிப்பை அடைகின்றான்; இந்நிலையில் நான் எஞ்ஞான்றும், சர்வஞ்ஞனென்றும், ஆனந்த ரூபனென்றும், தன்னைத் தெரிந்து கொள்கின்றான். இந்நிலை யைப் பிரபத்தி நிலையென்பர். செல்வமின்றி மிடியினால் வருந் திக்கொண்டிருந்தவன் கோடீஸ்வரனாய்விட்டால், தரித்திரனா யிருந்தவன் அழிந்துவிட்டான் என்று கூறலாமா? சிறைச் சாலையிலிருந்து விடுபட்டவன் சுவேச்சையாய்த் திரிகையில் அவனை இறந்தவனெனலாமா? அந்தகாரத்தில் அழுந்தின வன் ஜோதிமுன் உலாவுங்கால் அவனை மரித்தவனென லாமா?

ஆகவே, துவைதமார்க்கத்தில் சுகம் அனுபவித்தலே இலக்ஷியமாகும்; அத்வைத மார்க்கத்தில் விடுதலையே அஃதாவது சுதந்தரமே நோக்கமாகும். முற்கூறிய மார்க் கத்தின் பிரகாரம் பக்தன் தனது நாயகனைச்சேர்ந்து சுக

மடைகிறான்; பிற்கூறிய மார்க்கத்தின் பிரகாரம் அடிமை எஜமானாகிறான். இரண்டு மார்க்கங்களும் ஒன்றுக்கொன்று ஒப்புயர்வில்லா மாட்சிமை யுடையனவேயாம். ஒரு இலக்ஷிய மடைய விரும்பினோன் மற்ற இலக்ஷியத்தை யடைய விரும்பினவ னுடைய மார்க்கத்தை அவலம்பித்தல் அநாவசியகமாம். முதல்மார்க்கத்தின் நோக்கம் சுகானுபவம்; மற்றைய மார்க்கத்தின் நோக்கம் சுவேச்சை; அஃதாவது கட்டுப் படாதிருத்தல். இவ்விரண்டு நோக்கங்களும மாட்சிமை யுடையனவேயாகலின், ஒரு நோக்கத்தை விட்டு மற்றொரு நோக்கங்கொள்வது அநாவசியகமாம்.



"அகங்காரம் அழியும்போது ஜீவனும் இறக்கும்; அப்போது ஸமாதியில் பிரஹ்ம ஞானமுண்டாகின்றது. இந்நிலையில் பிரஹ்மத்தை யநுபவிப்பது பிரஹ்மமேயன்றி ஜீவனல்ல"

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

## 6-வது அத்தியாயம்.

### பக்தி.

வினு:—5-வது அத்தியாயத்தில் ஆத்மாவின் சுபாவம் இன்னதென்றும், அதன் பரிமாணம் இன்னதென்றும், ஆன்மாக்கள் தத்தம் புண்ணிய பாவ கர்மங்களுக்கு இயைய உத்தமோத்தம உலகங்ளில் ஜனிக்கின்றார்களென்றும், அவர்கள் தேவர்களை உபாசித்துச் சகல சுகங்களையு மடையலாமென்று ஜைமினிமுனிவர் கூறியிருந்தபோதிலும் அத்தேவர்களுக்கு அடிமைப்பட்டிருப்பதை அருவருக்கும் புருடர் உளரென்றும், கடவுளைச் சாக்ஷாத்கரிப்பதற்கு துவைத மார்க்க மென்றும் ஏகான்மவாத மார்க்க மென்றும் இரண்டு மார்க்கங்களுண்டென்றும், இவ்விரண்டு மார்க்கங்களில் முற்கூறிய மார்க்கத்திற் செல்வோர் கடவுளைத் தமது நாயகனாகப் பாவித்துச் சாக்ஷாத்கரிக்கின்றனரென்றும், பிற்கூறிய மார்கத்தைக் கடைப்பிடிப்போர் தானே தானான நிலையில் கடவுளைச்சாக்ஷாத்கரிக்கின்றனரென்றும், சாலோக-சாமீப்ய - சாரூப்ய-சாயுஜ்ய பதவிகளை விவரித்துக்கூறி ஒவ்வொன்றும் ஒரே அனுபவத்தைத்தான் தருகின்றதென்றும், அத்வைத மார்க்கத்தால் அஃதாவது ஏகான்மவாத மார்க்கத்தால் ஒருவன் பந்தத்தினின்றும் விடுதலை அடைகின்றானென்றும், பக்திமார்க்கத்தால் ஒருவன் தனது தலைவனை யடைகின்றானென்றும், இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு அற்றனவென்றும் கூறினீர். அத்வைத மார்க்கத்தில் முமுக்ஷு வானவன் தனது நிஜஸ்வரூபம் சச்சிதாநந்தமென்பதை நிச்சயித்து, அதனைச் சுவானுபவத்தில்கொண்டுவந்து துவந்துவங்களினின்றும் விடுபட்டு, காலதேச வஸ்து பரிச்சேதரகிதமான குறைவற்ற நிறைவாய் விளங்க முயலல்

வேண்டுமென்று பல இடங்களில் ஐயந்திரிபறக் கூறியிருக்கின்றீர். இப்போது பக்தியின் சொரூபத்தை விளங்க உரைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

விடை:—பக்தி என்பது எல்லாருக்குந் தெரிந்ததாயிற்றே; அதுபற்றி என்ன சந்தேகம் உனக்கு உளது? அதனைத் தெரிவிப்பாயானால், பின்னர் அதன் இலக்ஷணத்தைக் கூறுவாம்.

வினா:—அத்வைதவாதிகளும் பக்தர்களும் எந்தக் காரணத்தால் மோக்ஷத்தையடைய நாடுகின்றனர்?

விடை:—பயத்தினால்.

வினா:—இப்பயத்தை எப்படி விலக்குகின்றனர்?

விடை:—பயம் அவித்தையால் உண்டாயிற்றென்று மதித்தலால், அப்பயத்தின் இருக்கையை அறியாதிருக்க முயல்கின்றான் அத்வைதவாதி; பக்தனோ பயத்தின் இருக்கையை அங்கிகரித்து, சர்வ வல்லமையுள்ள ஈஸ்வரனுடைய உதவியால் அதினின்றும் விடுதலையடைய விரும்புகிறான்.

வினா:—இவ்விரு உபாயங்களில் எது சுலபம்?

விடை:—பக்தனுடைய மார்க்கம் சுலபம் என்று சொல்லலாம்.

வினா:—எப்படி சுலபம்?

விடை:—நித்யாநித்ய வஸ்து விசாரணை வாயிலாக அத்வைதி மோக்ஷத்தை அடைய விரும்புகிறான்; மனைவிமக்கள் மீதிருக்கும் ஆசையை வேரறச்செய்து விஷயங்களிற் செல்லும் மனதை நசிக்கச்செய்வதே அவனது பிரயத்தனமாகும். பக்தன் மனதை நசிக்கச் செய்ய முயலுவதில்லை

விஷயங்களிற் செல்லும் அன்பைக் கடவுளிடத்தில் திருப்ப முயலுகிறான்; ஆகையினால், பக்தனது மார்க்கம் சுலபமென்பது ஏற்படுகின்றது.

வினா:—வேதாந்தி இதுகாறும் பகிர்முகத்திற் சென்று கொண்டிருந்த மனதை உள்முகப் படுத்தும் முயற்சியில் ஈடுபடுகின்றவனாகின்றான்; ஆகவே, இவனுந்தான் தனது அன்பை உள்ளே திருப்புகின்றான். பக்தி மார்க்கம் சுலபமென்பது எனக்கு இன்னும் தெளிவாக விளங்கவில்லை.

விடை:—வேதாந்தியின் மார்க்கம் "இது அல்ல, இது அல்ல" என்று நேதி செய்வதாம். சற்கற்பம் எழவொட்டாமல் செய்வது அவனது பிரயத்தனமாயின், சங்கற்பத்தின் பின் தோன்றும் அன்புக்கு அவனது தத்துவ சாஸ்திரத்தில் எங்ஙனம் இடமிருத்தல் கூடும்? மானிடர்களுள் பெரும்பான்மையோர் ஏதாவது ஒரு பொருளின் மேல் அன்பு செலுத்துகின்றவரா யிருக்கின்றனர். நசிக்கும் பொருளின்மேல் செல்லும் இவரது அன்பை, நசியாப் பொருளாகிய ஈஸ்வரன்பால் திருப்புவது சுலபமா? அல்லது அவ்வன்பையும் அவ்வன்புக்கு இருப்பிடமான சங்கற்பத்தையும் எங்குமில்லாமல் நசிக்கச்செய்வது சுலபமா? நீயே கூறாய்.

வினா:-பக்திமார்க்கம் சுலபமென்பது இப்பொழுது என் மனதில் நன்றாய்ப்பதிந்தது. பக்தியில் அடங்கியுள்ள தத்துவ ஞானத்தை அறிய விரும்புகிறேன்; அதைக் கூறல் வேண்டும்.

விடை:—பக்தியைப் பற்றிய தத்துவ ஞானம் மிகத் தெளிவானது; அதனைத் தெரிந்து கொள்வது கஷ்டமல்ல. இப்பூமண்டலத்தில் வாழும் ஜனங்களுள் பெரும்பான்மையோருடைய அனுபவத்தைப் பார்த்தல்வேண்டும்; அதனால்,

சுகமும் துக்கமும் ஒன்றன்பின் ஒன்ருய் ஓயாமல் வந்து சாமான்யர்களைச் சில காலம் சுகத்திலும் சிலகாலம் துக்கத்திலும் ஆழ்த்துகின்றனவென்பது தெரியும். இவைகளை மாற்றுவதற்கு மனிதனுக்குச் சாத்தியமாவதில்லை. தரித்திரத்தைவிடக் கொடியது ஒன்றுமில்லை; இதனை எவன்தான் விரும்புவான்? அதனைத் தடுக்க எவன்தான் முயலான்? அப்படி இருந்தும், மக்களிடத்துத் தரித்திரம் குடிகொண்டிருக்கின்றது. ஜராமரணத்தைத் துவேஷிக்காதவன் எவன்? அப்படியிருந்தும், இவை மனிதர்களைப் பின்தொடர்ந்து கொண்டேயிருக்கின்றன. இவைபோன்ற தடுத்தல் முடியாத சம்பவங்களால், "ஒன்றும் நம் செயலல்ல" என்று மனிதன் நிர்மானிக்கிருன். மனிதன் தன்னைப் பலவீனனுக மதித்திருக்கின்ருன்; அதனுல், சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவர் உளர் என்றும், அவரது கிருபையாலன்றித் துக்க நிவிர்த்திபெறுதல் அசாத்தியமென்றும், நம்பவேண்டியவனுயிருக்கின்ருன்; அதனுல், சர்வ வல்லமையும் காருண்ய மூர்த்தியுமாகிய ஈச்வரனைச் சரணமடைகிருன். இதைத்தான் பக்தியில் அடங்கிய தத்துவஞான மென்பர்.

வினு:—"புத்தியுள்ளவனே பலவான்" என்னும் முதுமொழியை நீர் மறந்துவிட்டீர் போலும்! "நிமல ஞான முற்ருல் வானும் வையமும் வந்துதாள் வணங்கும்" என்று ஆன்ருேர் கூறியிருத்தலின், ஞானத்தையடைய முயற்சி செய்தல்வேண்டும். ஞானத்தைப் பெற்ருல், பரிதிமுன் பனிபோலப் பலவீனமானது சுவடின்றி விட்டகலும். கல்வி ஞானம் விருத்தியடைய, அதனுல் அநேக கஷ்டங்கள் நீங்கி வரவில்லையா? இருப்புப்பாதை வண்டியும் மின்சாரக் கம்பியும், முறையே போக்கு வரவுக்கு இருந்த கஷ்டங்களையும், வெகுதூரத்தி லிருப்பவருடன் வியவகாரம் நடத்த இயலாம

லிருந்த இடையூறுகளையும் நீக்கிச் சுகத்தை விளைவித்திருப்பது உமக்குத் தெரிந்த விஷயமே. அதனால், ஞானம் குற்றங் குறைவுகளையும் பலவீனத்தையும் நீக்க வல்லதென்பது பெறப்படுகிறதன்றோ? இத்தகைய ஞானத்தைப்பெற முயற்சி செய்யாமல் கடவுளைச் சரணமடைந்து வாளா சோம்பித் திரிதல் நலமாமோ? எல்லாம் வல்ல கடவுள் வழி காட்டுவாரே யன்றி, ஊட்டுவாரா?

விடை:—ஞானமுற்றால், பலவீனம் தானே நம்மை விட்டகலுமென்று நீ கூறினாய். நீ குறிப்பிடும் ஞானம் ஆத்ம ஞானமா? விஷயஞானமா?

வின:—ஆத்ம ஞானமென்பதைச் சாஸ்திரம் சொல்லக் கேட்டிருக்கின்றேனே யொழிய, என்னுடைய ஸ்வானுபவத்தில் பெற்றறியேன்; அவ்வாறு பெற்றவரையும் இதுகாறும் கண்டிலன். ஆகையினால், நான் குறிப்பிட்டுரைத்தது விஷயஞானத்தையேயாம்.

விடை:—விஷய ஞானம் ஒரு விஷயத்தைப் பற்றிப் பூரண அறிவைத் தரத்தக்கதன்று; ஏனெனின், இந்திரியங்கள் பகிர்முகத்திலுள்ள பொருள்களுடன் சையோகமாகும்போது உண்டாகும் ஞானத்துக்கு விஷயஞானம் என்று பெயராம். இந்திரியங்களோ வரைபறைக்குட்பட்டன; ஆதலின், விஷயஞானம் வரையறைக்கு உட்பட்டதேயாகும்.

"ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன் மீதிலே
யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்த பேரு
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்த பேரு
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவ ரெல்லாம்"

என்று தாயுமானவர் கூறுவதால் மனிதனுடைய ஆசைக்கு அளவில்லை யென்பதைத் தெரிந்துகொள்ளுகிறோம். மனிதன் சர்வ வல்லமை வேண்டுமென்று விரும்புகிறான்; ஆனால், அவனது காரசாணுதிகள் வரையறைக்குட் பட்டவையாதலின், அவனது அபிஷ்டம் நிறைவேறுவதில்லை. இவனது எண்ணத்தைப் பூர்த்தி செய்வதற்கு இப்பூவுலகத்தில் ஒருவரும் இல்லை; ஆதலின், நினைனை மனிதன் சர்வ வல்லமையுள்ள [illegible]வுள் ஒருவர் உளர் என்பதை நூல்களின் வாயிலாக வாகி[illegible], அல்லது பெரியோர்கள் வாயிலாகவாகிலும் தெரிந்து கொண்டவுடனே அவரே நமக்கு வேண்டிய துணைபுரியக் கூடியவரென்று அவரைச் சரணமடைகிறான்.

வினா:—விஷயஞானம் எல்லைபற்ற சுகத்தைத்தாராது; அத்தகைய சுகத்தை நாடுவதே மனிதனது சுபாவமாக இருக்கின்றது. ஆகையால்தான், கடவுளைச் சரணடைதல் வேண்டுமென்று கூறினீர். கடவுளை எப்படி அடைவது?

விடை:—தனு - கரண - புவன-போகங்களைக் கடந்து சென்றால் அவரை அடையலாம்; ஏனெனின், சாதாரண மனிதன் இவைகளுடன் தாதான்மியப் பட்டிருத்தலால், சிருஷ்டி மாத்திரம் அவன் கண்ணுக்குத் தோன்றிக் கொண்டிருக்கின்றது. மேலும், அவன் நாமரூபமாகிய கல்லோலத்தில் அகப்பட்டுக் கொண்டிருத்தலால், ஸ்வரூபஞானத்தை இழந்திருக்கிறான்; அவனுக்குக் கடவுள் தோன்றுவதில்லை. ஆகையினால், பக்தன் கடவுள் மீது தனது முழுஅன்பையும் கபடமின்றிச் செலுத்தல் வேண்டும்; அப்பொழுதுதான் அவரை அடைதல் முடியும்.

வினா:—ஈஸ்வரன் சர்வ வல்லமையுள்ளவர்; பரம காருண்ய புருஷர்; நமது குற்றங் குறைவுகளை நீக்கி நம்மை இரக்ஷிக்க வல்லவர்; ஆகையினால், இவரை நாம் வழிபடல் வேண்டுமென்றல்லவா நீர் கூறுகின்றீர்?

விடை:—ஆம்.

வினா:—ஒரு கோடீஸ்வரனை எடுத்துக் கொள்வோம்; அவனைச்சுற்றியுள்ள பந்து மித்திரர் முதலானவர் அவனிடம் மிக அன்புபாராட்டிக் கொண்டு சுகமாய் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் கொண்டுள்ள அன்பு அக்கோடீஸ்வரன் நிமித்தமா? அல்லது அவனால் தாங்கள் அடையும் பிரயோஜனத்தின் நிமித்தமா? அக்கோடீஸ்வரன் ஏதோ ஒரு காரணத்தால் தன் பொருளை இழந்து வறியவனாக ஆய் விட்டால், இவனைச் சூழ்ந்திருந்த உறவின்முறையார் நண்பர் முதலாயினோர் அவனிடம் அன்பு பாராட்டுவதை ஒழியாதிருப்பரோ? நாம் இராஜனிடத்திலாவது அல்லது அவனது அபிமானத்தைப் பெற்றவரிடத்திலாவது செலுத்தும் அன்பை ஆராய்ச்சி செய்து பார்க்கின், இவரது நட்பால் விளையும் பயனுக்காக அவரிடத்து நம்மால் அன்பு செலுத்தப் பட்ட தென்பது நன்கு விளங்கும். இராஜன் தன் ஊரை இழந்து விட்டாலும், அவனது அபிமானத்தைப் பெற்றவன் அந்த அபிமானத்தை இழந்து விட்டாலும், இவர்பால் அன்பு செலுத்திக் கொண்டிருந்தவர் மெல்ல மெல்ல அவரைவிட்டு விலகி விடுவரன்றோ! இவ்வித அன்பு உண்மை அன்பாகுமா? தாய்க்குக் குழந்தைமே லிருக்கும் அன்பை யொக்குமா? கடவுளிடம் பக்தன் செலுத்தும் அன்பு, அஃது ஒரு பிரயோஜனார்த்தமா யிருத்தலின், அதனைச் சிலாகித் துரைப்பது எங்ஙனம்?

விடை:—பிரயோஜனத்திற்காகக் கொள்ளும் அன்பு உண்மை அன்பு ஆகாது. அன்புக்குரிய பொருள் எத்தகைய நிலையிலிருப்பினும், அதனிடம் இருக்கும் அன்பு மாறுதலடைதல் கூடாது. ஸ்ரீ இராமச்சந்திரரை அவரது தந்தையார் வனவாசத்துக்கு அனுப்பியபோது சீதா பிராட்டியார்க்குத் தமது கணவன்மீது வைத்திருந்த அன்பு மாறினதில்லை; ஆனால், ஆயிரமடங்கு அதிகரித்ததல்லவா ?

வினா:—கடவுளது சர்வ வல்லமை, சர்வ காருண்யம் முதலிய குணங்களால் நமக்கு வரும் பலனை விரும்பாது கடவுளை நாம் எப்படி வழிபடுவது ?

விடை:—"நான் பதிதன், பலவீனன், துக்கசாகரத்தில் அழுந்தியிருப்பவன் ; என்னை நான் நடத்திக் கொள்ள வகை தெரியாது தவிக்கின்றேன். நீர் சர்வவல்லமை யுள்ளவராதலால், எனக்கு நீர் வழிகாட்டுவீரென்று உம்மைச் சரணமடைகிறேன்" என்று இம்மாதிரியாக விம்மிக் கதறிக் கடவுளை வழிபடவும், சிந்திக்கவும், அவர் நாமத்தை உச்சரிக்கவும் வேண்டுமெனப் பெரியோர்கள் வழிபடும் விதத்தை நமக்குப் போதித்திருக்கின்றனர்.

வினா:—எல்லாம் தரத்தக்க கடவுள் சர்வ வியாபியென்பதைப் பிறர் சொல்லக் கேட்டுள்ளோம்; அத்தகைய கடவுளை எப்படி சிந்திப்பது? மனத்தாலன்றி எந்தச் சிந்தனையும் நிகழாதன்றோ? மனமோ வரம்புடையது; சர்வ வியாபகமுள்ளதன்று. இத்தன்மையான மனத்தால் சர்வ வியாபியைச் சிந்தித்தல் அசாத்தியமாகுமே ?

விடை:—நிராகாரமாயும் விபுவாயுமுள்ள கடவுள் ஆகாரத்தை வகித்துப் பக்தர்களுக்குக் காட்சி தந்தருளியிருக்கின்றார். ஆகையினால், நிராகாரத்துவமும் விபுத்துவமும், கடவு

ளுடைபசுபாவ வடிவமாயிருக்க, அவர் இவைகளைவிட்டு ஆகா ரத்தை வகித்துப் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுப்பது அவ ரது சௌலப்யத்தைக்காட்டுகின்றது. கடவுள் தமது உன்னத நிலையிலிருந்து நழுவிச் சாதாரண மானிடரைப்போல "ஊண் உறக்கம் பேருராதி" இவைகளையுடையோராய்ப் பக்தர்களுக் குக் காட்சி கொடுக்க இசைந்திருக்கின்றாரெனின், அவரு டைய பிரதாபமும் மாட்சிமையும் ஊகிக்கற் பாலனவே யன்றி உரைக்கற் பாலனவன்றாம். மானிடர்களின் உஜ்ஜீவ னார்த்தம் அவர்களுக்கு ஆகாரத்தோடு காட்சிகொடுக்க இரக் கங் கொண்ட ஈஸ்வரனது சௌலப்பிய குணங்களை நோக்குங் கால், அவருடைய பிரதாபம் சூரியனிலும் ஆயிரமடங்கு ஒளி வீசி நிற்கின்றது என்று ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் எங் களுக்குப் போதித்திருக்கின்றனர். மானிடராக அவதரித்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, பகவத்கீதையில் என்ன சொல்லு கின்றார்:-"யார் எல்லா வெண்ணங்களையும் விட்டு என்னையே சிந்தித்து, என்னையே ஆராதித்து வருகின்றாரோ அவர் களை நான் இரக்ஷித்து அவர்களுக்கு வேண்டிய வற்றையெல்லாம் ஏற்பாடு செய்கின்றேன். ஸ்திரிகளும், வியாபாரிகளும், தொழிலாளர்களும், இவர்கள் போ ன்று உலக விஷயத்தில் அழுத்தமுள்ள பாமரர்களும் என்னை அடைக்கலமாக அடைவார்களே யானல், அவர்க ளும் மோக்ஷமெய்துவர். ஒருவன் கடையான லோகபோகங் களில் மனச்சார்புடையவனாயினும், எல்லாவற்றையும் தியாகஞ்செய்து என்னையே முழுமனதுடன் ஆராதிப்பா னானல், அவனைப் பரிசுத்தமான மனிதனென மதித்தல் வேண்டும். அன்னோனது கர்மப் பிரவிர்த்தி முற்றும் கிரமமாக இருக்கும்; இத்தகைய மனிதன் வெகு சீக்கிரத் தில் பாரமார்த்திக ஞானத்தை யடைந்து சாஸ்வதமான

சாந்த நிலையையும் எய்துவான். ஆகையினால், ஓ! குந்தி புத்திரனே! என்பக்தனுக்கு எவ்விதத்திலும் யாதாவதொரு இடையூறும் நேரிடாது என்று பறைசாற்று'' என்று இவ்வாறாகப் புகன்றிருக்கிறார். இங்ஙனம் ஈஸ்வரன் உணர்தற்கரிய தமது சர்வ வியாபக சர்வ வல்லமையான ஸ்வ ரூபத்தை விட்டு இழிந்து, பக்தர்கள் உணர்ந்து குறுணுபவம் செய்யக் கூடிய திருமேனியைத் தமது காருண்யப்பெருக்கத்தால் கொண்டிருப்பதால், அவரைச் சிந்திப்பதற்கு என்னகஷ்டம் இருத்தல் கூடும்?

வினு:—நீர் எல்லா எண்ணங்களையும் விட்டுக் கடவுளைச் சிந்திக்க வேண்டுமென்று சொல்லுகின்றீர். இதன் பொருளை எனக்கு ஐயந்திரிபறச் சாற்றல் வேண்டும்.

விடை:—கணித சாஸ்திரம் கற்பானொருவன் தன் மனதுக்குச் சுலபமாய் எட்டாத ஒரு இலக்கத்தைத் தெரிந்துகொள்ள அத்தியந்தம் முயலுங்கால், அவன் மனதானது எப்படி ஏகாக்கிரமடையுமோ, மரண சமயத்தில் கிடக்கும் குழந்தையின்மீது தாயின் கவனம் எப்படி வேறு கவலைகளுக்கு இடங்கொடாமல் ஓரே நிலையில் இருக்குமோ, ஒரு காமுகன் தனது பிரிய நாயகியைக் காண எப்படி ஒருணர்வாகி யிருப்பானே, ஸ்ரீகிருஷ்ணனைப் பிரிந்த ராதையானவள் மீண்டும் அவனைக் காண எப்படி ஒரு சிந்தையாயிருந்தாளோ, அப்படி ஒருவன் தனது அன்பைக் கடவுள் மீது செலுத்தல்வேண்டும். ''எவன் சில பத்ரங்களையாவது சில புஷ்பங்களையாவது கொஞ்சம் ஜலத்தையாவது பூரண அன்பு வாய்ந்த மனதுடன் எனக்குச் சமர்ப்பிக்கின்றானே அவனால் சமர்ப்பிக்கப்பட்டதை நான் அங்கீகரிக்கிறேன்'' என்று பகவான் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்

றார்; அதனால், பூரண அன்புள்ள மனதுடன் யாதொன்றை யும் கடவுளுக்கு அர்ப்பித்தலே அவரைச் சிந்தித்தலுக்கு இன்றியமையாத ஹேதுவாமென்பதைக் கவனத்தில் கொள்ளல்வேண்டும்.

வினா:—யாதாவதொரு பொருளைப் பகவானுக்கு அர்ப்பித்து அவரை வழிபடல் வேண்டுமென்று கூறினீர். பகவானுக்குச் சொந்தமில்லாத பொருள் இவ்வுலகத்தில் எதுவுமில்லை. அவர்க்குச் சொந்தமான பொருளை அவர்க்கு அர்ப்பித்தல் வேண்டுமென்று கூறுவது நகைப்புக்கு இடமாக இருக்கின்றது. பத்ரம், புஷ்பம், சந்தனம், நமது ஆன்மா, சராசரங்கள் ஆகிய இவையாவும் கடவுளாதீனமா யிருக்கின்றன. இவைகளை நாம் ஈஸ்வரனுக்குச் சமர்ப்பித்தல் வேண்டு மென்பதும், இவைகளை அவர் அங்கிகரிக்கின்றா ரென்பதும் அநுசிதமாகத் தோன்றுகின்றன.

விடை:—நாம் மேற்கூறிய விஷயத்தை நீ நன்றாய்க் கவனித்துத் திருத்தமாக உணரவில்லை போலும்! பத்ர புஷ்பாதிகள் கடவுள் ஆதீனமேயாயினும், அவைகளை முழுஅன்புடன் பக்தன் அவர்க்கு அர்ப்பித்தல் வேண்டு மென்னும் நிபந்தனையை நீ மறந்துவிட்டாய் போலும்!

வினா:—நாமே அவரது சொத்தானால், நமது அன்பு அவர் சொத்தாகாதோ ?

விடை:-அன்பு ஈஸ்வரனுடைய சொத்தாகாது. மனைவி மக்கள் மீதும் ஏனைய உலகப் பொருள்களின் மீதும் அன்பைச் செலுத்தும் ஆற்றல் எனக்குண்டு; அதனைக் காம இச்சையிலும் பேராசையிலும் இழியச்செய்யவும் எனக்கு ஆற்றலுண்டு; ஆகவே, அன்பானது முற்றும் எனது சொத்தேயாகும்; எனது ஆதீனத்திலே யுள்ளது. இவ்வன்பு பகவானு

டையதன்று; ஆதலாற்றான், "அன்போடும் பக்தியோடும் தரும் நைவேத்தியத்தை நான் அங்கிகரிக்கின்றேன்" என்று கீதையில் பகவான் திருவாய்மலர்ந்தருளினர்.

வினு:—பக்தர்கள் உய்யும்வண்ணம் ஈச்வரன் மனிதரைப்போல உருவங்கொண்டு அவர்களில் ஒருவராகத் தம்மைக் காண்பித்துப் பக்தர்களுடைய பல அபீஷ்டங்களை நிறைவேற்றி யிருக்கிறு ரென்றும், பக்தர்களுடைய அன்பே ஈச்வரனை உருத் தரிக்கும்படி செய்விக்கின்றதென்றும் நீர் சொல்லுகிறீர். ஆனல், மனிதன் தனக்குப் புலப்படாத ஈச்வரன்மீது தனது பக்தியை எப்படி செலுத்த மாட்டுவன்? அஃது அவனுல் கிரகிக்கப்படும் விஷயமாகவுமில்லை; அவனுல் அதுசெய்யவும் முடியாது. ஆகையினுல், பக்தியின் தத்துவ ஞானம் புத்திக்கு எட்டாத விஷயமாக இருக்கிறது. அதனைச் சுலபம் என்று நீர் எப்படி சொல்லுகிறீரோ? அது தெரிய வில்லை.

விடை:—பிரஹலாதன், துருவன் ஆகிய இச்சிறு குழந்தைகள் பக்தியின் தத்துவ ஞானத்தை உணர்ந்து ஈச்வரனைச் சாக்ஷாத்கரித்தனரெனின், அந்தத் தத்துவ ஞானத்தை எளிதெனக் கூறுவது பொருத்தமாமன்றோ? குழந்தைகளுக்குக் கைவந்ததைப் புத்திக்கு எட்டாத விஷயமென்று நீ கூறுவது பொருந்தாது.

வினு:—பிரஹலாதன், துருவன் ஆகிய இவர்களுடைய பக்தியைப் பற்றிப் புராணங்கள் கூறுகின்றன. புராண கதைகளை உண்மையென எப்படி நம்புவது?

விடை:—சரி; அஃது அப்படியே யிருக்கட்டும். புராணங்கள் கூறும் கதைகள் ஓர் அரிய விஷயத்தைப் போதிக்கின்றன என்பதை ஒத்துக்கொள்ளல் வேண்டும். பிரஹலா

தன், துருவன் இவர்கள் வாஸ்தவத்தில் ஜீவித்திருந்தனரோ? இல்லையோ? என்று நீ சங்கித்தல் கூடும். ஆனால், புராணங்கள் அவர்கள் சரித்திரமூலமாக நமக்குத் தெரிவிக்கும் விஷயம் நம்மால் அனுஷ்டிக்கப்பட்டு அனுபவிக்கப்படலாம் என்பதற்குச் சங்கை இருத்தல் கூடாது. பிரஹலாதன், துருவன் ஆகிய இவர்கள் குழந்தைப் பருவத்திலேயே அதிக பரிசுத்த மனதுடையவர்களாக விருந்துவந்தனர்; உலக வாசனை சற்றேனும் தங்கள் மனதில் வந்து அணுகாவண்ணம் உண்மையிலேயே விழிப்புடையவராயிருந்தனர். கடவுள் உருவமுடையவரா? உருவமில்லாதவரா? அவரை மனதால் கிரகித்தல் முடியுமா? முடியாதா? அவர் சர்வ வல்லமை பொருந்திக் குற்றங் குறைவற்றவராய்த் திகழ்கின்றனரா? என்னும் இவை முதலிய விஷயங்களைப் பற்றி ஆலோசனை செய்து அந்த இரண்டு சிறுவர்களும் எள்ளளவும் தங்களைத் தொந்தரவு செய்துகொள்ளவில்லை. அவர்களுக்கு உண்மையிலிருந்த விழிப்பினாலும், தீவிரப் பிரேமையினாலும் நிராகாரமாகவும் சர்வ வியாபகமாகவும் உள்ள ஈஸ்வரன், ஆகாரமுடையவராய், ஓரிடத்தில் இவர்களுக்குத் தம்மைக் காட்டி அனுக்கிரகம் செய்தனர். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் அடியிற் கூறும் திருஷ்டாந்தத்தைச் சொல்வது வழக்கம்:—“தண்ணீருக்குத் தனக்கென ஓர் உருவம் கிடையாது; அதனை எந்தப் பாத்திரத்தில் வைக்கிறோமோ அந்த உருவத்தை அஃது அடைகின்றது; ஆனால், அத்தியந்த குளிர்ச்சியினால் அது சிலவேளை கனஜலகம்பி, நீர்க்கட்டி முதலிய உருவமாகத் திரிபடைகிறது. அதுபோலவே நாமரூபரகித கடவுளும் தமது பக்தர்களின் பிரேமையினால் உருவத்தை வகிக்கிறார். ஈஸ்வரன் சர்வ வல்லமையுடையவராகையால் உருவமோடுமிருத்தல்கூடும், உருவமில்லாமலும்

இருத்தல் கூடும்." "எப்படி எப்படி என்னையடைய விரும்பு கின்றனரோ அப்படி அப்படி என் பக்தர்களின் இச்சையை நிறைவேற்றுகிறேன் ; என்னால் ஏற்படுத்தப்பட்ட பாதை களிலே தான் எல்லா ஜனங்களும் நடந்து கொண்டே யிருக் கின்றனர்" என்று பகவான் கீதையில் திருவாய் மலர்ந் தருளியிருக்கின்றனர்.

வினா:—பக்தர்களுக்காக ஈஸ்வரன் என்ன வேண்டு மென்றாலும் செய்வாரோ? தமது ஆணையையும் சொல்லையும் கடந்து நடப்பாரோ?

விடை:—அவர் சர்வ வல்லமை யுடையவரும் கிருபா மூர்த்தியுமாகையால், தம்மைச் சரணமடைந்த பக்தர்களின் நிமித்தம் எதையும் பரித்தியாகஞ் செய்யும் மனமுள்ளவர்; பக்தனுடைய வாக்குப் பிறழாவாறு சில சமயங்களில் தமது பிரதிக்கினைக்கு மாறாகவும் நடப்பர்; அதனால் தமக்கு இழிவு வருமென்பதைக் கவனியாது, பக்தனுக்கு அவமானம் நேரிடாதபடி அவனைக் காப்பாற்றுவர்.

வினா:—இதற்குத் திருஷ்டாந்தங்கள் உளவோ ?

விடை:—பல உள.

வினா:—ஒன்று கூறும் பார்ப்போம்.

விடை:—ஸ்ரீகிருஷ்ண பகவான் மஹாபாரத யுத்தத் திலே ஆயுதம் எடுப்பதில்லையென்று பிரதிக்கினை செய் திருந்தனர்; அதற்கிணங்கப் பாண்டவர்களுக்குச் சமயோ சித புத்திகளைக் கூறி அவர்களுக்கு உதவி புரிந்து அர்ச்சுன னுக்குச் சாரதித்தொழில் செய்தும் வந்தனர்; யுத்தகளத்தில் நிகழ்ந்துவரும் சம்பவங்களைக் கவனித்து அவைகளுக்குத் தக்கவாறு பாண்டவர்களை நடக்கும் படியும் செய்து வந்தார். ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய கபடமான சூழ்ச்சியால் ஒரு

நாள் சில ரகசியமான விஷயங்களைப் பீஷ்மர் அர்ச்சுனனுக்கு வெளியிட வேண்டியவரானார்; அதனால் அவர் மனம் பொங்கி "இந்தக்கிருஷ்ணனை நாளைக்கு எப்படியாயினும் ஆயுதம் எடுக்கும்படி செய்கிறேன்" என்று தீர்க்க பிரதிக்கினை செய்தார். மறுநாள் சண்டை வெகு மும்முரமாய் நடந்தது. பீஷ்மர் மிகுந்த கோபாவேசத்துடன் பாண்டவர்கள் சேனையைச் சின்னாபின்னமாக்கி, அர்ச்சுனனுடைய உடலைப் பல பாணங்களினால் தொளைசெய்தனர். உதிரப் பெருக்கால் அருச்சுனன் தளர்வடையலாயினன். ஸ்ரீகிருஷ்ண பகவான் வீரர்களுக்கெல்லாம் வீரரான பீஷ்மரால் இவ்வாறு தமது தோழன் பீடிக்கப்பட்டதைக் காணச் சகியாமல் "ஓ கங்காபுத்திரனே ! சிறு பிள்ளைகளுடன் இவ்வளவு கொடூரமாகவா யுத்தஞ் செய்வது? நீ எவ்வளவு கொடியவனாயிருக்கிறாய்! இப்பொழுது உன்னையும் உனது சைன்யம்முழுவதையும் ஒரு நொடியில் அழித்துவிடுகிறேன். எப்படிப்பட்டவரும் தடுத்தல் முடியாத எனது பராக்கிரமத்தைப் பார்'! என்று கடிந்துரைத்துக்கொண்டே தேரினின்றுங் குதித்து அங்கு விழுந்துகிடந்த ஒரு சக்கரத்தைக் கையிற் றூங்கி, பீஷ்மரைக் கொல்ல அவரெதிரே ஓடினார். இதைக்கண்ட கௌரவ சேனாதிபதியாகிய பீஷ்மர் தமது வில்லைப் பய பக்தியுடன் எறிந்துவிட்டு அஞ்சலியஸ்தராய் "ஓ நாதனே! இவ்வளவு அரிய வரத்தைப் பெறுவதற்குத் தங்கள் ஊழியன் சர்வகாலமும் சித்தமாய் இருக்கின்றான் ! வாரும் ! வாரும்! இந்த உடலோடு உயிர் உம்முடையதே; உம்முடையதேயன்றி வேறொருவருடையதுமன்று; இதனை அழித்துவிடும். நீர் கொடுத்ததை நீரே எடுத்துக்கொள்ளும்; ஏனெனின், எனது என்பது ஒன்றுமில்லை; எல்லாம் உம்முடையனவே" என்று சொல்லிக்கொண்டே நரைமயி

ருற்ற தமது சிரசை நீட்டி வளைத்துக்காட்டினர். இச்சொற்களைக் கேட்டதும் கிருஷ்ண பகவானுக்கு "ஆயுதம் எடுக்கேன்" என்று கொடுத்த வாக்குத்தத்தம் கவனத்துக்கு வந்தது; உடனே அவர் தமது இருப்பிடத்திற்கு வெட்கித் திரும்பிவிட்டார்.

வினு:—ஆஹா! ஆஹா! பகவானுடைய செளலப்பிய குணம் மிகவும் வியக்கத்தக்கதே! அருச்சுனன் தமது தோழன் என்னும் அபிமானத்தாலன்றோ ஸ்ரீ கிருஷ்ண பகவான் தமது கட்டுரையையும் மறக்கலாயினர்! ஆகையினுல் பரமாத்மாவோடு தோழன் என்னும் சம்பந்தத்தைத் தேடிக்கொள்ளல் வேண்டுமோ?

விடை:—நாம் நம்முடைய உலக வாழ்க்கையில் நம்மினும் உயர்ந்த அந்தஸ்திலுள்ளவருடைய நட்பை விரும்பும்பொழுது அவருக்கு நம் விஷயத்தில் அன்புண்டாகுமாறு, அவரைப் பிரீதி செய்யவல்ல பல பணிவிடைகளையும் அவர் குறிப்பறிந்து செய்து வரவில்லையா? அப்படிச் செய்யாவிடில், நாம் அவரிடமிருந்து அடைய விரும்பும்பொருள் நமக்குக் கிடைக்காதல்லவா? அப்படியிருக்க, எல்லாருக்கும் நாயகனும் சர்வவல்லமையுடையவனுமுள்ள ஈஸ்வரனுடைய நட்பை நாடி அதனை வளர்ப்பதற்கான உபாயங்களை மேற்கொண்டால், எல்லாச் சித்திகளையும் நாம் அடைதல் கூடுமென்பதற்கு ஐயமின்று. ஆதலால், கடவுளைத் தந்தையாகவாவது அல்லது தோழனுகவாவது அல்லது எஜமானனுகவாவது பாவித்து, அதனுல் ஏற்படும் சம்பந்தத்தால் அவரை அன்போடு அடைவோமாயின், இகத்திலும் பரத்திலும் நமக்கென்ன பயம்? மேற்சொன்ன சம்பந்தங்களில் எதையாவது ஒன்றைக் கற்பித்துக்கொண்டு அதற்கியைந்தவாறு கடவுள் விஷயத்தில் முமுக்ஷுவானவன் நடந்து கொள்ளல்வேண்

டும். இஃதவனுக்கு இன்றியமையாததாம். எல்லா ஜனங் களுக்கும் எக்காலத்திலும் கடவுளிடங் கொண்ட பிரே மையே இரக்ஷகமாகும்.

வினா:—ஈஶ்வரன் சர்வ வல்லமையுடையவ ராகையா லும், பூமண்டலாதிபதிகளுக்கு எல்லாச் சம்பத்தையும் அளிப்பவராகையாலும், இந்திராதி தேவர்களுடைய உயர் பதவியையும் அளிக்கின்றவராகையாலும், அத்தன்மைய புமானைப் பாமர ஜனங்களும் வழிபட்டு வருதல் வேண்டும்; வந்தால், அவர்களுக்குக் குறைவு ஒன்றும் நேரிடாது என்று சொல்லுகிறீர். இந்த அனுகூலங்களுக்காக, கடவுளிடங் கொள்ளும் அன்பு நிஜ அன்பு ஆகுமா? கடவுளைக் கடவுளுக் காகவே நேசிக்கும்அன்பு இல்லையா? அந்த ஸ்தாயையிலுள்ள பக்தர்களும் உண்டோ?

விடை:—நீ கேட்ட கேள்வி எனக்கு மிகச் சந்தோ ஷத்தைத் தருகின்றது. பக்தி என்னும் ரஸத்தை நீ நன்கு பானம் செய்திருக்கிறாய்; இல்லாவிடில், இவ்விதமாய சங்கை உன் மனதில் உதியாது. எப்பயனையும் விரும்பாத பக்தி நிலைமையுமுண்டு. மேல் விவரித்துக்கூறிய பக்தன் சாஸ்வதமான ஆநந்தத்தை விரும்பி அஃதாவது முத்தியை விரும்பி உடல், பொருள், ஆவி ஆகிய இம்மூன்றன்மீ திருக்கும் அன்பைக் கடவுள்வசம் திருப்பித் தனது அபீஷ் டத்தை அடைகிறான்; மோக்ஷத்தை யடைந்து பகவானு டைய குணானுபவத்தில் சாஸ்வதமாய் ஈடுபடுந் திறனையும் பெறுகிறான். இந்தப் பக்தன் தன்னைக் குற்றங் குறைவு உடையவனாக எண்ணிக் கடவுளுக்குப் பராதீனனாகின்றான்; தனது நிஜஸ்வரூபம் சச்சிதாநந்தமென்றும், தன்னிடத் துக் குற்றங் குறைவுகள் இல்லையென்றும் ஓர்கிலன். தமது நிஜஸ்வரூபம் சச்சிதாநந்தமென்று தெரிந்துகொண்டு பிர

பக்தி செய்யும் பக்தர்களுமுண்டு. இவர்களுடைய பக்தியைப் பராபக்தி என்பர். இவர்களுக்குக் கடவுளிடமிருந்து பெறவேண்டியது ஒன்றுமில்லை. அவர் "எனக்கு இது வேண்டும்; அதுவேண்டும்," என்று இரந்து கேட்கும் தன்மையரல்லர்; கடவுள் உருவமுடையவரா, அருவமுடையவரா, சர்வஞ்ஞரா, அல்லவா என்று தெரிந்துகொள்ளும் அவாவுடையவருமல்லர்; ஈஸ்வரன் உயிருக்கு உயிராகவும், உயிரினுக்கும் இனியராகவும் இருக்கும் பண்புடையவர் என்று சாக்ஷாத்கரித்து அவருக்கு அன்பைக் கொடுக்கும் சுபாவமுடையோரா யிருப்பரேயன்றி அவரிடமிருந்து ஒன்றை எதிர்பார்க்குந் தன்மையருமல்லர். ஆகவே, பராபக்தன் குற்றங் குறைவு அற்றவனும் தன்னைக் கண்ணுறுதலும் அல்லாமல், ஈகைபாளியாகவும் இருக்கின்றான். இவனெது போன்றவனுவனெனின், அது கூறுவாம்:—தண்ணீர் நிறைந்துள்ள குடம் இன்னும் தண்ணீர் கொள்ள இச்சியாமல், தன்னுள் தானே திருப்தி பொருந்தி வேறொரு கையை எதிர்பாராதிருக்கின்றது; ஆனல், வற்றாத நீரூற்றோ அங்ஙனமன்று; தன்னிடத்தில் தனக்கு வேண்டிய நீரிருந்த போதிலும், உபகார நிமித்தமாக உலகோர் உஜ்ஜீவிக்கும் வண்ணம் பொங்கி வழிந்துகொண்டிருக்கும். பராபக்தன் இந்நீரூற்றுப்போல்பவனுவன். ஆகையினுல், இந்தப் பக்தன் தனது சுகானுபவத்துக்கு மாத்திரமல்லாது தனது உயிரினுமினிய ஈஸ்வரனுக்காகவும் அவரைச் சார்ந்தவர்களுக்காகவும் உயிர் வாழ்ந்திருப்பனென்பதை நீ அறிவாயாக.

வினு.—இவ்விதப் பிரேமை எப்படி ஜனிக்கும்? பராபக்திக்கு ஹேது யாது?

விடை:—ஒருவன் தன்னையும் தனது குடும்பத்தையும் இன்னும் மற்றக் கிளைஞர்களையும் கஷ்டமில்லாமல் காப் பாற்ற வேண்டுமானல், ஐஸ்வரியவானு யிருத்தல் வேண் டும்; பந்துமித்ர களத்ராதியர்கள்பாலன்றி மற்ற எல்லாரி டத்தும் தர்மசிந்தனையா யிருத்தல்வேண்டுமானல் அவ னிடத்திருக்கும் ஐஸ்வரியம் அவனுக்குப் போதாது; மட்டில்லாத ஐஸ்வரியமிருந்தாலொழிய மட்டில்லா ஜனங் களைக் காப்பாற்றுதல் இயலாது. அவன் சாமானிய ஐஸ்வரிய வானு யிருந்தால் அஃது அவனுக்குப் போதுமா? போதாது. ஆகையினல், கடவுள் விஷயத்தில் நிஜ அன்பு உடையவனுவ தற்கு ஒருவன் தனது நிஜஸ்வரூபத்தை இன்னதென உணர்தல் வேண்டும்; அஃதாவது, யான் குறைவற்ற நிறைவு உள்ளவன், பசியால் பீடிக்கப்பட்டவனல்ல, தாகத்தால் வருந்தக் கூடியவனல்ல, துவந்துவங்களுக் கதீதப்பட் டவன் என்று ஓர்ந்து உணருதலாம். இஃது இன்றியமையாத தாகும். எல்லா விஷயத்திலும் பூரணத்தன்மை வாய்ந்த ஆன்மா நான் என்று ஆத்மாவைச்சாக்ஷாத்கரித்த பின்னரே அவனிடத்தில் நிஜஅன்பு ஜனிக்கிறது. ஆத்ம சாக்ஷாத்காரத் தால் யான் எக்காலத்தும் ஆநந்த சுபாவமுடையவனென்றும் சர்வஞ்ஞத்வ முடையவனென்றும் ஸ்வானுபவத்தில் அவன் ஓர்கின்ருன். இந்த ஆத்மசாக்ஷாத்காரம் சாந்தத்தையும், விஸ்ராந்தியையும், உலகவிஷயத்தில் உபேக்ஷையையும் விளை விக்கின்றது. இதனுல் அவனுக்குத் தனது நிஜநிலை, காலதேச வஸ்து பரிச்சேதரகிதமான தென்பது கரதலாமலகமெனத் தோன்றும். அச்சமயத்தில் பக்தனுனவன் தனக்கு வேண் டிய யாவும் தன்னிடத்திலேயே இருக்கின்றன வென்பதுணர் ந்து தன்னில் தானே திருப்தி யடைகிருன்; வெளிமுகம் செல்லும் அவா அற்று இருக்கிருன். அக்காலத்தில் மற்ற

வர்களைப் பற்றிய எண்ணம் அவன் மனத்தில் அற்றுப் போகின்றது ; ஏனெனின் தன்னையன்றி வேறொருவரையும் அவன் காணுமையினல். அந்த நிலைமையில் அவனது ஞாதரு-ஞானம்-ஞேயம் (அஃதாவது அறிவான், அறிவு, அறிபடுபொருள்) ஆகியஇம்மூன்றும் சாஸ்விதமாய்ச் சர்வாநந்த மயமாயுள்ள உணர்வு (அஃதாவது சம்வித்) என்பதில் இரண்டறக் கலந்து விடுகின்றன. இதனையே குறைவற்ற நிறைவு என்றும், மோக்ஷம் என்றும் முக்தியென்றும் கூறுவர். ஆனல், இவ்விதமாகத் தங்களுள் தாங்களே திருப்தியடைந்து, பந்தமற்றவர்களாய், கற்றற்குரிய யாவையும் கற்று, மௌன நிலையையடைந்து, வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற்பட்டுள்ள சர்வலோகநாயகனுகிய புமானிடத்தில் தன்னயம் பாராட்டாமல் முக்தபுருஷர்கள் அன்பு செலுத்துகிறார்கள். பக்தர்களை இவ்விதம் நமதுவசஞ்செய்துகொள்ளுகிறுர்—பரமகாருண்யரான ஈஸ்வரன். "அவருடையவசியம் தடுக்கொணுதது" என்று ஸ்ரீமத் பாகவதபுராணம் கூறுகின்றது. ஆகையினல், பக்தி மார்க்கம் வெகு சுலபமானது; ஸ்ரேஷ்டமானது; சுலபமாய் அனுஷ்டித்தற் குரியது என்பது இப்பொழுது உனக்கு நன்ருகப் புலப்படல் வேண்டும்.

வினு:—பராபக்தியின் தன்மையைக் கேட்கக் கேட்க எனக்கு மட்டில்லாக் களிப்பு உண்டாகிறது; அஃது இத் தகைய பக்தியும் இருக்கின்றதல்லவா என்று வியப்படையச் செய்கிறது ? எல்லாரையும் விட ஞானியே சிறந்தவனென்று யான் கூறக் கேட்டிருக்கிறேன். பராபக்தியுடையவனும் ஞானியைப்போலத் தனது நிஜஸ்வரூபம் கடவுளுடைய ஸ்வரூபத்திற்குச்சமமாமென ஸ்வானுபவத்தில் உணர்ந்து சச்சிதாநந்த நிலையை யடைந்து மௌனமுறுகிறுன். இஃதன்றியும் அவன் கடவுள்மேல் பிரேமையைச் செலுத்து

கிறுன் என்று கூறுகின்றீர். பூரண ஞானமடைந்தபின் அன்பு செலுத்துவதற்கிடமேது ? மௌனமுற்றபின் அன்பாகிய கிளர்ச்சிக்கு ஸ்தானமேது?

விடை:—பூரண ஞான நிலையை யடைந்த பின்னர், இது செய்பலாம், இது செய்தல் முடியாது என்று சொல்வதற்கிடமில்லை; ஏனெனின், அந்நிலை விதி நிஷேதங்கள் கடந்த நிலை. இவ் விஷயத்தை முன்னொருதரம் விவரித்துக் கூறி யிருக்கிறேன். அதைக் கவனத்திற்குக் கொண்டுவர முயலல்வேண்டும்.

வினா:—மேல் விவரித்தபடி பராபக்திநிலையை யடைந்தோருள் யாராவது ஒருவர் அன்பு செலுத்தியிருக்கின்றனரா? உளரேல், எடுத்துக்காட்டல் வேண்டும். அவரது சரித்திரத்தை எங்குக் காணலாம்.

விடை:—பிருந்தாவனத்தில் கோபிகள் ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் காண்பித்த அன்பை ஆராய்ச்சி செய்து பார்க்கில், அது மிக சொச்சமாய்த் தோன்றும். அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து ஏதோ ஒன்று பெற வேண்டுமென்னும் இச்சையால் அவன் சாங்கத்தியத்தை விரும்பினரென்பது தோன்றவில்லை. கிருஷ்ணனாகிய குழந்தை பிருந்தாவன வாசிகள் யாவருக்கும் அத்தியந்தப் பிரியனாக இருந்தான். யசோதாபிராட்டி அந்தக் குழந்தைக்கு அதிக சிரேஷ்டமான பொருளை அதிக அன்புடன் அளிப்பாள். இடைப்பிள்ளைகள் தாங்கள் பொறுக்கின பழங்களை மிகப் பிரீதியுடன் அந்த ஸ்ரீகிருஷ்ணனாகிய தங்கள் தோழனுக்குக் கொடுப்பார்கள். ஸ்ரீகிருஷ்ணன் இடைப்பிள்ளைகளோடு கூடிக்குலாவி வாழ்ந்த சரித்திரத்தை ஸ்ரீ வியாசபகவான் ஸ்ரீமத் பாகவதத்தில் தசமஸ்கந்தத்தில் மிக விஸ்தாரமாய்க்

கூறி யிருக்கின்றார். அதனைப் பாரபக்ஷமின்றிக் கவனித்து வாசித்தால் பிரேமை இன்னதென்பது நன்கு விளங்கும். சாக்ஷாத்நாராயணனே ஸ்ரீகிருஷ்ணன் வடிவங்கொண்டு கோபாலகர்களுக்கும் இடைப்பிள்ளைகளுக்கும் தம்மை அதிக தாழ்ந்தவராகக் காண்பித்துக்கொண்டு அவர்களுடன் குலாவி விளையாடினாரென்றால், அவரது பிரதாபத்தை என்னென்றுரைப்பது? சேவாநிரந்தராயிருக்கும் தமது பக்தர்களை இரந்து கேட்பவராக வியாசபகவான் ஸ்ரீ கிருஷ்ண பகவானை வர்ணித்திருக்கிறார். சர்வஞ்ஞராகிய பகவான் தவறுகள் செய்கிறவர் போலவும் அத்தவறுகளை அவரது பக்தர்கள் திருத்துகின்றவர் போலவும் ஸ்ரீ கிருஷ்ணனை பாலகன் வர்ணிக்கப்பட்டிருக்கிறார். இத்தகைய அன்பு, பிருந்தாவனத்தில் தவிர வேறெங்கும் காணப்படமாட்டாது. இந்தப் பிருந்தாவனத்தில் ஸ்ரீகிருஷ்ணன் மேல் பிரீதி வைத்திருந்தயாவரும் ஸ்ரீ கிருஷ்ணனிடமிருந்து யாதொன்றையும் பெற்றுக்கொள்ள விரும்பினாரல்லர். இப்படிப்பட்ட அன்பல்லவா பராபக்தி எனப்படும்! இதைத்தான் யாவரும் அடைய விரும்புதல்வேண்டும். இந்தப் பிரேமை மனிதனுடைய லக்ஷியார்த்தமா யிருத்தல்வேண்டும். மனிதனுடைய நிஜஸ்வரூபம் சச்சிதாநந்தமென்று மாத்திரந்தான் ஞான சாஸ்திரம் நமக்குப் போதிக்கின்றது. பராபக்தியோ எனின், ஞானத்தைக் கற்றுக்கொடுப்பதோடு மாத்திரம் நில்லாது, பக்தனைப் பகவானுடன் விளையாடவும் செய்கின்றது. அவாங் மானசகோசர நிலையை எய்தினவனல்லவா அவாங்மானசகோசர வடிவினராகிய ஈசுவரனுடன் விளையாடுவதற்கு அருகனான தோழனாவன்?

வினா:—பராபக்தியில் ஈடுபட்ட பக்தன் ஈசுவரனுடன் விளையாடுகிறான் என்றபோது, ஈசுவரன் உருவுடையோனாக

வல்லவா அவனுடன் விளையாடல் வேண்டும்? அகண்ட வடிவினையுடைய ஈசுவரனுடன் விளையாட, தனது நிஜஸ்வரூபத்தை அகண்டமாகச் சாக்ஷாத்கரித்த பக்தனல்லவா அருககுனவன்? ஆதலால் இவ்விரண்டு விடைகளும் முரணுகின்றன. இவைகளைச் சமரசப்படுத்துவது எப்படி?

விடை:—ஈஸ்வரன் அகண்ட சச்சிதாநந்த வடிவினராயிருத்தல் அவரது சுபாவமாகும்; அஃதாவது அருவமாயிருத்தல்அவரது சுபாவமாம். ஆகையால், ஈசுவரன் அருவமாயிருக்கிறார் என்றால், அதில் அவருக்கு என்ன பிரதாபமுண்டு? அருவமாயிருப்பவர் தமது பக்தர்கள் நிமித்தம் உருவமெடுத்தல் அவருக்கு எத்தனையோ மடங்கு அதிகப் பிரதாபத்தைத் தருமல்லவா? ஈஸ்வரன் தமது உன்னதநிலையிலிருந்து பக்தர்கள் கண்டு களிக்கும் வண்ணம் தாழ்ந்த நிலைக்கு வந்து ஊண் - உறக்கம் - பேருராதி ஒவ்வப் பக்தர்களைப் போன்ற உருவங்கொள்ள இசைவது, அவரது பெருந்தன்மையைக் காட்டுகின்றதல்லவா ? அவரைச் சுபாவ நிலையை விடும்படி செய்து, மனிதர் போன்ற உருவங்கொள்ளச் செய்த சக்தி, அவரது சுபாவ சக்தியைவிட மேலான சக்தி யென்று கூறவும் வேண்டுமோ? அந்தச் சக்தி யாதெனின், பக்தர்களுடைய பிரேமையேயாம்; அஃதாவது அன்பேயாம்.

வினா:—ஹிந்துமதம் ஒன்றுதான் கடவுளை உருவத்தோடு உபாசிக்கலாமென்று போதிக்கிறது; வேறெந்த மதமும் இப்படிக் கூறுவதில்லை. புறமதஸ்தர்கள் ஹிந்துக்களை விக்கிரஹ ஆராதனை செய்பவர் என்று இகழ்ந்து கூறுகின்றனர். அசேதன வடிவமாகிய விக்கிரகங்களைச் சேதனனானவன் தொழுகிறான் என்றால் அது நகைப்புக்கும் அவமானத்துக்குந் தானே இடமாயிருக்கின்றது?

விடை:-புறமதஸ்தர்கள், கடவுளுடைய ஸ்வபாவத்தை அறிய விரும்பித் தங்களுடைய தத்துவ சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து ஈசுவரன் விபு என்று தெரிந்துகொண்டு, அவ்விதமான பாவனையோடு அவனை உபாசிக்கிறார்கள். கடவுளை விபு என்றும், சர்வவல்லமை யுள்ளவரென்றும், சர்வஞ்ஞரென்றும், பரமகாருண்ய புருஷரென்றும், அவர்களுடைய தத்துவசாஸ்திரம் போதிக்கின்றது. ஈஸ்வரனை அறிதற்கு, அவர்கள் தங்கள் தத்துவ சாஸ்திரத்தின் உதவியை நாடுவதால், ஈசுவரன் உருவத்துடன் காட்சிகொடுக்க வல்லவர் என்பது அவர்களுக்குத் தெரியாது; தெரிந்துகொள்ள முயற்சி செய்தாலும் அவர்களுக்கு அது சித்தியாகாது. அவர்கள் தமது தத்துவசாஸ்திரம் என்ன கூறுகிறதோ அதைத்தவிர வேறொன்றையும் அங்கிகரிக்கும் மனப்பண்புடையவர்களல்லர். சற்று யோசித்துப் பார்த்தால் அவர்களுடைய கொள்கை முற்றிலும் சரியல்லவென்பது விளங்கும். ஈஸ்வரன் சர்வ வல்லமையுடையவர், சர்வஞ்ஞர், கிருபாமூர்த்தி என்பதைப் புறமதஸ்தர்கள் யாவரும் அங்கீகரிக்கின்றனர். இவ்வளவு சக்திகளுள்ள ஈசுவரன் எத்தருணத்திலும் உருவமாகவும் அருவமாகவும் அன்பர்க்குக் காட்சி கொடுக்கச் சக்தியற்றவராகவா இருப்பர்? ஈஸ்வரனுடைய மாயாசக்தியை யாரால் ஆராய்ந்து அறிதல்கூடும்? இந்தச் சக்தியைக் கொண்டு அவர் தம்மை உருவமாகவும், அருவமாகவும், இவைகளுக்கு வேறாகவும் காட்டிக்கொள்ளலியலாதோ? இந்தச் சக்தியின் மூலமாக ஒன்று பலவாகவும், அகண்டவஸ்து கண்டவஸ்துவாகவும் தோற்றுகின்றன. இந்தச் சக்தியைச் சர்வலோகங்களுக்கும் காரணமான பிரகிருதி யென்றும் அழைப்பர். இந்தச் சக்தி ஈஸ்வரன் வசம் இருப்பதால், அவரை மாயாதீதன் என்று ஆன்றோர் கூறுவர்.

இம்மாயையை நீக்கிப் பார்க்கில் ஈஸ்வரன் சாஸ்வதமானவனுக வும் மாருப் புருஷனுகவும் காலதேச வஸ்து பரிச்சேத ரகித னுகவும் இருப்பது விளங்கும். ஆகையினல், பக்தர்களுக்காகக் கடவுள் அநேக உருவங்களை வகிக்கலாமென்பது பெறப்படுகி றது. ஹிந்துக்கள் கடவுளை ஆராதிக்கும் விதம் ஏனைய மதஸ்தர்களின் புத்திக்கு எட்டுவதில்லை; அதனுல்தான், அவர் கள் ஹிந்துக்களை விக்கிரக ஆராதனை செய்பவர் என்று இகழ்ந்து கூறுகின்றனர். உருவ உபாசனையே அதிக சிரேஷ்டமான ஆராதனையாகும்; ஏனெனின், அவ்வித ஆரா தனையினுற்ருன் பராபக்தி இன்னதென்பதை ஸ்வானுபவத் தில் உணருதல் கூடும்.

வினு:—ஏனைய மதஸ்தர்கள் கடவுளை அருவமாகப் பாவித்து இறைஞ்சுங்கால், அவர்கள் கடவுள்மேல் அன்பு செலுத்துவதில்லை யென்று சொல்லலாமா?

விடை:—அவர்களுக்குக் கடவுள்மேலிருக்கும் அன்பு காம்ய அன்பாகும். அவர்கள் கடவுளை ஆராதிக்குங்கால் "சாப்பாடு கொடும்; பாவத்தை நீக்கி அருளும்; நல்வழியில் நடக்கச் சக்தி கொடும்" என்று இவ்வாருகப் பிரார்த்தனை செய்கின்றனர். இது வேண்டும் அது வேண்டும் எனக் கடவுளைப் பிரார்த்திப்பது அவருக்கு வழக்கமாயிருக்கிறது. இது பிச்சை யெடுப்பதை யொக்கும். இவர்கள் அன்பு நிஜ அன்பாகாது. ஹிந்துக்களாகிய நாம், இரப்போராக இருப் பதற்கு, நமது மூதாதைகளுக்கு எள்ளளவும் விருப்பமில்லை. தேவாலயத்திலாவது கோயில்களிலாவது அல்லது மசூதி களிலாவது "இதுவேண்டும்; அதுவேண்டுமென" விண்ணப் பம் செய்துகொண்டு கடவுளைப் பிரார்த்தித்து வந்தால், நீ கட வுள் மேல் அன்பு செலுத்துகிறவனுகாய். கடவுளைக் கடவு ளுக்காகவே நேசித்தலல்லவா நிஜ அன்பாகும்?

வினு:—இவ்வித அன்பைப் பாமரர்களிடத்து எப்படி எழுப்புவது? இதற்கு ஹிந்துக்கள் யாதொரு உபாயமும் செய்யவில்லையா?

விடை:—சிலர் ஈஸ்வரனை விஷ்ணுவாகவும், சிலர் சிவனுகவும், சிலர் ஸ்ரீராமச்சந்திரனுகவும், சிலர் ஸ்ரீ கிருஷ்ணனுகவும், சிலர் இவைபோன்ற இன்னும் வேறு சில மூர்த்தங்களாகவும் சாக்ஷாத்கரித்திருக்கின்றனர். முற் கூறியபடி பக்தர்களுடைய பிரேமையானது நிராகார ஈஸ்வரனை ஆகாரமாகத் தோன்றும்படி செய்கின்றது. பக்தர்மேல் உள்ள காருண்யத்தால் ஈஸ்வரன் பல திருமேனிகளைக் கொண்டருளி யிருப்பதால், அத் திருமேனிகளை மனிதன் ஏன் வழிபடுதல் கூடாது? ஈஸ்வரனிடத்துத் தோழன் என்னும் சம்பந்தத்தையாவது எஜமானன் என்னும் சம்பந்தத்தையாவது கற்பித்துக்கொண்டு அச்சம்பந்தத்திற்குரிய ஒழுக்கத்தில் அமர்ந்து அவரை வழிபடல் வேண்டும். "அவருக்கு ஒரு வீடு ஏற்படுத்திவைப்போம். தோழனுக்கு அல்லது எஜமானனுக்கு எது எது அபிப்பிராயமோ அதை அதைக் கொடுப்பதுபோல, கடவுளிடத்திருந்து ஒன்றும் எதிர்பாராமல் அவருக்கு எது எது பிரீதியோ அதை அதைக் கொடுக்கச் சித்த முடையவர்களா யிருப்போம்." இவ்வித ஆராதனை சார்பாக விளையும் சுத்த அன்பானது, எப்பொழுதும் நல்ல பயனைத் தரும். இந்த உருவ உபாசனையினுற்றுன், பாரத மாதாவிற்கு மக்களாக ரிஷிகளும் மஹான்களும் உளராயினர். கௌரங்க தேவரும், அவரடியிற்றோன்றிய சீடர்களும் இவ்விதத் தெய்வத்தன்மை வாய்ந்த உருவ உபாசகர்களாகவே இருந்தனர். தென் இந்தியாவில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் அர்ச்சக விக்கிரகத்தைத் தொழுதே ஞானதைப் பெற்று மஹான்களாயினர். தற்காலத்